அறிவோம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

பூர்வத்தமிழொளியாம்

# புத்தரது ஆதிவேதம்.



இஃது,

பௌத்ததன்மப் பாலிப் பிரிதிகளைக்கொண்டும்,

தமிழ்ப்பிரிதிகளைக்கொண்டும், பாரம்பரை சுருதிவாக்கியங்களைக்கொண்டும்

சென்னை சாக்கைய பௌத்த சங்கஸ்தாபகரும்

பொதுக்காரியதரிசியும்

"தமிழன்" பத்திரிகையின் அதிபருமாகிய

க. அயோத்திதாஸப் பண்டிதரால்

எழுதி

மாரிதுப்பம், சாக்கைய பௌத்தசங்கத்து

சபாநாயகர்

M. Y. முருகேசர் சாஸனதாயகா

சங்கத்தின் காரியதரிசி

C. குருசுவாமியார் சாஸனதாயகா

இவ்விருவர் பேருதவியால்

சென்னை

கௌதம வச்சியந்திரசாலையிற் பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை ரூபாய்—3½.

பௌத்த வருடம் 3398.] [கிறிஸ்து வருடம் 1912.

சரித்திர

# அட்டவணை.





—:(*):—



PANDIT C. IYODHI DOSS,

The First Indian Buddhist Revivalist, the Founder of South India Sakya Buddhist Society and the Editor of the "TAMILIAN."

# பாயிரம்.

சற்குருவேநம:.

தாயுற மாட்டே தாணியென் றோம்புங்
கோயிறை தெய்வப் புலவர் கொண்டாடு
மாயிர நாமத் தாழியன் சரிதை
பாயிர மிங்குப் பகருவம் யாமே.

மலர்கலியுலகத்து * 1616 சித்தார்த்திஸு மகதநாட்டுத் தலைத் தார்வேந்தர்களாக வழங்கிவந்த † கலிவாகு, வள்ளல்வாகு, சோகுவாகு, மாமதிவாகு, சுந்திரவாகு, அங்கணவாகு, குலவாகு, இட்சுவாகு, வீரவாகென்னும் சக்கிரவர்த்திகளின் வம்மிஷவரிசையில் ‡ மண்முகவாகென்னும் சக்கிரவர்த்திக்கும், மாயாதேவியென்னும் இராக்கினிக்கும் மகவாகத் தோன்றி தனது பேரானந்த ஞானத்தால் ஒலிவடிவிலிருந்த மகடபாஷையை வரிவடிவாக்கி சகலமக்களுக்கும் சகடபாஷையையுந் திராவிடபாஷையையுமருளி நீதிநெறியொழுக்கங்களிலமைத்து ‖ எண்ணருஞ் சக்கரவாள மெங்கணு மரிய சங்கங்களை நாட்டி சகல கலைக்கியானங்களையு மூட்டி தனது தந்தைக்கே குருவானதுபோல் உலகத்தில் தோன்றியுள்ள சகல மதங்களுக்கும் போதனபீடமாகவும், உலகரட்சகனாகவும், ஜெகத்குருவாகவும் விளங்கிய வொப்பிலா அப்பன் புத்தரது சிறந்த சரித்திரத்தையும், அவரது அளவுபடா ஞானபோதத்தையும், அதனால் மனுக்களடைந்த வானந்த சுகத்தையும் எனது நாவினாற் கூறுதற்கும் கரத்தால் வரைவதற்கும் அசக்தனாயினும் கூடியவரையில் எமதுகுலமரபோரிடத்து சிதலுண்டது நீங்கி யெஞ்சிய நூற்களாகும் அருங்கலைச்செப்பு, அறநெறிச்சாரம், நிகழ்காலத்திரங்கல், மணிமேகலை, சீவகசிந்தாமணி, சூளாமணி, சிலப்பதிகாரம், திரிக்குறள், திரிமந்திரம், திரிகடுகம், யாப்பருங்

---

* மணிமேகலை.—இருள் பரந்து கிடந்த மலர்கலியுலகத்து, விரிகதிர்ச் செல்வன் றோன்றின னென்ன; வீரெண் ணூற்றொ டிரெட்டாண்டினில், பேரறிவாளன் றோன்றி. மகத னன்னாட்டுக் கொருபெருந் திலசமெண். சாக்கைய ராளுந் தலைத்தார் வேந்தன், ஆக்கையுற் றுதித் தன னுங்கவன் றானென.

† பெருந்துறவந்தி.—(குலமுறை சிறப்பு) குலமுறையிற் கலிவாகு நிலவரை யீதம்மே - நிலவரை யீதம்மே, பலவறையிற் கணிதாதி பார்த்தறிந்தோ னம்மே.

பார்த்தறிந்து சாக்கையெனும் பெயர் வாய்ந்தோ னம்மே - பெயர் வாய்ந்தோ னம்மே, மூர்த்தியவன் குலத் தோன்றல் வள்ளல்வா கம்மே

வள்ளல்வா குன்வரிசை வாகுவல்லனம்மே - வாகுவல்லனம்மே, துள்ளுதார்வேந்தன்குல சோகுவா கம்மே.

சோகுவாகின் சுதத்தை சொல்லொணாதம்மே - சொல்லொணாதம்மே, வாகு மன்னரையடக்கு வல்லவன் காணம்மே.

வல்லவன் குலத்திலக மாமதிவாகம்மே - மாமதிவாகம்மே, சொல்லொணா சுந்திரவா கவன்றோன்றலம்மே.

அவன்மகவை அங்கணவா கதிவல்லனம்மே - அதிவல்லனம்மே, புவன மன்னவர் போற்றும் புரவலனெ னம்மே.

புரவலன்றன் குலமரபோன் குலவாகு அம்மே - குலவாகு அம்மே, இரமா போன் தோன்றலதி இட்சுவாகம்மே.

இட்சுவாகின் சுதத்தை யெண்ணொணாதம்மே - எண்ணொணா தம்மே, அச்சமற வாளுமதி வேந்தனவனம்மே.

வேந்தன் மகத் தார்வேந்தன் வீரவாகம்மே - வீரவாகம்மே, எந்தலொன்பான் மேலோன் மண்முகவா கம்மே.

மண்முகவா கீன்றமைந்தன் சித்தார்த்தரம்மே - சித்தார்த்த ரம்மே, அண்ணலவன் ஆதியந்த மரைகிறேன்கேளம்மே.

‡ பின்கலை நிகண்டு.—மண்முகன்மாயாதேவி சுதனசளங்கமூர்த்தி.

‖ மணிமேகலை.—எண்ணருஞ் சக்கரவாள மெங்கணும், அண்ணலறக்கதிர் விரிக்குங்காலை,

களை, திரியறக்கலை செய்யுட்களைக்கொண்டும் சமண முநிவர்களில் சித்தி பெற்றோராகும் சித்தர்களா லியற்றியுள்ள சித்து நூற்களின் ஆதாரங்களைக் கொண்டும் சாக்கைய வம்மிஷவரிசையோர் தங்கடங்கட் கர்ணபரம்பரையால் வழங்கிவந்த கருத்துகளைக்கொண்டும் சென்னை சாக்கைய புத்தசங்கத்திற்கு வந்திருந்த மாண்டலே, யு. சாந்தவாராவென்னும் சமண முநிவராலும், ஹோரண்ணு சிலோன், யு. வினயலங்காரா வென்னும் சமண முநிவராலும், மோல்மென், யு. பிரக்ஞாவென்னும் சமண முநிவராலும், என்சடா யு. தேஜோவன்ஸா வென்னும் சமணமுநிவராலும் பாலிபாஷையிலுள்ள அபிதம்மத சங்கஹ, பட்டானு, தம்மசங்கினி, சம்யுத்தகத்தா வென்னும் தன்ம நூற்களை மொழிபெயர்த்தும், அறவாழி யந்தணனது திவ்விய சரித்திரத்தை கலியுலகம் 500 வரு புத்தர் பிறந்த 3393வரு கிறிஸ்து பிறந்த 1907வரு மகம்மது பிறந்த 1225வரு நமது தமிழன் பத்திரிகையில் வெளியிட வாரம்பித்து நாளதுவரையில் வெளியிட்டுள்ள சரித்திர நீதிநெறி யொழுக்கங்கள் யாவையும் புத்தக ரூபமாகத் திரட்டி வெளியிட்டுள்ளோம்.*

இதனுள் அடங்கியுள்ள சரித்திரங்களும், நீதிநெறி யொழுக்கங்களும், ஞானசாதனங்களும், அதனதன் பலன்களும் ஓதாம லுணர்ந்த முநிவன் கண்டளித்த, பிறப்புப் பிணி மூப்பு சாக்காடென்னும் நான்கு வாய்மெகளும், பிறப்பை ஜெயித்து பிணியை ஜெயித்து மூப்பை ஜெயித்து மரணத்தை ஜெயித்து நிருவாணமுற்ற துக்கநிவர்த்தியும், அதன்பின் இருபிறப்பாளனுகி சோதிமயமாக மாற்றிப் பிறக்கும் பூரணானந்தமாம் பரிநிருவாணமும் சாதனமற்ற அன்னியமதத்தர்களால் வரைந்துவைத்துள்ள பௌத்தநூற்களுக்கு மாறுபட்டே நிற்கும்.

அதாவது பாலிநூற்களிலிருந்து மொழிபெயர்த்ததினு லுண்டாம் பேதங்களும், செய்யுட்களிலிருந்து பொருள் பிரித்த பேதங்களும் இத்தேசத்திற்கு வந்துள்ள யாத்திரைக்காரர்வசம் எழுதியளித்துள்ள பேதங்களும் போனந்த புத்ததன்மத்திற்கு மாறுதலடைந்து பலவகையாய சந்தேகத்தி லாழ்த்தி திகைக்கவைத்திருக்கின்றது

அத்தகையத் திகைப்புகளுக் காதாரம் பாலிபாஷையின் மொழிபெயர்ப்பேயென்ப தெவ்வாறெனில்: சக்கிரவர்த்தித் திருமகன் சித்தார்த்தியார் பிணியாளன் துக்கத்தையும், மூப்பின் துக்கத்தையும், மரண துக்கத்தையுங் கண்டு சகியாது இத்தகைய துக்கத்திற்கான எதிரடை சுகம் ஒன்றிருத்தல் வேண்டும். அதைக்கண்டடைவதே மானுஷிகதன்மமென்று சகல ராஜபோகங்களையும் விட்டுத் துறவடைந்து சகல பற்றுக்களு மற்று பேரானந்தமுற்று அரசமரத்தடியில் நிருவாணம் பெறவுக் *காமனையுங் காலனையும்வென்று பிறவியின் துக்கத்தையும், பிணியின் துக்கத்தையும், மூப்பின் துக்கத்தையும், மரண துக்கத்தையும் தானே செயித்து பரிநிருவாணமுற்று பரமானந்தத்தி லிருப்பதுடன் தனது சங்கத்தோர்கள் யாவருக்கும் அநகான்குவகை சத்தியதன்மங்களையூட்டி பிறப்பு, பிணி, மூப்பு சாக்காட்டினு லுண்டாந் துக்கங்களை ஜெயிக்கச் செய்ததுடன் நாளதுவரையிலும் அவற்றை ஜெயிக்கத்தக்க சங்கங்களை நாட்டி சாதனைகளையும் அநுஷ்டிக்கும்படிச் செய்திருக்கின்றார்.

* வீரசோழியம். — காமனை கடிந்தனை காலனை காய்ந்தனை.

மணிமேகலை. — காமற் கடந்த வாமன் பாதம்.

அத்தகைப் பெரியோனது ஞானவழியிற் செல்லாதவர்களும் அவனது சாதனத்தில் நில்லாதவர்களும் அனந்தம்பேருண்டு. அவற்றுள் ஞானவழியும் ஞானசாதனமுமில்லாதவர்கள் பாலிபாஷையையும் ஆங்கில பாஷையையுங் கற்றுக்கொண்டு மொழிபெயர்ப்பதாயின் ஞானசாதன சக்கியங்கள் விளங்காது தாங்க ளடைந்துவரும் பிறவியின் துக்கத்தையும், பிணியின் துக்கத்தையும், மூப்பின் துக்கத்தையும், மரண துக்கத்தையும் புத்தரென்னும் மெய்ய ரடைந்திருப்பாரென்றெண்ணி தங்கடங்கள் மனம்போனவாறு பன்றியி னிறைச்சியைத் தின்றாரென்றும், பேதி கண்டு தன்னாடி கடந்து வோராசமரத்தடியில் இறந்தாரென்றும் புத்ததன்மத்திற்கு எதிரடையாய அபுத்ததன்மத்தை மொழிபெயர்த்து வரைந்துவைத் திருக்கின்றார்கள்.

ஆதலின் பூர்வத்தமிழொளியுள் வரைந்துள்ள ஞானசாதன சத்தியதன்மத்திற்கும், ஞானசாதனமில்லார் வரைந்துள்ள அசத்திய தன்மத்திற்கும் பொருந்தவே பொருந்தாது.

பௌத்த தன்மத்தைச்சார்ந்த அன்னியமதஸ்தர்கள் பொருள்படுத்தியுள்ள செய்யுட்பேதங்கள் யாதெனில், ஆதிவேதம் பயந்தோய் நீ என்றும், ஆதிபங்கடவுளை அருமறை பயந்தனை யென்றும் புத்தபிரானை சிந்தித்திருக்கும் செய்யுட்களின் பொருள்பேத மறியாது வேதமென்றால் பெரிய புத்தகமென்றும், ஒரு ஆட்சைமையா யிருக்குமென்றும், வருணனை சிந்திப்பது பலவாயிரம் பாடலென்றும், இந்திரனை பூசிப்பது பலவாயிரம் பாடலென்றும், குபேரனை பூசிப்பது பலவாயிரம் பாடலென்றும் அனேகங்களை சுருதிகளா யிருந்தனவென்றும் மாறுபடக் கூறித்திரிகின்றார்கள்.

வேதவாக்கியமென்னு மொழிகள் பேதவாக்கியமென்னு மொழிகளிலிருந்து பிரிந்தவைகளாகும். அதாவது பண்டி யென்பது - வண்டி யென்றும், பாதனென்பது - வாதனென்றும், பைராக்கி யென்பது - வைராக்கியென்றும், பங்காளமென்பது - வங்காளமென்றும், பாலபருவமென்பது - வாலபருவமென்றும் திரிவதுபோல் * பேதவாக்கியங்களென்பது வேதவாக்கியங்களெனத் திரிவதாகும்.

சப்பபாபஸ்ஸ அகரணம் குசலஸ உபஸம்பதா
ஸசித்தபரியோதபனம் ஏதம்புத்தானஸாஸனம்.

என்றும் ஆதிதேவனும் புத்தபிரானால் போதித்துள்ள மூன்று அருமொழிகளையே † திரிபேதவாக்கியங்களென்றும், திரிபீட வாக்கியங்களென்றும், திரிமந்திரவாக்கியங்களென்றும், திரிசுருதிவாக்கியங்களென்றும், ‡ ஆதிநூலென்றும், எழுதாக்கேள்வியென்றும், ஆரணமென்றும், ஒத்தென்றும், சாகையென்றும், சுருதியென்றும், இருக்கென்றும், எழு பேதமொழிகளாக வழங்கிவந்தார்கள். அதன் காரணமோ வென்னில்:—

---

* திருக்கலம்பகம்.
ஓதாதுலகிற் பொருளனைத்து முடனே
யுணர்ந்தா னுணர்ந்தவற்றை
வேதாகமங்களா லேழால்
விரித்தான் விமலன் விரித்தனவே.
கோதார் நெஞ்சத்தவர் தெளியக்
கொண்டே கற்றோர் மும்மொழியை
பேதா, பேதம்; பேதமெனப்
பிணங்காநின்றோர் பிரமித்தே

† நன்னூல் பாயிரம்.—மனவிரு ளிரிய மாண்பொருள் முழுவது முனிவற வருளிய மூவறு மொழியுளுங்.

‡ பிங்கலந்தை நிகண்டு.
ஆதிநூ லெழுதாக்கேள்வி
யாரண மொத்துசாகை
யேதமில் சுருதிதன்னோ

பாபஞ்செய்யாதிருங்கள், நன்மெய்க்கடைபிடியுங்கள், உங்க ளித யத்தை சுத்திசெய்யுங்கோளென்னும் மூன்று வாக்கியங்களும் மூன்றுவகையா யிருந்தபடியால் மூன்று பேதவாக்கியங்களென்றும், உலக சீர்த்திருத்தத்திற்கு இம்மூன்று வாக்கியங்களே ஆதிபீடமா யிருந்தபடியால் திரிபீடவாக்கியமென்றும், திரிபிடக வாக்கியமென்றும், சகலகலை நீதி நூல் ஒழுக்க வாலோசினைகளுக்கும் மதியூக வாக்கியங்களா யிருந்தபடியால் திரிமந்திர வாக்கியங்களென்றும் பகவன் திருவாணமுற்று உலகமக்களுக்கு நீதிவாக்கியம் போதிக்குங்கால் வரிவடிவமாம் அட்சரங்களில்லாமல் மகடபாஷையாம் பாலிபாஷை ஒலிவடிவிலிருந்தபடியால் போதித்த மும்மொழிகள் செவிகளிற் கேழ்க்கவும் சிந்திக்கவும் தெளியவு மிருந்தது கண்டு சுருதி சிந்தனை பாவனை தரிசனமென்னும் பாலிபாஷைப்படி திரிசுருதி வாக்கியங்களென்றும், என்று மூண்டாய வந்தர் அங்கமாம் மெய்ப்பொருள் யாவாரும் வெளிப்படாது இறைவனை லோதிய எழுதாக் கேள்வியாம் முச்சுருதிவாக்கியத்தால் வெளிப்பட்டபடியால் ஆதிவேதமென்றும், முதனூலென்றும் இருக்கென்றும் வழங்கிவந்தார்கள்.

உலக சீர்திருத்த மும்மணிகளாகும் பாபஞ் செய்யாதிருங்கோளென்னு மொழியைக் கர்ம்மபாகையாகவும், நன்மெய்க் கடைபிடியுங்கோளென்னுமொழியை அர்த்தபாகையாகவும், இதயத்தைசுத்திசெய்யுங்கோளென்னு மொழியை ஞானபாகையாகவும் பிரித்து பாபஞ்செய்யாதிருங்கோளென்னும் மெய்யறநிலைக்கு இருக்கென்றும், நன்மைக்கடைபிடியுங்கோளென்னும் உட்பொருணிலைக்கு யசுரென்றும், இதயத்தை சுத்திசெய்யுங்கோளென்னும் பேரின்ப நிலைக்கு சாமமென்றும் பெயர்களையளித்து திரிபேத வாக்கியங்களென ஆதியில் வழங்கிவந்தபோது சுருதியாயதால் மக்கள் மனதிற் பதியாது சிந்திப்பதற்கும் பாவிப்பதற்கும் மறைமொழியா யிருந்தபடியால் அருங்கலைநாயகனும் அறவாழியான் கருணைகூர்ந்து வடமொழி யென்னும் சகடபாஷையையும், தென்மொழி யென்னும் திராவிட பாஷையையும் வரிவடிவா லியற்றி அட்சரங்களை

---

டிருக்கிவை யெழுர்வேதம்
வேசநூற் பொருளினுமம்
விதித்திடு ஞானபாகை
ஆதியாங் கருமபாகை
அறுத்தபாகையுமாமென்ப.
மெய்தெரி யாரணந்தான்
வேத தின் ஞானபாகை
மையலுட் பொருளினும
மற்றுப நிடதமென்ப
வைதிக வேதமுற்ற
மார்க்கமே பார்க்குங்காலை
பையமா விருக்கினேடு
பிடகமே யாதிவேதம்.
* சீவகசிந்தாமணி.

ஆதிவேதம் பயந்தோய்நீ
யலர்பெய்மாரி யமர்ந்தோய்நீ
நீதிநெறியை யுணர்ந்தோய்நீ
நிகரில் காட்சிக் கிறையோய்நீ

† அருங்கலைச்செப்பு. — (ஆதி நூற்றது.) திருமறையென்னுந் திரிமொழியாசெ, அருங்கலைபாயது நூல்.
என்றுமுண்டாகி யிறையால் வெளிப்பட்டு, நின்றது நூலென்றுணர்.
மூவரு மொழியால் மூவுல களந்து, தேவரு வாக்கிய நூல்.
எல்லாமுடையான் குருவாகிவந்துமூச், சொல்லாகி நின்றது நூல்.
மெய்ப்பொருட் காட்டி யுயிர்கட் கறனேகி, துக்கங் கெடுப்பது நூல்
பிடகமும்மொழியே பிறவிபை யகற்றும், இடமுறு ஞானமுந்நூல்.
சாதுயர் நீக்கத் தவமுத லுய்யு, மாதவன் கண்ட முன்னூல்
காதலத்தோயா கடவுளாக்கும், கோதவ ரீய்ந்த நன்னூல்.
பேதமும் மொழியே பீடமதாகி, நம்மெய்க் கண்டது நூல்.
பிறவியை வெல்லும் பெருவழிகாட்டும், அறம்மொழி யாய மூந்நூல்.

யுண்டுசெய்து விப்பாசாரவாயன் ஆஞ்ஞைக்குட்பட்ட ஓர் மலையில் தான் போதித்துவரும் திரிமொழிகளை தசபாரமிதையாய் வரைந்துவைத்தது மன்றி சகட பாஷையை பாணினியாருக்கும், திராவிட பாஷையை அகத்தியருக்குங் கற்பித்து தனது மெய்யறத்தைப் பரவச்செய்துவருங் கால் மெய்யறம், மெய்ப்பொருள், மெய்யின்பத்தின் பயனும் வீடுபேற்றை நிருவாணமென்னும் நான்காம்பேதவாக்கியமெனச்சேர்த்து அவற்றிருக்கு அதற்வணமென்னும் பெயரை யளித்து வழங்கினும் அதனந்தரார்த்தம் சங்கத்தவர்களுக்கு சரிவர விளங்காதது கண்ட பகவன் கர்ம பாஷையாம் இருக்கினது பேத வாக்கியத்தை விளக்குமாறு எட்டு வுபநிட்சையார்த்த உபநிடதங்களும், அர்த்த பாஷையாம் யசுரினது பேத வாக்கியத்தை விளக்குமாறு *எட்டு வுபநிட்சையார்த்த வுபநிடதங்களும், ஞானபாஷையாம் சாமபேதவாக்கியத்தை விளக்குமாறு எட்டு வுபநிட்சையார்த்த வுபநிடதங்களும், நிருவாண பாஷையாம் அதர்வண பேத வாக்கியத்தை விளக்குமாறு எட்டு வுபநிட்சையார்த்த வுபநிடதங்களும், ஆகிய முப்பத்திரண்டு உபநிட்சையார்த்தங்களை வகுத்து நான்கு பேதவாக்கியங்களின் மறைப்பொருள் நன்கு விளங்குமாறு சாதுசங்க சமணமுநிவர்களுக்களித்து தென்புலத்தாராகி அறமுறுத்து நிலைபெறும் ஞானத்தவழி யில் விடுத்தார்.

*முன்பு கூறியுள்ள திரிபேத வாக்கியங்களில் ஒரு வாக்கியத்தை சரிவர பின்பற்றினும் அவன் கடைத்தேறி வீடுபேறும் நிருவாணமடைவது அனுபவக் காட்சியாயிருந்தது. இத்தகைய சத்திய பேதவாக்கியங்களும் அவ்வாக்கியங்களின் அந்தரார்த்தங்களும் அதன்தன்மங்களும் மறைந்து பௌத்தகுடிகளனுசரித்துவந்த பஞ்சசீல பாக்கியங்களற்று பொய்க்குருக்களாம் பொய்ப்பிராமண வேஷதாரிகளால் பஞ்சபாதகங்கள் பெருகி பொய்வேதங்களும், பொய்வேதாந்தங்களும், பொய்ப் புராணங்களுந் தோன்றி மனுக்களுக்குள்ளே மனுக்களென்னுங் கொள்கை யற்று

---

* வீரசோழியம்.

இடமுடைய மும்மொழியாந்
திரிபிடக நிறைவிற்காய்
வடமொழியை பாணினிக்கு
வகுத்தருளி யதற்கிணையாய்த்
தொடர்புடைய தென்மொழியை
யுலகெலாந் தொழுதேத்த
குடமுனிக்கு வற்புறுத்தார்
கொல்லாற்றுபாகர்.
இருமொழிக்குங் கண்ணுதலார்
முதற்குரவ ரியல்வாய்ப்ப
இருமொழியும் வழிபடுத்தார்
முனிவேந்த ரிசைபரப்பும்
இருமொழியு மான்றவரே
தழீஇனா ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு
மிதற்கையமுளதேயோ.

முன்கலைதிவாகரம்.— வடநூற் கரசன் றென்றமிழ்க் கவிஞன், கவியரங்கேற்று முபயகவிப்புலவன், செறிகுணத்தம்பற் கிழவோன் சேந்த, னறிவு கரியாகத் தெரிசொற்றிவாகரம்.

சிலப்பதிகாரம்.— தண்டமிழாசான் சாத்தனஃதுரைக்கும்.

நன்னூல்விளக்கம்.

வினையினீங்கி விளங்கியவறிவின்
முனைவன் கண்டது முதனூலாகும்.

முன்கலைதிவாகரம்.— ஆதிநூ லென்பது வேதநூற் பெயரே.

† முன்கலைதிவாகரம்.

உபநிடதம் வேதத்தி
னுட்பொருள் நுட்பம்.

உபநிடதசுருக்கம்.— இருளகற்று நால் வேதத் துபநிடத சுருக்கமென - வெங்கோன் சொன்ன, பொருளதனை நெஞ்சகத்தே சௌபாக்கிய - குரு வென்னும் பொருளினீண்டு, மருளகற்றும் படியமுதித் தமிழ்போது - மதனை யொரு வழி யொன்றுங்கா, யருளகத்தி லிருந்துரைத்த வதிசயமே - யதிசயமற் றறிகிலேனே.

தங்களது சுயப்பிரயோசனத்திற்காக இத்தேசத்தி லெக்காலு மில்லாக் கீழ்ச்சாதி மேற்சாதியென்னும் பொய்க் கட்டுப்பாடுகளை யேற்படுத்தி பௌத்தர்களால் தொழிலகளுக்கென்று வகுத்திருந்தப்பெயர்களை சாதிப்பெயர்களென மாற்றி ஒற்றுமெயில் வாழ்ந்திருந்த மனுமக்களின் வாழ்க்கைகளைக் கெடுத்து அறப்பள்ளிகளில் விருத்திப்பெற்றுவந்த கல்விகளையும் கைத்தொழில்களையுங் கெடுத்து அறப்பள்ளிகளையு மழித்து பாழ்படுத்தி தங்கள் சுயநலங்களைமட்டிலுந் தேடிக்கொண்டபடியால் அரிய பேதவாக்கியங்களும், வேத அந்தங்களும், ஞானசாதனங்களுமாறுப்பட்டு உண்பதே ஞாலம் உடுப்பதே கோலமென்னும் அஞ்ஞானத்தடிப்பேறி பிறவி, பிணி, மூப்பு, சாக்காடென்னும் நான்குவகை துக்கங்களையுமுணராது நாளுக்குநாள் நசிந்து பிறவியின் துக்கத்தைப் பெருக்கிவருகின்றோம்.

இத்தகைய நசித்தலின் உணர்வுதோன்றிய நாம் தங்கடங்கள் சுயப் பிரயோசனங்களுக்காய் ஏதுமிலாது மதக்கடைபரப்பி சீவிக்கும் பொய்க்குருக்களானோர்களை நாடாமலும் அவர்களது பொய் வேதங்களையும், பொய் வேதாந்தங்களையும், பொய்ப் புராணங்களையும் பாராமலு மொழித்து எல்லாமுடையான் குருவாகிவந்து போதித்த மெய் வேத வாக்கியங்களையும் மெய்வேத அந்தங்களையும் நன்காராய்ந்து பிறவியாம் பெருங்கடலைக் கடந்துபிணி மூப்பு, சாக்காட்டை ஜெயித்துமனிதருள் தேவனெனத் தோன்றி நித்திய சுகம் பெறவேண்டியதே புத்ததன்மத்தின் பலனாகும்.

பிறவியை ஜெயித்து தேவனாகும் பலனை விரும்புவோர் புத்தரையும் புத்தரது தன்மத்தையும் சிந்திக்கவேண்டியதே செயலாதலின் அவரது பிறப்புவளர்ப்பின சரித்திரத்தையும், அறமொழிகளாம் சத்தியதன்மத்தையும் அன்னிய தேசத்தோரும் அன்னிய பாஷைக்காரரும் அன்னிய மதத்தோர்களுமான பெரியோர்களால்வரைந்துள்ள நூற்களை விசேஷமாகக் கவனியாது அவர் பிறந்து வளர்ந்து இத்தேசத்தாள் நாட்டிய *சங்கத்தவர்கள் வரைந்துள்ள அருங்கலைச்செப்பு அறநெறி தீபம், அறநெறிச்சாரம், திரிக்குறள், திரிமந்திரம், திரிவாசகம், திரிகடுகம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், வளையாபதி குண்டலகேசி, சூளாமணி, நிகழ்காலத்திரங்கல், நிகண்டு, திவாகரம், பெருங்குறவஞ்சி, சிறுங்குறவஞ்சி, பெருந்திரட்டு, குறுந்திரட்டு, மற்றுமுள்ள சமணமுநிவர்களின் நூற்களைக்கொண்டும் புராதன பௌத்தவிவேகிகள் கர்ணபரம்பரையாக வழங்கிவரும் சுருதிகளைக்கொண்டும் அநுபவச் செயல்களைக்கொண்டும் ஆராய்வதாயின் *சத்தியதன்மம் நன்கு விளங்கும். நாமும் அவைகளை யாய்ந்தே பூர்வத்தமிழொளியென புத்தரது *அரியசரித்திரத்தையும், அவரது அரிய தன்மத்தையும் விளக்கி வரைந்திருக்கின்றோம்.

---

* நாயனார் திரிக்குறள். — அறவாழியந்தணன் தாள்சேர்ந்தார்க்கல்லாற், பிறவாழி நீந்தலரிது.

சித்தாந்தக் கோத்து. - அருணெறியாற் பாரமிதை யாறைந்து முடனடக்கிப், பொருள்முழுதும் போதிநிழ லன்குணர்ந்த முநிவறன்ற, னருள்மொழியா னல்வாய்மெ யறிந்தவரே பிறப்பறுப்பார், மருணெறியாற் பிறநூலு மயக்கறுக்குமாறுளதோ.

வீரசோழிய கலித்துறை யுதாரணம். — தோடாரிலங்கு மலர்கோதிவண்டு வரிபாடு நீடு துணர்சேர், வாடாதபோதி நெறிநீழன்மேய வரதன் *பயந்த வறநூல், கோடாதசீல விதமேவி வாய்மெ குணனோடு நாளு முயல்வார், வீடாகு மின்ப நெறிசேர்வர் துன்ப வினைசேர்த லொன்று மிலரே.

பாட்டியல். — தீவினையை வெல்லும் அறவாழி தெய்வம் அஞ்சல்.

இவ்வரிய தன்மமே சகல பாஷைகளுக்கு பீடகமும், சகல மதங்களுக்கு பீடகமும், சகல சித்தாந்தங்களுக்கு பீடகமும், சகல ஞானத்திற்கும் பீடகமா யிருக்கின்றபடியால் புத்ததன்மப் பிரியர்கள் நீங்கலாக அன்னிய மதஸ்தர்கள் யாவரும் தங்களது விரோத சிந்தையை யகற்றி அவிரோதச் சிந்தையில் நிலைத்து பூர்வத்தமிழொளியா மிவ்வாதிவேத சாராம்சத்தை வாசித்துணருவரேல் முத்திபெறும் நிருவாண சுகமுற்று தேவகதி யடைவார்களென்பது சத்தியம், சத்தியமேயாம்.

புத்த தன்மத்தை ஆராய முயல்வோர் கண்டுபடிக்கவேண்டிய நூற்கள் அனந்தமுண்டு. அதாவது சித்தார்த்தரது காலத்திலேயே தற்காலத்திய வேஷப்பிராமணர்களிருந்ததாகவும் ஞானமறியாது பேசியதாகவும் அப்பிராமணனென்போர் பௌத்த மார்க்கத்தில் சேர்ந்ததாகவும் எழுதியிருக்குமாயின் அவைகள் யாவும் மத்தியில சேர்த்துள்ள பொய் சரித்திரங்களென்றே நீக்கல்வேண்டும். புத்தரென்பதும் பிராமணனென்பதும் ஒரு பொருளந்தரங்கமாதலின் பெண்சாதிப் பிள்ளைகளுடன் சுகித்துப் பேராசையி லிருப்பவர்களைப் பிராமணர்களென்று கூறுவது தவறேயாம்.

அத்தகைய தவராகிய சரித்திரங்கள் தோன்றியதற்குக் காரணங்களாதெனில், புத்தபிரான் பரிநிருவாணமடைந்த ஆயிரத்தியெண்ணூறு வருடங்களுக்குப பின்பு பௌத்ததன்ம யதார்த்தப் பிராமணர்கள் குன்றி வேஷப்பிராமணர்க ளதிகரித்தார்கள். அவர்களது காலத்தில் சீனயாத்திரைக்காரர்களும், சிங்கள யாத்திரைக்காரர்களும், பர்ம யாத்திரைக்காரர்களும் இந்திரதேசம் வந்து புத்தபிரான் சரித்திரங்களை ஆராய்ச்சிசெய்யுங்கால் இந்த வேஷப்பிராமணர்கள் தற்கால தோன்றினவர்களன்றி முற்காலத்திலேயே யிருந்தவர்களென்று கூறி தங்களைப் பூர்வக்குடிகளென்று சிறப்பித்துக்கொள்ளுவதற்கு புத்தரது சிறுசில சரித்திரங்களுடன் பிராமணர்களையும் ஜெயித்து பௌத்தமார்க்கத்தில் சேர்த்துவிட்டாரென்று மெழுதி கொடுத்துள்ளவைகள் யாத்திரைக்காரர்களுக்கு மிக்க வியப்பாயிருந்தபடியால், அவைகளை பத்திரமாக வரைந்துக்கொண்டுபோய் இப்போது வெளியிட்டுவருகின்றார்கள். தற்காலத்துள்ள வேஷப்பிராமணர்கள் முற்காலத்தி லில்லையென்பது சரித்திர சுருக்கமாதலின் புத்தரதுகாலத்தில் வேஷப்பிராமணர்களிருந்தார்களென்பது முற்றும்பொய்யேயாம்.

அதற்குப்பகரமாக வோர் ஆட்டிடையனின் காலுடைந்த ஆட்டுக் குட்டியையும் தோற்பை கப்பளத்தையும் புத்தபிரான் தூக்கிச்சென்று ஆட்டிடையன் வீட்டில் விட்டுச் சென்றதாக சரித்திரம். அதை யநுசரித்தே வோர் பொய்க்கதையை சேர்த்துவிட்டிருக்கின்றார்கள். அவை யாதெனில் பகவன் ஆட்டுக்குட்டியைத் தூக்கிக்கொண்டு பிராமணர்களென்போர் யாகஞ்செய்யு மிடத்திற்கே போனதாகவும் யாகத்தைத் தடுத்ததாகவும் அதனால் ஆடுகளை நெருப்பிலிட்டுக் கொல்லாமல் நிறுத்தியதாகவு மோர் கட்டுக்கதையை நுழைத்து யாத்திரைக்காரர்களிடங் கொடுத்திருக்கின்றார்கள். அவர்களுமதை மெய்யென்று நம்பி யெடுத்துப் போய் இப்போது அச்சிட்டும் புத்தகங்களில் வெளியிடுகின்றார்கள். இவைகள் யாவும் தற்கால வேஷப்பிராமணர்கள் புத்தர்காலத்திலேயே யிருந்தார்களென்று கூறி தங்கள் பொய்வேஷங்களையும், பொய்வேதங்களையும், பொய் வேதாந்தங்களையும், பொய்ப் புராணங்களையும் முற்படுத்திக்கொள்

னுகத்காய சமயபேதக் கட்டுக்கதைகளையன்றி யதார்த்த சரித்திரமாக மாட்டாது. அவர்களுக்குள் பெரும்பாலும் மாடுகளையும், குதிரைகளையும் கட்டித் தின்றதாக வரைந்துக்கொண்டிருக்கின்றார்களன்றி ஆடுகளை நெருப்பிலிட்டுச் சுட்டுத் தின்றதாகக் கிடையாது. புத்தரது பரிநிருவாண மடைந்த ஆயிரத்தி யெண்ணூறு வருடங்களுக்குப் பின்பே மிலேச்சர்க ளென்னும் ஆரியர்கள் வந்து குடியேறி கொல்லாவிரதம் பூண்டிருந்த பௌத்தர்களின் முன் மாமிஷந் தின்பதற்கு பயந்து மாறுபாடாய யாக மென்று கூறி மாடுகளையும் குதிரைகளையும் சுட்டுதின்ற கதைகள் புத்த ருக்குப் பின்னிட்டவைகளேயன்றி முன்பிருந்ததன்று. ஆதலின் புத்த ரது காலத்திலேயே ஓர் வேஷப்பிராமண னிருந்தான், வாதுபுரிந்தான் புத்தமார்க்கத்திற் சேர்ந்தானென்னுங் கதைகளை யேனுங் காணுவீர்க ளாயினும் புத்தருக்குமுன்பு சாதிபேதங்கள் இருந்ததென்றாயினும் புத்த கங்களிற் காணுவீர்களாயின் அவைகள் யாவையுங் கற்பனைகதையென் றகற்றி நீதிநெறி வாய்மெய்களைமட்டிலு முணரல்வேண்டும்.

அத்தகைய வுணர்ச்சியில் சாதிபேதங்களே சகல கேடுகளுக்கும் மூலமாகவும் சாமி சண்டைகளே சால விரோதங்களுக்கும் மூலமாகவும் விளங்குகிறபடியால் கேட்டிற்குப் போகும் வழிகளிலும் விரோதத்தை வளர்க்கு மிடங்களிலு மணுகாது தேகசுத்தம், உடை சுத்தம், மனோ சுத்தம், வாக்கு சுத்த முடையவர்களாயிருந்து சுகவாழ்க்கைப்பெறவேண்டிய வெவ்வொருவர்களுக்கும் என்றுமழியா நிதிகளாகும் புத்தநீதி, தன்ம நீதி, சங்கநீதி மூன்றையுந் திரட்டி "பூர்வத்தமிழொளியாம் புத்தரது ஆதிவேத" மென வெளியிட்டிருக்கின்றோம்.

இவ்வேதப்போதகனும் வேதியனுமான விண்ணவர்க் கரசனும் புத்தபிரானையே ஆதிதெய்வமென்றும், ஆதி கடவுளென்றும், ஆதிபகவ னென்றும், ஆதி சிவனென்றும், ஆதியீசனென்றும், ஆதிநாதனென்றும், ஆதி வேதனென்றும், ஆயிரநாமங்களால் வந்தித்தும் சிந்தித்தும்வந்திருப் பதை சகல பௌத்த நூற்களிலும் வரைந்திருக்கின்றார்கள். அவைகளின் அந்தரார்த்த மறியாதோர் அப்பெயர்களை தங்கடங்கள் மனம்போனவாறு மாறுகொள் யேற்றுக்கொண்டதுமன்றி அவ்வாயிர நாமங்களை யியற்றி சிந்தித்துவரும் பௌத்தர்கள் கடவுளில்லையென்று கூறுவதாகப் பட் டாங்கடித்து நாமங்களின மொழிபுரட்டை யுண்டுசெய்துவருகின்றார்கள். அத்தகையோர் புரட்டிற்கு நூலாதார மேதுமில்லாதபடியால் அவர்கள் கூறுங் கூற்றை மெய்யெனக்கொண்டு மோசம்போகாமலும் தங்கடங்கள் மனங் கொண்டவாறு தாங்களே சிருஷ்டித்துக்கொள்ளும் கடவுளர்களை நம்பாம லும், மாதா பிதா குருவையே தெய்வமென சிந்தித்துவருவது பௌத் தர்களின் பூரணக் கொள்கையாதலின் இதனது பெரும்பலனை தமிழொளி யில் நன்கு தெரிந்துக்கொள்ளுவதுடன் புத்ததன்ம நான்கு வாய்மெயின் செயல்கள் சகல மக்களுக்கும நன்குவிளங்காது அவர் பரிநிருவாணமுற்ற ஆயிரவருடங்களுக் குட்படவே அறுசமயங்களெனக் காலத்திற்குக்காலம் வேறுவேறு உபாசக தன்மமட்டிலும் நிலைத்து தென்புலத்தார் தன்மம் நிலை குலைந்து நாளதுவரையில் மாறுபட்டிருக்கின்றது. அதனால் மெய்ப்பொரு ளுண்டென்போர் சிலரும், மெய்ப்பொருளில்லையென்போர் சிலருமாக மலைவுற்றிருக்கின்றார்கள். அவைகள் யாவையும் இவ்வாதிவேதத்தா லறிந் துக்கொள்ளலாம்.

க. அயோத்திதாஸ பண்டிதர்.

அறிவோம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

---

## பூர்வத்தமிழொளியாம்

# ஸ்ரீ புத்தரது ஆதிவேதம்.



### புத்தமாலிகா.

*யோவடுதங் பவரோ மனுஜேஸு*
*சாக்யமுநி பகவா கதகிச்சோ*
*பாரகதோ பலவிரிய ஸமங்கி*
*தங்ஸுகதங் ஸரணத்த முபேமி.*

[இதன்பொருள்.] மநுக்களுட் பெருமையும், அருமையுமான வாசான் ஆதிபகவன் சாக்கைய முநிவரேயாவர். அவரே சகலருக்குங் குருவாக விளங்கி உலகில் முடிக்கவேண்டியதை முடித்து கரையேறி நிருவாணமடைந்த மங்களகர பெரியோன் புத்தபிரானை சரணாகதிடைந்து,

## அவரது சத்தியதன்மத்தை விவரிக்கின்றோம்.

*பொறையதே யுலகிற் பொருளெனத் தோன்றி*
*போன்ற சத்துவமதே முதலா*
*மிறையென வகுத்து யினிதரசாளு*
*மின்பமு மகற்றி பற்றற்று*
*பிறையெனுங் கலைநாற் பிரமுகர்க் கூட்டி*
*பின்னுமுள் ளொளியதா முண்மெய்*
*மறையவனென்ன மதமெலாம் போற்றும்*
*வள்ளலை யுள்ளமே துணர்வாம்.*

*எக்காலுமுள்ள பூதபௌதிகங்களினின்று சூரியன்தோன்றி ஆதிவார முண்டாகி, சந்திரன் தோன்றி சோமவார முண்டாகி, பூமி தோன்றி மங்களவாரமுண்டாகி, நீர் தோன்றி புதவாரமுண்டாகி, காற்று தோன்றி குருவார முண்டாகி, ஆகாய விரிவாகும் வெளிதோன்றி சுக்கிரவார முண்டாகி, இருள் தோன்றி சனிவாரமுண்டாகி வாரங் கிழமையென்னும் நற்பல தோற்ற வுலகமாய விரிவதியல்பாம்.

---

*அகஸ்தியர் பரிபாஷை.—“அங்கிடத்தில் வந்ததுதான் மண்ணேயாச்சு, அப்பூதத் தொருமுளையங் குதிக்கலாச்சு, பங்குபண்ணி யம்முளையேயிலைபூவாச்சுப், பருமலரே காய்பழமாய் வித்துமாச்சு, இகமெனும் வித்ததுவே ரசமு மாச்சு, தெளிந்த ரசந் தானுருண்டு வுதிரமாச்சு, சங்கையில்லா வுடலாச்சு வுயிருமாச்சு, தன்னுடலில் சிவசெந்துக் கோடி யாச்சே.”

இத்தகைய விரிவும் மறைவுமாய வுலகில் தோற்றமாகும் நான்கு பூதங்களின் நல்லேதுவி னிகழ்ச்சியால் என்றும் நிலையாயுள்ள நிலமென்னும் பூமியின்கண் நீர் தோய்ந்து விருட்சங்களென்னும் தாபரங்களாம் முதற்பிறப்பு தோன்றி, விருட்சங்களினின்று புழுக்கீடாதிகளென்னும் ஊர்வனங்களாம் இரண்டாம் பிறப்புத் தோன்றி, ஊர்வனங்களினின்று நீர்வாழ்வனங்களென்னும் மட்சங்களாகும் மூன்றாம்பிறப்புத் தோன்றி, மட்சங்களினின்று பட்சிகளென்னும் பறவைகளாகும் நான்காம் பிறப்புத்தோன்றி, பறவைகளினின்று விலங்குகளென்னும் மிருகங்களாகும் ஐந்தாம் பிறப்புத் தோன்றி, மிருகங்களில் அஃறிணையாகும் வானரமென்னுங் குரங்குகளினது நல்லேதுவி னிகழ்ச்சியால் வாலற்ற நரர்களாம் மக்களில் மானமுண்டாகி மானிடரென்னும் ஆறாம்பிறப்புத் தோற்றமாம் உலகத்தில் தோன்றும் பொருட்களில் இதுவே ஆறாவதுதோற்றமாகி தோற்றமாம் பிறப்புக்கேதுவாய் வித்து, வியர்வை, முட்டை, கருப்பை யென்னும் நான்குவகை யோனிகளின் னல்லேதுவி னிகழ்ச்சியால் தாவரம், ஊர்வனம், நீர்வாழ்வனம், பட்சி, மிருகம், மானிடரென்னும் அறுவகைத் தோற்றங்கள் தோன்றி க்ஷணத்திற்கு க்ஷணம் மாறுகொள வியல்பாம்.

அத்தகைய மாறுள தோற்றத்துள் வாலற்ற நரரென்னும் மானிட வகுப்பில் பேமானிகளென்னு மஞ்ஞானமுற்று தாழ்ந்தபிறவிக் கேகாது மானிகளாகும் அற்ப விவேக முதிர்ச்சியில் விட்டகுறையால் நெடுங்காலத்திற்குக்காலம் அனந்தம் பிறப்பிற்றோன்றி அறுவகை சங்கத்தவ ரானார்கள்.

## முதலாவது சங்கம்.

இறப்பும், பிறப்பும், உயர்வும், தாழ்வும், நன்மெயும், தீமெயும் பஞ்சபூதங்களால் உண்டானபடியால் பஞ்சபூதங்களை வணங்குவோமென்னும் ஓர் வகுப்பினர் தோன்றினார்கள்.

## இரண்டாவது சங்கம்.

இறந்தபிறகு மனிதன் மிருகமாகவும், மிருகம் மனிதனாகவும், பிறக்கமாட்டான். மனிதன் மனிதனாகவும், மிருகம் மிருகமாகவும் பிறக்கும். ஆதலின் ஒன்றை வணங்குவதால் பலனுமில்லை, வணங்காமலிருப்பதினால் கெடுதியுமில்லையென்னு மிரண்டாவது கூட்டத்தார் தோன்றினார்கள்.

## மூன்றாவது சங்கம்.

மனிதனுக்கு யாதொரு சுகமுங் கிடையாது. பிறப்பது ஆதி, இறப்பது அந்தம். இறந்தபின் சகலமுஞ் சூன்யமாதலால் விழித்திருப்பவன் சூனியத்தை விசாரிப்பதில் யாதொரு சுகமுங் கிடையாதென மூன்றாவது வகுப்பார் தோன்றினார்கள்.

## நான்காவது சங்கம்.

சிலர்களுக்கு ஆதியுங் கிடையாது, அந்தமுங் கிடையாது. நன்மெயுங் கிடையாது, தீமெயுங் கிடையாது. எல்லாந் தானே யேற்றுக் கொள்ளுவதால் யாவுந் தற்செயலென நான்காவது வகுப்பார் தோன்றினார்கள்.

## ஐந்தாவது சங்கம்.

புசிப்பை விரும்பாதவனும், தாகத்தை யடக்குவோனும், அக்கினியின் கொதிப்பை சகிப்பவனும், சூரியன் வெப்பத்தைத் தாங்குகிறவனும்

ணக்காலும் சுகமடைவான். இவைகளைத் தாங்காதவன் சுகமடைய மாட்டானென வைந்தாவது வகுப்பார் தோன்றினார்கள்.

### ஆறாவது சங்கம்.

கிழமை வாரமென்னும் பலன்தரு முலகில் முதலாளாகும் சூரியனும், இரண்டாளாகுஞ் சந்திரனும், மூன்றாளாகும் செவ்வாயும், நான்காளாகும் புதனும், ஐந்தாளாகும் வியாழமும், ஆறாளாகும் வெள்ளியும். ஏழாளாகும் சனியும் ஆகிய சூரியன். சந்திரன், பூமி, நீர் காற்று, வெளி, இருள் ஏழுவாரத்தின் சுழலையும், ஏழுவாரத்துள் தோற்றும் பதினைந்து திதிகளின் சுழலையும், பதினைந்து திதிகளின் வடனேக்கு தென்னேக்குகளால் மாறும் பூரண சந்திரன் அபூரண சந்திரனென்னும் இரு பட்சங்களையும், இருபட்சங்களாகும் நாள் முப்பதில் தோன்றும் முக்கிய நட்சத்திரங்கள் இருபத்தியேழும், இருபத்தியேழு நட்சத்திரங்களில் இரண்டேகால் நட்சத்திர மிடங்கொண்ட இராசி பனிரண்டையும் அதிற்றங்கியோடும் வலவோட்டுக் கிரகங்கள் ஏழும், இடவோட்டுக் கிரகங்கள் இரண்டும் ஆக ஒன்பதுக் கிரகங்களையும் மழைகாலம், வெய்யல்காலம், பனிகாலமாகும் முக்காலங்களையும் சோதிகளினிடங்களைக்கொண்டே சோதித்து கணிதங்களில்நிறுத்தி கணிதமாகும் பெருக்கினாலும், குறிக்கினாலும் உண்டாகும் குணிப்பால் மழையின் திக்குகளையும், காலங்களையும்; காற்றின் திக்குகளையும், அதன் காலங்களையும் உலகத்தாருக்கு விளக்கி தேச சுபாசுபங்களைப் போதித்ததுமன்றி உலகில் ஆறாவது தோற்றமான மனுக்களின் பிண்டோற்பவக் காலவரையில் குழவியின் சிரவுதயம் எந்த இராசியி லுதித்ததோ அதைப் லக்கினமாகவும், ஒன்பது கிரகங்களின் நிலைகளைக்கொண்டு குழவிக்கு நேரிட்ட செல்கால பலன்களையும், வருங்கால பலன்களையும் திடமாகக் கூறும் வல்லபத்தினால் சாக்கையனென்னுங் காரணப்பெயரைப் பெற்றான். அவன் தாய் தந்தையரால் கொடுத்தப் பெயர் (கலியன்) யீகையினும் கணிதத்தினும் பேர்பெற்றிருந்ததுமன்றி வாகுவல்லயமென்னும் ஆயுதங்களைக்கொண்டு புஜபலபராக்கிரமத்தினால் சகல வரசர்களையுஞ் செயித்து வடஅயோத்தியாபுரி யென்னும் மகததேசத்திற்குத் தலைத்தார் வேந்தனென்னும் சக்கிரவர்த்தியாக விளங்கினபடியால், வாகுவென்னும் ஆயுதவல்லபத்தால் கலிவாகுச் சக்கிரவர்த்தியென்னுந் தீவாப்பெயருண்டாயிற்று அவன் ஏகசக்கிராதிபதியாக வாண்ட இவ்வுலகத்திற்குக் கலியுலகமென்று வகுத்ததுமன்றி அவன் தலைத்தார் வேந்தனென்னும் சக்கிரவர்த்தி பீடத்திற்கு வந்ததுமுதல் கலியுலக வருஷமென்னும் ஓர் கணிதநிலையையும் வகுத்துவைத்தான். அவன் வம்மிஷவரிசையோர் கணிதத்தில் சிறப்புற்றிருந்ததுமன்றி வாகுவென்னும் ஆயுதவல்லபததால் கலிவாகு, சூலவாகு, கணவாகு, வீரவாகு, இட்சுவாகு வென்னும் ஒன்பது சக்கிரவர்த்திகள கலியுலகமென்னும் தங்கள் மூதாதை கணித்த வருஷத்தைக்கொண்டு சகல கணிதங்களையும் வரிவடிவின்றி ஒலிவடிவிம் சுருதியில் நிலைக்கச் செய்யும் ஆறாவது சங்கத்தோர் தோன்றினார்கள்.

அவன் அரசுக்கு வந்தகாலத்தில் தேசமெங்கும் மழைபெய்து பயிர்களோங்கி குடிகளும் சிறப்புற்று அரசனும் சன்மானிக்கப்பெற்றான். அதையுணர்ந்த கலிவாகு மேஷராசியிற் சூரியன் வந்தகாலத்தில் அரசையேற்றபடியால் அதையே முதல்மாதமாக்கி மீனத்தில் சூரியன் வருங்காலத்தைக் கடையாக மாக்கி அதை யொரு வருஷமென வகுத்து அவ்வரு

ஷத்தில் தான்சஞ்சரித்த சுப பலன்களால் அதையே தன்னரசுக்கு முதல்வருஷமாகக்கொண்டு பாளிபாஷையில் பிரபவ வருஷமென்னும் பெயரைக் கொடுத்தான்.

அதை யநுசரித்துப் பின்வரும் வருஷங்களில் கிரகசஞ்சாரபேதங்களால் உலகத்திலுண்டாகும் சுபாசுப குணங்களை யநுசரித்து நிறைவேறிவரும் பலன்களுக்குத் தக்கவாறு விபவ, சுக்கில, பிரஜோத்பத்தி, ஆங்கிரீஸ வென்னும் பெயர்களைக் கொடுத்துவந்தான்.

இவ்வகையாக அவ்வவ்வருஷ குணகுணங்களுக்குத்தக்கப் பெயர்களைக் கொடுத்துக்கொண்டு அவன் அரசுக்கு வந்த அறுபதை அக்ஷய வருஷ மென்னும் பெயரைக் கொடுத்து அதேவருஷத்தில் மரணமடைந்தான்.

இக்கணிதங்களை யநுசரித்துவந்த சாக்கையகுலத்தார் கலிவாகுச் சக்கிரவர்த்தி அரசுக்கு வந்த அறுபது வருஷத்திற்குமேல் அறுபத்தொன்று, அறுபத்திரண்டென்னும் நீண்ட கணக்காக்கி அவனது அறுபது வருஷ அரசவாழ்க்கை ஞாபகத்தில மாறாமலிருப்பதற்கு கணிதா சுருதி சிந்தனையில் பதித்துவந்தார்கள்.

*கலிவாகு சக்கிரவர்த்தியின் அரசாங்க கலியுலகின் நீண்டகணக்கு 1616-ல் சாக்கையகுல வீரவாகு வம்மிஷவரிசையில மண்முகவாகென்னு மரசனுக்கும், மாயாதேவி யென்னும் இராக்கினிக்கும் சித்தார்த்தி௵ வைகாசிமீ 13-ம் நாள பௌர்ணமி திதி கேட்டை நட்சத்திரம் மீனலக்கினம் ஆதிவாரம் அதிகாலையில் ஓர் ஆண்குழந்தை பிறந்தது.

அக்காலத்தில் தேசமெங்கும் சிற்சில நற்சகுனங்கள் தோன்றியதைக் கண்ட சிற்றரசர்களும், சோதியின் இடங்கண்டு குணங் கூறும் சோதிடசாஸ்திரிகளும் குழந்தையைக் காணும்படி வந்தார்கள்.

வந்தவர்களுள் அசித்தாவென்னும் பெரியவர் தங்கள் மூதாதை கலிவாகு வகுத்துக் கூறிவந்த அங்கபாக லட்சணங்களைக்கொண்டு குழந்தையின் குணக்குறிகளை யாராய்ந்து கண்கலங்கி தேம்பலுற்றழுதார்.

அதைக்கண்ட வரசன் மனங்கலங்கி பெரியோய் தாங்கள் துக்கிக்குங் காரணமென்னை. குழவிக்கு யேதேனு மாபத்துண்டோவென வினவினன்.

பெரியோன் மண்முகனை நோக்கி அரசே! குழந்தையைப்பற்றி நீர் யாதுக்கு மஞ்சவேண்டாம இதன் அங்கபாத தாமரை ரேகையின் பலாபலனை யாராயுங்கால் குழந்தை வளர்ந்து பாலகானத்தில் ஏகசக்கிராதி தலைத்தார் வேந்தனாக விளங்கினும் விளங்கும், அல்லது வாலறிஞனா

* மணிமேகலை.-"கதிரோன் றோன்றுங் காலையாகவ, னவிரொளிகாட்டுமதியே போன்று, மைத்திருள் கூர்ந்த மனமாசு கழூஉம், புத்த ஞாயிறு தோன்றுங்காலை, திங்களு ஞாயிறுந் தீங்குறா விளங்க."
"இருதிளவேனி லெரிகதி ரிடபத், தொருபதின்மேலு மொருமூன்று சென்றபின், மீனத்திடைநிலை மீனத்தகவயில், போதித்தலைவனொடு பொருந்திய போழ்து."

"சாக்கையராளுந் தலைத்தார்வேந்தன், ஆக்கைபுற்றதித்தனை ஞெகவன் றனை, தணணன் சாக்கையர் தவளமால்வரை, மண்முகனென்னு மாவரசிடதிலே, பொன்னின கோட்டது பொற்குளம்புடையது, தன்னலம் பிறர்தொழ தான் சென்றெய்தி, யீனுமுன்ன ரின்னுயிர்கன்று, நான்முலை சுரந்து நன்பாலூட்டலும்," (மற்றுங் காண்க.)

கத்தோன்றி சருவ சீவர்களுக்கும் சற்குருவாக விளங்கினும் விளங்கும். ஆதலின் அம்மகத்துவத்தை என் கண்குளிரக் காணாது அற்பாயுளைப் பெற்றுள்ளதால் துக்கிதனேனென்றான்.

அக்கணிதங்களை யுணர்ந்த வரசன் பெரியவரைநோக்கி ஐயே! இக்குழந்தை பாலதானமுற்று வெளியேறாது அரசாங்கவிச்சையில் நிற்பதற்கு யாது செய்யலாமென வினவினான்.

அரசே உமது புத்திரன் நமது மூதாதைக் கலிவாகுபோதித்திருந்த சித்தார்த்திவருஷம் பிறந்தபடியால் சித்தார்த்தியென்னும் பெயரையளித்து பாலதானம் பதினாறு வயதுக்குமேல் வெளியிலெங்கும் விடாமல் விசித்திரக்கூடமொன்றமைத்து பிள்ளையின்மனதைக் கவரத்தக்க விநோத வாண்களுடம், நீர்வாவி தூற்றும் நந்தவனங்களும். பரிமளமமைந்த பூஞ்சோலைகளும், பட்சிகளின் நாதகீத நடன மஞ்சனங்களு மமைத்து அவந்தனுக்கொற்ற மலையரசன் மகளை மணம்புரிந்து அவ்விருவரையும் பவழமால்வரையில் வைப்பதுடன் பாதநாட்டிய சங்கீத சல்லாப மமைந்த தோழிகளையும் வைத்து உலகவிசாரந் தோன்றாமற் செய்யவேண்டுமென வாக்கியாபித்தார்.

அதைக்கேட்ட வரசன் புத்திரனுக்கு சித்தார்த்தி யென்னும் நாமகரணஞ்சூட்டி சிற்பசாஸ்திரிகளை வரவழைத்து பவழமால்வரைக் கட்டி முத்தேசத்தி லிருக்குங்கால்; காற்குளம்புகளும், கொம்புகளும், பொன்போன்ற நிறம் வீசும் ஓர் பசுவானது கன்று யீனாமுன்னமே பிள்ளையின் அருகில் வந்துநின்று பால் சுரந்து வடிய வாரம்பித்துள்ளதை யரசன் கண்டு கன்றீனா காராம்பசுவின் பாலை மைந்தனுக்கூட்டி பசுவின் அன்பின் மிகுதியையும், அதன் யீகையையும் சகலருக்கும் விளக்கி அன்றுமுதல் தேசத்துள்ள சகல குடிகளும் பசுக்களுக்கு யாதொரு துன்பமுமணுகாமல் பாதுகாக்கவேண்டுமென்று ஆக்கியாபித்தான்.

பசுவின்பா லுண்டமர்ந்த குழவிக்கு பாலிபாஷையில் கௌதமர் கௌதமரென்னும் மறுபெயரையு மளித்தார்கள்.

சக்கிரவர்த்தித் திருமகன் நாளொருமேனியும், பொழுதொருவண்ணமாய் வளர்ந்துவருங்கால் விளையும் பயிறு முளையில் தெரியுமென்பதுபோல் குழவி வளர்ந்து தனக்கொற்ற குழவிகளுடன் கிரையாடுங்கால் இருவிழியின் நோக்கங்களும், செயலும், அன்புமிகுத்தே விளங்கி வளர்ந்தது.

வளர்ந்த குழவிக்கு வயதைந்தானவுடன் தந்தை வில்வித்தை, வாகுவித்தை முதலியவைகளைக் கற்பிக்கவும்; யானையேற்றம், குதிரையேற்றம் முதலியவைகளை யேற்றவும் ஆரம்பித்தான்.

அதை யுணர்ந்த சிறுவர் வில்வித்தையையும், வாகுவித்தையையும் குதிரையேற்றத்தையும், யானையேற்றத்தையும் எளிதி லுணர்ந்து தனது வித்தியா வாசிரியருக்குக் காட்டுவதை யுணர்ந்த வாசிரியனுக்கு ஆனந்தமும் பயமுந் தோன்றி அரசனிடஞ் சென்று ஐயே, உமது புத்திரனின் இனிய பார்வையும், மிருதுவசனமும், அறிவினுட்பமுமுள்ளச் செயல்களை யாராயுங்கால் அவரெனக்கு வாசிரியனேயன்றி நான் அவருக்கு வாசிரியனல்லவென்று கூறி விடைபெற்று தன்னில்லஞ் சேர்ந்தான்.

வாலவயதிற்கு ளுண்டாகும் வாலறிஞன் செயல்களையும், குணங்களையும் நாளுக்குநா ளறிந்த வரசன் பிள்ளையின் நுட்பவறிவின் செயல்

களைக்கண்டு வானந்தமுற்றபோதிலும் பிள்ளை தன்னரசுக்கில்லாமற் போய் விடுமோவென்னுஞ் சிந்தாக்கவலையால் மாளிகையை நிருமிக்குஞ் செய் கையி லிருந்தான்.

அக்கால் வாலறிஞன் வீதியுலாவிவருங்கால் ஓர் *குருபருந்தானது புறாவைத் துரத்திக்கொண்டுவரவும் அப்புறா பயந்து பலவிடங்களி லோடி யும பருந்து தொடர்ந்துவர புறாவானது சென்று சித்தார்த்தி சிறுவர் மடியி லொளிந்தது.

கௌதம சிறுவரிடம் அடைக்கலம்புகுந்தப் புறாவை அன்புடன் ஆதரிக்குங்கால் குருபருந்தும் மடியில்வந் தடகார்ந்து தன் பசியைத் தணிக்கத் தாவிற்று.

அதை யுணர்ந்த சிறுவர்க்கு அடைக்கலம் புகுந்த புறாவையுங் காக்கவேண்டும், பசிகொண்ட பருந்தையும் பார்க்கவேண்டிய கருணையால் திகைத்து பருந்தின் முதுகைத் தடவி நீ நாடி துரத்திய புறாவின் மாமி ஷத்திற்குத் தகுந்த எடை மாமிஷம் என் தேகத்திற் றின்னலாமென்று முனைகை கெண்டையை நீட்டினார். அவர் கருணையின் விசிரிப்பம பருந்தி னும் பாவி சிறுவன் தன்னை பற்றிக்கொண்டும் யாதொரு இம்சையுஞ் செய்யாமல் தன் மாமிஷத்தைக் கொடுக்க வாரம்பித்தவுடன் பருந்தும் பரி தாபத்தால் பறந்துப்போய்விட்டது.

இவ்விருத்தாந்தங்களைக் கண்ணுற்ற மக்கள் அரசனிடஞ் சென்று கௌதமரைப் புறா அடைக்கலம்புகுந்ததும், அதைத் துரத்திவந்த பருந்து பசியால் வருந்தியதும், சிறுவர் தன்மாமிஷத்தைக்கொடுத்ததும, அதைப் புசியாமல் பருந்து போய்விட்டதும் ஆகிய செயல்களைத் தெரிவித்தார்கள்.

அவைகளை யுணர்ந்த வரசன் தன் பிள்ளையின் கருணாநிதியை யுணர்ந்து கௌதமரை யணுகி குழந்தாய் என்னசெய்கின்றாயென்றான்.

என்னருமைத் தந்தையே, புறாவை யாதரிக்கின்றேனென்றார். அதைக்கேட்ட வரசன் புன்னகைக்கொண்டு சிறுவருக்குக் கைலாகுக் கொ டுத்து அழைத்துப்போய் வயல்வெளிகளிலுள்ள செந்துக்களின் செய்கை களையும், தோப்புகளிலுள்ள செந்துக்களின்செய்கைகளையும் சுட்டிக்காண் பித்தான். அதாவது, புழுக்கீடாதிகளை எறும்புகள் தின்பதும், எறும்பு களைப் பல்லிகள் தின்பதும, மட்சங்களை மட்சிகள் தின்பதும, பட்சிகளை நரிகள் தின்பதுமாகியசெயல்களைக் காண்பித்து குழந்தாய், உலகிற் றோன் றியுள்ள சீவசெந்துக்கள் ஒன்றை யொன்றுத் தின்று சீவிப்ப தியல்பாகை யால் நீ யவைகளைக் கருணைகொண்டு காப்பாற்ற முயல்வதில் யாது பய னென்றான்.

உடனே கௌதமர் பிதாவைநோக்கி தந்தையே, புழுக்களை எறும் புகள் பிடித்துத்தின்னுங்கால் புழுக்கள் துடித்து வாதைப்படுவதைக் காண் கின்றேன். அதனால் என் மனங்கலங்குகிறதென்றார்.

அதற் கரசன் குழந்தாய், உன் மனங் கலங்குவதால் யாது பலன். சீவராசிகளில் உள்ள சுபாவத்தை மாற்றக்கூடுமோ வென்றான.

அதற்கு சிறுவர் தந்தையே, புழுக்கீடாதிகள் தாபரவர்க்கங்களைத் தின்று சீவிப்பதைக் காண்கின்றேன். அதுபோல் மற்ற சீவராசிகள் தாபர

* வீரசோழியம்.—"மீதியல் கருடனை விடவா வொடுபகை, விதிமுறை கெடவறம் வெளியுற வருளினை."

வர்க்கங்களாகும் இலை, சருகு, காய்கனி, கிழங்கு முதலியவல்லுக்களைப் புசித்து சீவிக்கலாகாதோ வென்றார்.

மாமிஷத்தைப்பெற்ற தேகங்கள் மாமிஷத்தைப்புசித்தால் அவைகளுக்கு சத்துவம் உண்டாகுமேயன்றி தாபரவர்க்கங்களைப் புசித்தால் சத்துவமுண்டாகாது மைந்தனே யென்றான்.

தாபரவர்க்கங்களைப்புசிக்கும் காடிகளுக்கும், யானைகளுக்கும், குதிரைகளுக்கும், ஒட்டகங்களுக்கும் சத்துவ மில்லையோ வென்றார்.

மைந்தன் வினவிய வினாக்களுக்கு மாறுத்திரமளிக்கவியலாது மார்புட னணைத்து முத்தமிட்டு குழந்தாய், நீ சீவராசிகளின் சுபாசுபங்களைக் கண்டு களித்தது போதும் அரண்மனைச் சேரலாமென்றழைத்துவருங்கால் அரச வம்மிஷச் சிறுவரி லொருவன் ஆகாயத்திற் பாக்கும் புறாவை யம்பினா லெய்யவும் அஃது கௌதமச் சிறுவர்முன் வந்துவிழவும் அவரதைத் தாவியெடுத்து மார்புட னணைத்து அதனுடலில் தைத்திருந்த அம்பைப் பிடுங்கியவுடன் இரத்தஞ் சொரிவதைக்கண்டுபதறி உதிரத்தை யிருகரத்தால் துடைத்து ஆதரிக்குங்கால் அப்புறாவை அம்பினாலெய்தச்சிறுவனும் அருகில் வந்து புறாவைக் கேட்டான். அவனைக் கண்ட கௌதமச் சிறுவர் புறா வுடலில் தைத்திருந்த வம்பை யெடுத்து அவன் உள்ளங்கையிலூன்றி உணர்ச்சி எவ்வகை என்றார். அதிகம் உளைக்கின்றதே என்றான். உதிரம் வாரா வுணர்ச்சியில் அதிகம் உளைக்குங்கால் உதிரம் வெளிவாதத் தைத்தப் புறாவின் உடலுக்கு எவ்வகை யுளையுமென்பதை யறியாயோ வென்றார்.

அதைக்கேட்ட சிறுவனுக்கு பயமும், உணர்ச்சியுந்தோன்றி அரசபுத்திரா, என் அம்பைப் புறாவின்பேரில் எய்தது அதி தோஷமாகத் தோனுதலால் க்ஷமிக்கவேண்டுமென்றான்.

அதற்கு கௌதமச் சிறுவர் நேயனே, நீர் செய்த துன்பத்தை நான் க்ஷமிக்கக் காரணனல்ல; இப்புறாவுக்கு நேரிட்ட துன்பத்தை நீயே யாற்றி ரக்ஷிக்கவேண்டுமென்று கொடுத்துவிட்டு அரண்மனைச்சேர்ந்தார்.

இத்தியாதி செயல்களையுங் கண்ணுற்ற வாசனுக்கு ஆனந்தமும், பயமுந் தோன்றிற்று. அதாவது, பதினாறுவயதுக்குள் அறிவின்விருத்திபெற்றிருக்கும் வாலறிஞன் பதினாறு வயதுக்குமேல் அரசபாரத் துன்பஞ் சகியாது துறந்துவிடுவானென்றெண்ணி மந்திரிகளைத்தருவித்து மைந்தன் மனதைக் கவர்ந்து இன்பத்தை பெருக்கும் மாளிகையை நிருமித்து மணத்தை முடிக்க வாரம்பித்துக்கொண்டான்.

அரசபுத்திரன் வாலவயதிற் கொண்ட விவேக மிகுதிக்கு வாலறிஞன், வாலறிஞன், வாலறிஞனென்னும் பெயரையுமளித்தார்கள்.

அரசன் தனதரிய மைந்தன் சுகத்தை நாடி *மலையரண், காட்டரண், மதிலரண், நீரரணாகும் நான்கரண்களில் மலையரணாகும் உச்சியில் ரத்தினம்பாக் கலசமுமம, மததியில் நவநிறங்கள் பூர்த்த தாபரப் பூடுகளும் தென்றலுடன் குளிர் வீசும் ஜலதாரைகளும் மயில், குயில், நாரை, அன்னக்குஞ்சுகள் வாழும் மடல்மேடைகளும், அடிவாரத்தில் கண்குளிரப் பசும்புற்களை யமைத்தும்;

* முன்கலை திவாகரம்—நால்வகையரண். "மலையரண் காட்டரண் மதிலரண் ணீரர, ணிவையரு சிறப்பி னால்வகை யரணே."

காடரணென்னும் முல்லை, மல்லிகை, பிருவாட்சி, சண்பக, சாதண, வைம்மணம் நிறைந்த புட்பவிருட்சங்களையும் வாழை, பலா, மா, அத்தி நிறைந்த கனிவிருட்சங்களையும் மான், முயல், புறா முதலிய சீவன்களுலாவும் சோலைகளை யமைத்தும் ;

நீராரணென்னும் சுத்தநீர் வாவிகளும், பளிங்குகளிழைத்த, பாக்கு நீரோடைகளும், கிரீடை வாவிகளும், எக்காலுங் குளிர்ந்த நீரூற்று சயனகற்களும், பன்னீரோடைக ளமைத்தும் ;

மதிலாரண் விடுக்குமுன் பளிங்குகளிழைத்த கீதா மண்டபமும். பச்சைகளிழைத்த லீலா மண்டபமும், பவழங்க ளமைந்த உலாவு மண்டபமும், அறுசுவை யருந்து மம்பர் மண்டபமும், மோகன தோழிகள் வாழும் முத்து மண்டபமும், அவைகளைச்சுற்றி பொன் தகடுகள் வேய்ந்த மதிலும், அதற்கப்பால் வெள்ளித்தகடுகள் வேய்ந்த மதிலும், அதற்கப்பால் இரும்புகளா லமைத்த *மும்மதிலுங் கட்டி முடித்து வால†ராஜ கிருகமென்னும் பெயரையு மளித்தார்கள்.

சக்கிரவர்த்தித் திருமகன் வாழ்க்கையில் துக்கச்செயலாகும் அழுகை, பற்கடிப்பு முதலிய தோன்றாமலும் பிணிகொண்ட வுடலும், மூப்படைந்த தேகங்களுங் கண்ணிற்காணாமலும், ஆதுலர்கட் பரிதாபக் கூக்குரல் செவிகளிற் கேளாமலும், வெளியிலுள்ளவர்கள் உத்திரவில்லாமல் உள்ளுக்குப் பிரவேசியாமலும், உள்ளுக்கிருப்பவர்கள் வெளியேறாமலும் இருக்கக்கூடிய விச்சித்திர மாளிகைகளை நிருமித்து இரும்பு தகடுகள் வேய்ந்த மதிலும், வெள்ளித்தகடுகள் வேய்ந்த மதிலும், பொன்தகடுகள் வேய்ந்த மதிலு மமைத்து மைந்தனுக்கு விவாகத்தை யாரம்பித்து, மந்திரிகளைத் தருவித்து தசாங்கச் சிறப்புகளாகும் ஆறலங்கிருதம், மலையலங்கிருதம், யானை யலங்கிருதம், குதிரை யலங்கிருதம, நாடலங்கிருதம், நகரலங்கிருதம், கொடியலங்கிருதம், முரசலங்கிருதம், தாரலங்கிருதம், தேரலங்கிருதஞ் செய்யும்படி யாக்கியாபித்தான்.

மந்திரிகளு மவ்வாக்கியத்தை சிரமேற்கொண்டு தசாங்க சிறப்பை முடித்து மங்கலமுரச யறிவித்தார்கள்.

முரசம் விளவிய வரசன் மந்திரிகளை நோக்கி மைந்தன் சித்தார்த்தி பிறந்தகாலத்தில் வந்திருந்த சாக்கைபக் கணிதர் குழந்தைக்கு பதினாறு வயது முடிந்தவுடன் மலையரசன் மகளை விவாகஞ் செய்துவிடும்படி யாக்கியாபித்திருக்கின்றார். அவ்வாக்கியப்படி மலையரசன் சுப்ரபுத்திக்கும் ஓர் பெண் பிறந்து அவளுக்கும் பன்னிரண்டு வயது முடிந்துவிட்டதாகக் காண்கின்றது; மைந்தனுக்கும் பதினாறு வயது முடிந்துவிட்டபடியால் சென்றவயனோதிய பெரியோன் சாக்கையர் வாக்கை நிறைவேற்றவேண்டுமென்றாக்கியாபிததான்.

---

* மும்மதில்—முன்கலை திவாகரம். "மும்மதில் பொன்னும் வெள்ளியு மிரும்பும்."

யாப்பருங்கலச்சூத்திரம்.—" சுறமறி வனதுறை யெல்லாம், இறவின் பணவி லெல்லாம், மீன்றிரி வனஇடங்கெல்லாம் தேன்றாழ்வனபொழி லெல்லாம்-எனவாங்கு, தண்பணை தழீஇயவிருக்கை, மண்கொழு, நெடு, மதில் மன்னனூரே."

† சீவகசிந்தாமணி.— "இரும்பிடிதழீஇயயானை-யிழிமதங்கலந்து சேறாய்ச், சுரும்பொடு மணிவண்டார்க்கும் - துகிர் கொடி மாடவீதி, பெருங்கடி நகரம்பேசி னிராசமாகிருக மென்ப, சுருங்குடி யமர்கோமா-னணிநகராயதென்றே."

## இரண்டாவது

# சித்தார்த்தர் திருமணக் காதை.



அவ்வாக்கியத்தை வினவிய மந்திரிகள் அரசே, தமது புத்திரர்க்கு மலையரசன் மகள்பேரில் பிரியமிருக்குமோ அன்றேல் மற்ற வரசபுத்திரிக ளின்மீது மனமிருக்குமோ வதைத் தெரிந்துச்செய்ய வேண்டு மென் றார்கள்.

அம்மைதை எவ்வகையால் தெரிந்துக்கொள்ளக்கூடுமென்றான்.

சக்கிரவர்த்தித் திருமகன் அரசபுத்திரிகள் யாவருக்கும் பரிசளிக் கப்போகின்றார் யாவரும் வரவேண்டுமென் றுக்கியாபித்தால் அரசபுத்திரி கள் யாவரும் வருவார்கள். அப்பரிசளிக்குங்கால் மைந்தனுக்கு எப்பெ ண்ணின்பேரில் நோக்கமிருக்கின்றதோ அதையுணர்ந்துகாரியத்தை முடிக் கலாமென்றார்கள்.

அப்படியே அரசர்கள்யாவருக்குந் தெரிவித்து பரிசளிக்கும் பாக் கியங்களாகும் முத்துமாலை, பவழமாலை, பச்சைமாலை, வைரமாலை, சிவப்பு மாலை முதலியவைகளையும்; மேகவர்ண, நாகவர்ண, லோகவர்ண முதலிய பட்டுக்களையும் பரப்பி மைந்தன் விழி யெப்பெண்ணைக் கவருமோவென்று காத்திருந்தார்கள்.

அரசபுத்திரிக ளொவ்வொருவரும் ஆடையாபரண லங்கிருதராய் அன்னநடைக்கொண்டு வரசபுத்திரனை யணுகி முகமலர்ந்துபேசி யவரளிக் கும் பரிசை யானந்தமாகப் பெற்று போனார்கள். அதில் மலையரசன் சுப்ர புத்தியின் மகள் பார்பபதி அல்லது அசோதரை யென்பவள் ஆனந்தமாக வரசபுத்திர னருகில்வந்து முகத்தைப் பார்த்தவுடன் தலைகுனிந்து பரி சுக்குக் கையை நீட்டாமலும் கேழ்க்காமலும் நின்றுவிட்டாள். அரசபுத் திரனும் யாதொன்றும் பேசாமல் தன் கழுத்தி லணைந்திருந்த மோகன மாலையைக் கழட்டி யப்பெண்ணின் கழுத்தி லணைந்துவிட்டு எழுந்து வரண்மனைக்குப் போய்விட்டார்.

இவைகளைக் கண்ணுற்ற வரசனும் மந்திரிகளும் அசோதரையாம் பார்ப்பதியே அரசபுத்திரனுக்குரிய வாணியென் றுணர்ந்து மலையரசனுக் கறிவித்தார்கள்.

அதையறிந்த சுப்ரபுத்தி மண்முகவாகை யணுகி அரசே, உமது புத்திரர் வீரமற்றவராகத் தோன்றுகிறபடியால் என் பெண்ணைக்கொடுக்க சந்தேகிக்கின்றே னென்றான்.

அதைக்கேட்ட வரயன் மைந்தனை யணுகி குழந்தாய் மலையரசன் புத்திரியை உமக்குக் கொடுப்பதற்கு சந்தேகிக்கின்றானே உமது அரச வல்லபம் எங்கு போய்விட்டதென்றான்.

மைந்தன் பிதாவைநோக்கி தந்தையே, அரசவல்லபத்தில் நான் எதைக் காட்டவேண்டுமென்றார்.

குழந்தாய் மலையரசன் புத்திரியை நாடி அவ்விடம் வந்திருக்கும் அரசர்களை ஜெயித்து அசோதரையைக் கைப்பற்றிக் கொள்ளுவாயாகில் அதுதான் உன்னுடைய அரசவல்லபமென்றான்.

அப்புத்திரனெழுந்து யுத்தசன்னத்தராய் தனியே வெளிவந்ததைக் கண்ட வரசன் பதினாறுவயதுள்ள சிறுவனாச்சுதே என்ன யுத்தஞ் செய்வானென்று பயந்து ரத கஜ துரக பதாதிகளாகுஞ் சதுரங்க சேனைகளைத் தொடரவிட்டான்.

அந்த சதுரங்க சேனைகள் யாவையும் முன்னேரவிடாமல் தனியே முன்சென்று சகல வரசர்களையும் விற்போர், வாட்போர், மற்போர், வாகுபோரென்னும் சதுரங்க வீரத்தால் ஜெயித்து அசோதரையைக் கைப்பற்றிக்கொண்டார்.

உடனே மலையரசனாகும் சுப்பபுத்தி மண்முகவாகை யணுகி அரசே, எனது புத்திரி அசோதரை பிறந்தகாலத்தில ஓர் பெரியோன் சாக்கைய கணிதர் வந்து குழந்தை பிறந்த காலவரைகளைக் கணக்கிட்டு இம்மகவை மணம்புரியும் மணாளன் மனோதிடமும், ஞானோதயனுமாக விளங்குவதன்றி அவன் கரங்களால் பூமியைப் பரித்து வருத்த வித்தை விதைக்கினு முளைக்கும். பட்டமரத்தை நாட்டினுந் துளிர்க்கும். அந்த காட்சியே எக்காலும் நித்திய மங்களமாக வழங்குமென்று கூறியிருக்கின்றார். அதையும் நான் சோதிக்கவேண்டியதா யிருக்கின்றதே யென்றான்.

அம்மொழியைக் கேட்ட மண்முகவாகுக கலக்கமுற்று வருத்த வித்து முளைப்பதும், பட்டமரந் துளிர்ப்பதும இயல்பல்லவே. ஆயினும் சித்தார்த்தி குழந்தையாயிருந்தகாலத்தில் கன்றீனாப் பசுவும் பாலசுரந் தூட்டியிருப்பதால் இதையும் பார்ப்போமென்றுன்னி மைந்தனையணுகிக் குழந்தாய் மலையரசன் புத்திரி அசோதரைக்கு நீர் உரிய கணவனாயின் வருத்தவித்து முளைக்கவும், பட்டமரந் துளிர்க்கவும்வேண்டு மென்கின்றான். இது கூடுஞ்செயலோ வென்றான். அதற்கு வாலறிஞன் நகைத்து தந்தையே, அவர்கள் மனோரம்மியப்படி சோதித்துக்கொள்ளட்டு மென்றார்.

மண்முகவாகு பூரித்துக் கிளை சமூகங்களாகும் அமாத்தியர், சாக்கையர், சேனாதிபதியர், தூதுவர், சாரணர், காரணக் கிளைஞர், கடைகாப்பாளர், நகரமாக்கள், படைத்தலைவர், யானைவீரர், அடுத்த நட்டாளர், மடைத்தொழிலாளர், மருத்துவமாக்கள், கணித கலைஞர், உயர்குடை வேந்தர், முற்றும் சுற்றத்தவர் யாவர்க்கும் மங்கலமுரச மறிவித்து சகலரையும் வரும்படிச் செய்தான்.

அக்கால் மலையரசனாகும் சுப்பபுத்தி தனது பார்ப்பதி அசோதரையை மண்முகவாகின் அரண்மனைக்குக்கொண்டுவராமலும், தன்னரணில் வைக்காமலும், மணாளன் மனைக்கு மீரைங்காதவழியில்கொண்டுவந்து நிறுத்திவிட்டு வாலறிஞன் வருத்த விதைகளையும், பட்டமரத்தையுந் துளிர்ப்பிக்கும்வரையில் புதல்வியை யழைத்துவருவதில்லை யென்று மணாளன் வருகைக் கெதிர்பார்த்திருந்தான்.

இதன் விருத்தாந்தத்தை யுணர்ந்த பெரியோர்கள் மண்முகனை யணுகி தலைத்தாரே வந்தே, தமது புதல்வர் சகல வரசர்களையுஞ் செயித்து மலையரசன் புதல்வியைக் கைப்பற்றிக்கொண்டபோதே அசோதரைத் தமதரணில் வந்து சேரவேண்டியதிருக்க அவை தவிர்ந்து வருத்த வித்து

முளைப்பதும், பட்டமரந் துளிர்ப்பதுமாகிய போக்குகள் நேரிட்டக் காரணமியாதென வுசாவினார்கள்.

அதைக்கேட்ட மண்முகவாகு பெரியோர்களை யமர்த்தி அன்பர்களே, என் மனைவி மாயாதேவி சித்தார்த்தியைக் கருப்பையிற் றாங்குமுன் ஓர் சொப்பனங்கண்டு சொல்லினள். அதாவது தான் நித்திரை செய்யுங்கால் ஓர் சிறிய வெள்ளையானையின் குட்டி சுயம்பிரகாச வடிவமாய்த் தன் வயிற்றில் நுழைந்ததென்பதே.

இக்கனவையும் நினைவையு மறியவேண்டி அசித்த சாக்கையனை யழைத்து மாயாதேவியின் சொற்பனத்தை வெளியிட்டேன் அவர் நிதானித்து முகமலர்ச்சியுடன் அரசே, உமக்கோர் ஆண்குழந்தை பிறக்கும் அது யானையினூரத்தைப்பெற்று ஞானசூரியன்போற் பிரகாசிக்குமென்று சொல்லிப்போய்விட்டார். அதேசாக்கையர் அசோதரை பிறந்த காலக் கணிதங்களை வகுத்து இவ்வற்புதக்காட்சிகளையுங் குறிப்பிட்டிருக்கின்றார். ஆதலின் நாமனைவரும் மங்கல முரசுடன் மலையாசன றங்கியிருக்குமிடத்திற சென்று நித்திய சகுனங்களைக் காண்பதுவே காட்சியென்றான்.

உடனே அரசவகுப்பார் பதினெண்மரும் சக்கிரவர்த்தித் திருமகனும் மங்கலமுரசமதிர்ப்ப, மணக்கோலத்துடன் மலையரசன் தங்கியுள்ள விடத்திற் சென்று கலந்தார்கள்.

அப்போ தவ்விடமிருந்தவர்களிற் சிலர் பலதானியங்களையும் வருத்துவைத்துக்கொண்டிருந்ததுடன் பட்டமரத்திற்கு பதிலாய்ப் பூணிலா உலக்கையையுங் கொண்டுவந்து சித்தார்த்தி கரத்திலளித்து விதைகளை பூமியில் விதைப்பதுடன் இப்பட்டமரமாகும் உலக்கைக்கோலையும் பூமியில் நாட்டுங்கோளென்று வேண்டினார்கள்.

வாலறிஞனவற்றைக் கரத்திலேந்தி பூமியைத் திருத்தி விதைகளை விதைத்து உலக்கையையும் பூமியிலூன்றினார்.

* பதின் கடிகைப்போதுள் பலதானியங்களும் முளை தோன்றியதுடன் உலக்கையும் கலலாவிலைக் கொழுந்திட்டு வளர்ந்தது.

அதைக்கண்ட வரசர்களும் பெரியோர்களு மாட்சரியங்கொண்டு நிற்குங்கால் மணமகன் மணாளியின் கரத்தைப்பற்றி இரதமூர்ந்து நூதன மாளிகையைச் சேர்ந்தார்.

அவ்விடம் வந்திருந்த பெரியோர்கள் வருத்தவித்து முளைத்ததைப் பாலி யென்றும, உலக்கைக் கொழுந்துவிட்டதைப் பின்னடி யென்றும்

---

* மணிமேகலை.— அகமெய்யருளிய வறவாழியாளனம், பகவன தாணையிற் பண்மரம் பூர்க்கும்

பாதுபலிநாயனார் வடபேரிதி.

யசப்பதுகேகலைக்காரிகை சூத்திரம்.— வண்டுலக்கை பூத்தார் வலங்கொழு செந்தளிர் சேய்வடிவேபோலத், தண்டளிர் பூம்பிண்டித் தழையோங்க மாமணைமுன் மணந்தோன் யாரே, தண்டளிர்பூம்பிண்டி தழையோங்க வந்தகம், பண்டைவினைகழற்றும் பாங்குபல மொழிந்து படக்தோனன்றோ.

வேதவாய் மேன்மகனும் வேந்தன்மடமகளும், நீதியாற் சேர்ந்து நிகழ்ந்த நெடுங்குலம்போல், ஆதிசால்பாவு மரசர் வுயர்பாவும், ஒதியவா றேதவருட்பாவா யோங்கிற்றே.

சீவகசிந்தாமணி நாமக இலம்பகம்.— தொத்தணிபிண்டி தொலைந்தற வீழ்ந்ததென், முத்தணிமாலை முடிக்கிடந்தொத்ததன் றன்வழியே முளையோங்குபு, வைத்ததுபோல வளர்ந்ததை யன்றே

பெயரளித்து * பதினாறு வயதிற்கு மேற்பட்டக் குமாரனும், பனிரண்டு வயதிற்கு மேற்பட்ட குமாரியும் சுகவாழ்க்கையுற்றதை யநுசரித்து பின்சந்ததியாரும் பதினாறு வயதுக்கு மேற்பட்ட குமாரர்களுக்கும், பனிரண்டு வயதிற்கு மேற்பட்ட குமரிகளுக்கும் விவாகம் நியமித்து நவதானிய முளைகள் எழும்பும் பாலிசோதனையோடு உலக்கையில் கல்லாசிலைக்கட்டி மங்கலபீடம் வகுத்துவந்தார்கள்.

அரசபுத்திரனும் அசோதரையும் முன்னரண்மனையைவிடுத்து தங்களுக்கென்றமைத்திருக்கும் சிங்காரமண்டபத்தை நாடி இரும்புமதில்வாயில், வெள்ளிமதில்வாயில், பொன்மதில்வாயில் மூன்றையுங் கடந்து மரகத மண்டபஞ்சேர்ந்து பளிக்கரை சப்பிரமஞ்சத்தில் சுகித்திருந்தார்கள்.

சுத்தவிதயன் தனது புத்திரனால் வருத்தவித்து முளைத்ததும் பட்டமரந் துளிர்த்ததுமாகிய வபூர்வசெயல்களைக்கண்டு திகைத்து இக்குழந்தையி னியல்பில் ஆச்சரியச்செயல்கள் தோன்றுகிறபடியால் நமதராசாங்கத்தை யொருபொருளா யெண்ணி நடத்துமோ அன்றேல் துரும்பென்றெண்ணி துறக்குமோவென்னும் அச்சங்கொண்டு உலர்ந்த உலக்கைத் துளிர்த்தபடியால் பிண்டிநாதனென்னு மற்றோர் பெயரளித்து தன் புத்திரன் மனதை சிற்றின்ப லீலா விநோதத்தி லாழ்த்திவைக்கவேண்டுமென்னும்நோக்கத்தினால் வீணையில் வல்லபமுள்ள ஊர்வசியென்னுமோர் குமரியையும், பரதநாட்டியத்தில் வல்லபமுள்ள அரம்பையென்னு மோர் குமரியையும், அபிநயத்தில் மிகுத்த திலோர்த்தமை யென்னு மோர் குமரியையும, சங்கீதத்தில் சாதுரிய மேனகை யென்னுங் குமரியையும தருவித்து அவர்களுக்கு வேண்டிய பரிசுகளளித்து நீங்கள் நால்வரும் சித்திரக்கூடத்திற்குச சென்று என் புத்திரன் மனதை ஆயாசத்திலுந் துக்கத்திலுஞ் செல்லவிடாமல் எக்காலுஞ் சுகபோக சிந்தையில் நிறுத்தி வீணையிலும், அபிநயத்திலும், சங்கீதத்திலும், நாட்டியத்திலும் மயக்கிவைத்திருக்கும்படி யாக்கியாபித்தான்.

அவ்வாக்கியத்தை சிரமேற்கொண்ட தோழிப்பெண்கள் நால்வரும் சித்திரக்கூடஞ் சேர்ந்து அசோதரைக் கேவல்புரிந்து வருவதுடன் அரம்பை தன்னாட்டியத்திலும், திலோர்த்தமை தன்னபிநயத்திலும், மேனகை தன் சங்கீதத்திலும், பிண்டிநாதனை மகிழ்ப்பித்திருந்த போதிலும் ஊர்வசிமட்டிலும தன் வீணையிற் றனக்கு நிகரொருவருமில்லையென்னும் மமதைகொண்டிருந்தாள். அதை யுணர்ந்த பிண்டிநாதன் ஓர்நாள் ஊர்வசியை யருகிலழைத்து வீணையை மீட்டும்படி யாக்கியாபித்தார். அவளும் வீணையைக் கையிலேந்தி வழாழ் முடுக்கி ஆ-சே-ம-பு-கு-சு-ச வென்னும் ஒலிவடிவ சப்த விசையால் வாசித்தனள்.

ஊர்வசி கரத்திலிருந்த வீணையைப் பிண்டிநாதன் கரத்திலேந்தி வீணையின் முதலாம் தொனியை மயிலிரைச்சல் போலும், இரண்டாமாம் தொனியை இடப தொனிபோலும், மூன்றாமாம் தொனியை ஆடு கரைதல்போலும், நான்காமாம் தொனியை கொக்குளைத்தல்போலும், ஐந்தாமாம் தொனியை குயிலோசைபோலும், ஆறும்யாம் தொனியை குதிரைகனைப்பைப்போலும், ஏழாம் யாம் தொனியை யானை வீரிப்புபோலும்

*முன்கலை திவாகரம்.--பதினாறாட்டைக் குமரனும் விதிவழி, பன்னீராட்டைக் குமரியுமாகி, யொத்த வன்பினு மொத்த நலத்தினும், கற்பகப் பிண்டி கற்பல னுதவ, வாகிய செய்யுந் தவத்தினு மவ்வழி, போக நுகர்வது போகபூமி.

அமைத்து மிடற்றால் குறலும், நாவினுற் றுத்தமும், அண்ணத்தாற் கைக்கிளையும், சிரத்தா லுழையும், நெற்றியால் விளியும், நெஞ்சால் விளரியும், மூக்காற் ருரமும ஆகும் ஏழிசைகளைப் பெருக்கி வாசிக்குங்கால் அவ்விடமுள்ளவர்களில் விழித்த கண்ணோர் விழித்த பார்வையிலும், மேனோக்கினோர் மேனோக்கிலும், நின்றவர்கள் இடம்விட்டுப் போகாமலும், அவரவர்கள் தேகங்கள் அசையாமலும், அயர்ந்துநின்றுவிட்டார்கள். மும்மதிலுக்கும் புறம்பேயுள்ளவர்கள் சபததாதுக்களாலெழாம் வீணையின் ஓசையைக் கேட்டு சித்திரகூடத்தில் வசிக்கும் கோபாலன் அதாவது அரச புத்திரன் வீணை வாசிக்கின்றானென்றறிந்து இசைகளின் சுகத்தால் வீணைகோபாலன் வீணைகோபாலன் எனக் கொண்டாடிச் சென்றார்கள்.

வீணைகோபாலன் வாசித்த வீணையின் நாதத்தையும், இசையையுங் கேட்ட ஊர்வசியானவள் தனது சிரத்தை கோபாலன் பாதத்திற்பட வணங்கி (சத்தாரி) சருவசீவர்களுக்கும் (ஆகம) ஒழுக்கத்தை யருளும் (பதநீ) நின் கமலபாதத்தை சிந்திக்கின்றேனென்றாள்.*

அன்றுமுதல் இந்த சிந்தனையைக் கேட்டவர்களும், வீணை கற்றவர்களும், வாரசுரம வழையும் விடுத்து சத்தாரி, ஆகம, பதநீ யாகிய ச-ரி-க-ம-ப-த-நீ என வீணைகோபாலனை சிந்திக்கும் சப்தவொலிகள் நிலைக்க ஏழாழ் முடிக்கி ஏழோசை யிசைத்து ஒலிவடிவ மாறலிசையால் வாசித்துவந்தார்கள்.

வீணைகோபாலன்வாசித்த ஏழாழிசையால்கேட்பவர்களுக்கு மனோலய வானந்தசுகமுண்டாகி இதயாக்கினிதணிவதற்கோர் கலைகருவியாக விளங்கினபடியால வீணைவிருத்த முதற்குருவானோர் ஓர்சங்கத்திருயிதத்தைக் கொடுக்குங் கலைக்கியானத்திறகு சங்கீதமென்னும் ஓர் பெயருண்டாயிற்று.

சக்கிரவர்த்தித் திருமகன் சங்கீதங் கோஷிக்குங்கால் அவர் முகம் பேரியாழ் முடிக்கி சாசறபுட மிடுங்கால சத்தியோசாத முகமாகவும், சகோடயாழ் முடிக்கி சாசற்புட மிடுங்கால் வாமமுகமாகவும, மகரயாழ் முடிக்கி சடபிதாபுத்திரமிடுங்கால் கோரமுகமாகவும, செங்கோட்டி யாழ் முடிக்கி சம்பத்து வெட்டமிடுங்கால தற்புருட முகமாகவும் ஆகிய சதுர் முக தோற்றங்க ளுண்டாயிற்று. அதனுற சித்தார்த்தரை † சதுர்முகன் சதுர்முகனென்று மழைத்தார்கள்.

சங்க யிதத்திலும், வீணை யபிநயத்திலுந் தினேதினே சுகித்து மலைமகள் லீலாவினோதனாய் துக்கமென்பது அணுவேனுந் தோற்றாமல் ஆண்டாண்டு நிகழ்ச்சியில் அசோதரைக்கு கருப்பமுண்டாகி அன்பின்

---

* பாலிசுரசாயுத்ய சுருதிசூத்திரம்.-சத்தாரி-ஆகம-பதநீ எனும் பாலி ஒலி மொழிகளை பாகித்து ச-ரி-க-ம-ப-த-நீ என சப்தசுர ஒலியால் வீணையை மீட்டி சிந்தித்தாள்.

† பின்கலை நிகண்டு.-தேனவிழ்த் தளிர்கவெல்லாஞ் - செவ்வழி பாடாநின்ற, பூனைகத் திலங்கு கஞ்சப் - பொகுட்டின்மீதே யொதுங்கும், நான்முகக் கடவுள் பாத - நாவினு னவிற்றி யேத்தி, மானவர்க் கியன்றபேரை - வகுத்திடுந்தொகுதி சொல்வாம்.

நன்னூல்.—பூமலியசோகின் புனைநிழலமர்ந்த, நான்முகன் றொழுது நன் கியம்புவ னெழுத்தே.

சீவகசிந்தாமணி பதிகம்.—கோனைக் களிற்றுத் தொடித்தேரி வுளிக்கடல்சூழ், வாண்மொய்த்த தானை யவன் தம்பியுந் தோழன்மாரும், பூண்மொய்த்த பொம்மன் மூலையாரும் புலந்துறப்ப, வீணைக்கிழவன் விருந்தார் கதிசென்றவாறும்.

பெருக்கும், ஆலிங்கன விருப்பு மதிகரித்துநிற்குங்கால் சதுர்முகர்க்கோர் சங்கை தோன்றிற்று, அதாவது தான் அறுசுவை புசிப்பிலும், அபிராய விழிப்பிலும், அணை சயனத்திலும் ஆனந்திக்கிருப்பதுபோல அரசுக்குள் ளடங்கியக் குடிகளும் இத்தகைய வானந்தத்தில் இருப்பார்களோ வென்பதேயாம்.

இவ்வகை சிரேஷ்டவெண்ணமுதித்தவுடன் அரசனை வரவழைத்து தந்தையே, நம்முடைய தேசக்குடிகளின் சுகாசுகங்களைக் கண்டறிய வேண்டிய விருப்புற்றிருக்கின்றேன் உத்திரவாகவேண்டுமென வினவினார்.

உடனே யரசன் திகைத்து மைந்தன் ஊர்வலம் வருங்கால் குடிகளின் அசுகபேதங் கண்களிற் றோற்றுமாயின் அதிக துக்கத்திற் றுறப்பாரென்னும் பீதியால் திருநகர் தெருவும் வீதிகளை யாவையும் அலங்கரிக்கச்செய்து மைந்தனுக்கு ஊர்வல வுத்திரவளித்தான்.

சித்தார்த்தி சதுர்முகன் சதுரங்க சேனைகள் சூழ ஊர்வலம் வருங்கால் வீதிகடோறும் வாழை, கமுகு, கரும்பு முதலியவைகளை நாட்டி பவழ தோரணம், முத்து தோரணங்க ளுயர்த்தி வீடுகடோறும் கற்புடை மாதர்க் கரங்களில் கர்ப்பூராலபேந்தி கனகம்பூ கன்னந் தாளி நிற்கவும். அசுபாவனையோர் எதிர்த்தோற்றாமல் எச்சரிக்கைக் கூறவும், பதாதி சேனைகள் வேறு பாக்குராமல் அரச பாக்கில் நிற்கும் ஜாக்கிரதையிலிருந்தும், ஓர் வீதியில் நரை திரை முதிர்ந்த ஓர் மனிதன் கூன் வளைந்து தடியூன்றி தள்ளாடி வருவதைக் கண்டவுடன் இரதத்தை நிறுத்தும்படி யாக்கியாபித்துக் கீழிறங்கி மூப்பனை யணுகி நீவிர் யாரென்றார். அவன் மூப்பினாற் கண்பஞ்சடைந்து செவியுந் தூர்ந்திருந்தபடியால் மறுமொழி யாதுங் கூறாமல் திகைத்து நின்றான்.

சித்தார்த்தி சதுர்முகன் அருகிலுள்ளவர்களை யழைத்து இஃது யாது. நம்போன்ற தேகியா அன்றேல் வேறு சீவனோவென வுசாவினார். அதற்கவர்கள் அரசனே, இவன் நம்மைப்போன்ற தேகியே ஆயினும் வயதேறி தளர்ந்து தள்ளாடுவதுடன் கண்களின் பார்வையும், செவிகளின் கேட்டலும் மடங்கிவிட்டதென்றார்கள்.

சதுர்முகனவர்களை நோக்கி நம்மைச் சூழ்ந்து நிற்கும் சகலதேகிகளு மின்னிலைமையடைவார்களோ வென்றார். ஆம் ஒவ்வோர் தேகமு மிவ்வகைத் தளர்வடையுமென்றார்கள்.

என் தேகமோ வென்றார். அரசே, உமக்கு மப்படியே யென்றார்கள்.

வாலறிஞன் சித்தங்கலங்கி ரதமூர்ந்து மற்றோர்வீதியி லேகுங்கால் ஓர் மேடையின்மீது காசரோகங்கொண்டவன் உட்கார்ந்துகொண்டு மேல் சுவாச வுபத்திரவத்தாலும், இருமலின் திணரலினாலும், கண்களில் நீரும் வாயிற் கோழையும் வடிய கைகளினால் மார்பை யமுக்கிக்கொண்டிருப்பதைக் கண்டு இரதத்தை விட்டிறங்கி உமக்கென்ன கஷ்டமென்றார். அவனுக்குள்ள மாரடைப்பின் உபத்திரவத்தால் மாறுத்திரமளிக்க ஏலாது தலைநிமிர்ந்துங் கவிழ்ந்துகொண்டான்.

அதைக்கண்ட சித்தார்த்தர் அருகிலுள்ளவர்களை நோக்கி இதன் காரணமென்னவென்றார். அதற்கவர்கள் அரசே, இவன் தேகரோகனாக

சுவாச ரோகத்தால் பிடிக்கப்பட்டு நிலைகுலைந் திருக்கின்றான். அதினாற் றங்கள் கேள்விக்கு உத்திரவளிக்கக்கூடாமல் திக்கிட்டுக் கவிழ்ந்துகொண்டா னென்றார்கள்.

ஆனால் மநுடசீவர்க ளெல்லோருக்கும் இத்தகைய உபத்திரவம் உண்டாகுமோ வென்றார். ஒவ்வோர் மநுடசீவர்களுக்கும் பற்பல வியாதிகள் தோன்றி உபத்திரவ மடைவதுண்டு யெனக் கூறினார்கள்.

எனக்கும் உங்களுக்கும் இவ்வகை உபத்திரவந் தோன்றுமோ வென்றார். அரசே. ஒவ்வோருடலிலும் வியாதி யுட்பிறந்து வாதிப்பது உள்ள சுபாவமாதலின் உமக்கும் எமக்கும் வியாதி தோன்றாமற்போகா தென்றார்கள்.

அவற்றைவினவி: சதுர்முகன் சற்றுதிகைத்துமறுபடியும் இரதமூர்ந்து மற்றோர்வீதியிற் செல்லுங்கால் பெருவெளிவழியே பாடையில் ஓர் பிரேதத்தைப் படுக்கிட்டு நான்குபேர் சுமந்துசெல்லவும், அவர்களுக்குப் பின் சிலக் கூட்டத்தார் அழுதுகொண்டு செல்லவுங் கண்டு சாரதியை நோக்கி நமது ரதத்தை வீதிவழி செலுத்தாது வெளிவழி செலுத்தி அதோ செல்லுங் கூட்டத்தாரைப பின்பற்றுமென்றார்.

உடனே சாரதி தனது ரதத்தை பிரேதத்தை யெடுத்துச்செல்லுங் கூட்டத்தாரிடம் நெருக்கியவுடன் அவர்களும் பிரேதத்தை வைத்துக்கொண்டு நின்றுவிட்டார்கள். திருமகன் ரதத்தை விட்டிறங்கி பாடையினருகிற் சென்று அவ்விடமுள்ளவர்களை நோக்கி இஃதென்ன கோரம் என்றார்.

அரசே, இவன் இறந்துவிட்டான் அடக்கஞ்செய்யப்போகிறோம் என்றார்கள்.

மனிதனே யிவ்வகை நிலமெய்க்கு வந்திருக்கின்றானா அன்றேல் வேறு சீவனோ வென்றார். மனிதனே, பேச்சும் மூச்சு மடங்கி மரண மடைந்தா னென்றார்கள்.

மரணமடைந்தால் மறுபடியு மெழுந்து பேசமாட்டானோ வென்றார்.

அவனுக்கு பேச்சும் மூச்சு மிருக்குமானால் இடுகாட்டுக் கெடுக்க மாட்டோ மென்றார்கள். இவன் வீடுவாசல பெண்சாதிபிள்ளைகளை மறந்துவிட்டானோ வென்றார்.

அவ்வகை மறந்ததினால் இவனை யிறந்தானென்று சொல்லுகிறோ மென்றார்கள்.

இறந்தவனென்றால் விழித்துப் பார்க்கானோ வென்றார்.

பார்க்குங் கண்ணும், கேட்குஞ் செவியும், முகரும் மூக்கும், பேசும் வாயும், ஊருந் தேகமும் ஓய்ந்துவிட்டபடியால் ஊரைவிட் டெடுத்துப்போய் இடுகாட்டி விடப்போகிறோ மென்றார்கள்.

இவனொருவனே இன்னிலமெய் யடைந்தானா அன்றேல் மநுடசீவர்கள் யாவரு மின்னிலமெ யடைவார்களோ வென்றார்.

ஒவ்வோர் மநுட சீவர்களும் இறந்தே தீரல்வேண்டும் என்றார்கள்.

ஆகையால் யானு மிவ்வகை யிறப்பேனோ வென்றார்.

ஒவ்வொருவரும் திகைத்து ஆம் நீரு மிறப்பீரென்றால் அரசபுத்திரன் பயந்து பிணிக்குள்ளாவரேல் சக்கிரவர்த்தி சினப்பாரென்னும் பீதியால் மாறுத்தரமளிக்காது மௌனத்திருந்தார்கள்.

மறுமொழிக் கிடைக்காததை யுணர்ந்த மன்னுபுத்திரன் தனக்கு மிதுவே முடிவாக்குமென்றெண்ணி சாரதியைநோக்கி நாம் கண்ட காட்சிகள் போதும். இரதத்தை யரண்மனைக்குச் செலுத்துமென்றார்.

உடனே சாரதி இரதத்தைத் திருப்பி சித்திர மாளிகைச் சேர்த்தான்.

இரும்பு மதில், வெள்ளி மதில், பொன் மதில் மூன்றையு முன்பு புகழ்ந்துசென்றவர் அன்று மூன்றையு மண்மதிலென் றிகழ்ந்து மாளிகைச் சேர்ந்தக்கால் அவர் முகத்தைக் கண்ட அசோதரை யருகிற்சென்று என் பிராணநாயகா! நீவிர் செல்காலிருந்த செந்தாமரை முகம் வருங்கால் வாடியதென்னோ வென வினவினாள்.

அதற்கு யசோதரைநாயகன் பெண்ணே நாமிதுவரை யடைந்த சுகத்திற்குமேல துக்கமிருப்பதைக்கண்டு வாட்டமுற்றேனென்றார்.

அவ்வகை துக்கத்திற்கு நான் காரணமோ வென்றாள். உம்மெய்யோ, தந்தை மெய்யோ, எம்மெய்யோ, காரணமென்றறியேன் என மறுமொழி கூறி நித்திய கடனை நிகழ்த்திவருங்கால் அசோதரைக்கோர் ஆண் குழந்தை பிறந்தது. அதைக் கேள்வியுற்ற மண்முகவாகு சித்திர மாளிகைச் சேர்ந்து மைந்தனையும், மகவையுங் கண்டு வீரவாகு சக்கிரவர்த்தி வம்மிஷவரிசையில் இராகுவாகுத் தோன்றிய குதூகலத்தால் சித்தார்த்தரை யணுகி நங்குடிகளுக்கு யாது செய்வது மென்றான்.

ஊர்வலம் வருங்காற் கண்ட மூப்பன் வருமையும் பிணியாளநிலைமையுந் தன்னுள்ளத்தைக் கவர்ந்திருப்பதால் மூப்பர்களுக்கு அன்னமும், ஆடையும், பிணியாளருக்கு மருந்து மளிக்கவேண்டுமென்றார்.

* சித்தார்த்தித் திருமகனுக்குக் குலமகன் பிறந்த குதூகலத்தால் தேசமெங்கும் பறையறைவித்து பிணியாளருக்கு மருந்தும் மூப்பர்களுக்கு அன்னமும் ஆடையு மளிக்கவேண்டிய அறச்சாலைகளையும் அவுஷதச் சாலைகளையுங் கட்டி அறச்செயலை நிலைக்கச்செய்தார்கள்.

† அறச்சாலைகளையும் அவுடதச்சாலைகளையும் நிருமித்த கருணையால் சித்தார்த்தரை தம்மராஜன் தம்மராஜனெனக் கொண்டாடினார்கள். குழவிபிறந்த மகிழ்வும் குடிகள்கொண்டாடும் புகழும் ஏககோஷத் திருந்தபோதிலும் தம்மராஜ னுள்ளம் ‡ பிணி, மூப்பு, சாக்காடென்னும் மூவகைத்துக்க விசாரணையி னின்றது.

---

*சீவகசிந்தாமணி—முத்தி.—கனகடல்சுவரச்செல்லுங் கணமழைத்தொகுதிபோலு, நனைமலர்ப் பிண்டிநாத னல்லறங் கொள்ளைசாற்றிப், புனைமுடி மன்னரீண்டிப் பொன்னெயிற் புறத்துவிட்டார், வினையுடைத் தின்ப வெள்ளம் விரும்பிய வேட்கையானே.

அடிசில்வைகளாயிரம் அறப்புறமு மாயிரம கொடியனார் செய்கோலமும் வைகறோரு மாயிர மடிவில்கம்மியர்களோடு மங்கலமு மாயிரம் ஒடிவிலைய ருயிரமோம்புவாரிஞேபவே.

† மணிமேகலை.—மட்டறச்சாலையு மருந்தினர்சாலையும், கட்டிடைச்சேவகக் காப்புடைத்தாக—

சிலப்பதிகாரம்.—ஆயுள் வேதருங் காலக் கணிதரும், பால்வகைத் தெரிந்த பன்முறை யிருக்கையும்.

‡ அருங்கலைச்செப்பு.—பிணிமூப்புச்சாக்கா டிவைமூன்று மாய்தற், றுணிபுற்று நின்றானிறை.

மூன்றாவது

# சித்தார்த்தர் வாய்மெய்விசாரிணைக் காதை.



தம்மராசன் வாய்மெய் விசாரிணையில்மூழ்கி தனதரிய தந்தையை வரவழைத்து எனதருமெய் தந்தையே, நமதாளுகைக் குட்பட்ட தேயங்களிலேனும் மற்று மிடங்களிலேனும் விவேகமிகுத்தக் கூட்டத்தார்களிருப்பார்களானால் அவர்களை வரவழைக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

உடனே மன்றுகவாரு தேசமெங்கும் பறையறைவித்து முதற் சங்கத்தைச்சார்ந்த விவேகிகளிற் சிலரை யழைத்து மைந்தனிடம் அனுப்பினான்.

அவர்களுஞ் சித்திரக்கூடஞ்சேர்ந்து சிற்றாசனைக்கண்டு சபாமண்டபத்தி லுட்கார்ந்து நகரவிசாரிணை முடிந்தவுடன் தம்மராசன் முன்சங்கத்தோரைநோக்கி பெரியோர்களே, தங்கள் சங்கத்தின் நோக்கமென்ன, வதன் பயன்யாதென வுசாவினார்.

எங்கள் சங்கததின் நோக்கம்* இறப்பும், பிறப்பும், உயர்வும், தாழ்வும், நன்மெயும், தீமெயும், பஞ்சபூதங்களால் உண்டானபடியால் பஞ்சபூதங்களையே வணங்கவேண்டுமென்பதே யாமென்றார்கள்

அங்ஙனம் வணங்குவதில் பயன் யாதென்றார். வணங்கிய பயன் யாதுமறியோமென்றார்கள். பஞ்சபூதங்களென்றால் அஃதெவைகளென்றார் நிலம், நீர், தீ, காற்று, வெளி யென்றார்கள். வெளியும் ஓர் பூதமாமோ வென்றார்.

மாறுத்திரங் கூறாமல் திகைத்துநின்றார்கள்.

பெரியோர்களே, பூதவிசாரிணை யிருக்கட்டும். சீவர்களுக்குப் பிணியணுகா மருந்தும், மூப்பணுகா நிலையும், மரணமடையா வழியும் ஏதேனு முண்டோவென்றார். அரசே, யவ்வகை ஏதுக்களை நாங்கள் கண்டதுமில்லை கேட்டதுமில்லை யென்றார்கள்.

ஆனாற் றாங்கட் போகலாமென் றனுப்பிவிட்டு இரண்டாவது சங்கத்தோர்களைத் தருவித்தார்.

அவர்களும் சித்திரகூட மணுகி சிற்றாசனைக்கண்டு சபாமண்டபத்தில் உட்கார்ந்து அரசே, எங்களை வரவழைத்தக் காரணம் யாதென வுசாவினார்கள்.

பெரியோர்களே, உங்கள் சங்கத்தின் நோக்கமும் அதன் பயனும் யாதென்றார்.

---

அருங்கலைச்செப்பு.
பூதச்சங்க வியல்.
இறப்பும் பிறப்பு மினியவைதீதுங்
குறிய வைம்பூதத்தியல்.
ஓங்க லொடுங்க லுயர்வு தாழ்த
லாங்கலைம் பூதத்தனர்.
தோற்றம் பூதமைந்தும் வணங்க
லாற்றலென்றே யுணர்.

அரசே, இறந்தபின் *மனிதன் மிருகமாகவும், மிருகம் மனிதனாகவும் பிறக்கமாட்டான். மனிதன் மனிதனாகவும், மிருகம் மிருகமாகவும் பிறக்கும். ஆதலின் ஒன்றை வணங்குவதால் பலனுமில்லை, வணங்காமலிருப்பதினால் கெடுதியுமில்லை யென்பதே எங்கள் சங்கத்தின் நோக்கம் என்றார்கள்.

பெரியோர்களே, மனிதன் மிருகமாகப் பிறக்கானென்பதையும், மிருகம் மனிதனாகப் பிறக்காதென்பதையும் எவ்வகையா லறிந்துகொண்டீர்களென்றார்.

அதனதன் உருவங்களே போதுமான சாட்சியென்றார்கள்.

ஆனால் மனிததேகத்தில் மாமிஷமும் எலும்பும் மிருகதேகத்தில் மண்ணும் மரமும் பொருந்தியிருக்குமோ வென்றார்.

உருவ பேதமே காரணமென்றார்கள்.

உருவபேதத்தால் பிறவிபேதத்தை எவ்வகையிற் கண்டறிந்தீர்கள் என்றார்.

கண்டறிந்த காரணங் கூறாமல் திகைத்து நின்றார்கள்.

பெரியோர்களே பிறவிபேதமிருக்கட்டும், பிறந்தபின் உண்டாகும் பிணியின் பேதங்களையும், மூப்பின் பேதங்களையும், மரணபேதங்களையும் கண்டதுண்டோ வென்றார்.

அரசே, சீவர்களுக்குண்டாகும் பிணிகளின் பேதங்களைக் கண்டுள்ளோம். ஆனால் மூப்பின் பேதங்களையும், மரண பேதங்களையும் காணவில்லை என்றார்கள்.

பிணிகளின் பேதங்களையும், அதன் உபத்திரவங்களையும், கண்டவர்களாகிய நீங்கள் அவைகளை நிவர்த்திக்கும் சிகிட்சா பேதங்களை ஏதேனுங் கண்டதுண்டோ வென்றார்.

அரசே, தற்காலந் தங்களா லேற்றியுள்ள வைத்தியசாலைகளின் சிகிட்சைகளைக் கண்டோமன்றி வேறு சிகிட்சை யறியோமென்றார்கள்.

பிணிகள் தோற்றும் பீடங்களையேனுங் கண்டதுண்டோ வென்றார்.

பிணிகளின் உற்பவ காரண மறியோமென்றார்கள்.

கண்காட்சியிற் றோன்றும் பிணியோற்பவ மறியாதார் பிறவியோற்பவ மறிந்தாற்போல் பேசுவது பேதைமையன்றோ வென்றார்.

பேதைமெய்யென் றொப்புக்கொண்டு அவ்வரவ னில்லஞ் சேர்ந்தார்கள்.

தம்மராசன் மூன்றாஞ் சங்கத்தோரை வரவழைத்து பெரியோர்களே, தங்கள் சங்கத்தின் உத்தேசமும் அதன் பயனும் யாதென்றார்.

---

அருங்கலைச்செப்பு.
இரண்டாஞ்சங்கவியல்.

மாண்ட மக்கள் விலங்குகளாகி
மீண்டும் பிறப்பதிலர்.

மரித்த விலங்கு மக்களாகி
விரித்துத் தோன்று விழல்.
வணக்க மதினால் வருபயனில்லை
இணங்காததுவே நிலை.

அரசே, எங்கள் உத்தேசம் மனிதனுக்கு யாதொரு* சுகமும் இடையாது. பிறப்பது ஆதி, இறப்பது அந்தம், இறந்தபின் சகலமும் சூன்யமாதலால் விழித்திருப்பவன் சூனியத்தை விசாரிப்பதில் யாதொரு சுகமுங் கிடையாதென்பதே என்றார்கள்.

பெரியோர்களே, உலகத்தில் ஆணுக்குப் பெண்ணும், நன்மெய்க்குத் தின்மெயும், சூட்டிற்கு குளிர்ச்சியும், இருளுக்குப் பகலும், தூக்கத்திற்கு விழிப்பும் எதிரடையாகத் தோன்றுவதுபோல் துக்கத்திற்கு சுகம் எதிரடையாகவேண்டுமே. அங்ஙன மிராததற்குக் காரணம் என்னை என்றார். மனிதன் பிறந்ததுமுதல் இறக்குமளவும் துக்கமே தோற்றமாதலின் சுகமில்லை என்பது கருத்தா மென்றார்கள்.

உங்களுக்குச் சுகமென்னும் உணர்ச்சித் தோன்றியவிடத்தில் துக்கம் விளங்கிற்றா அன்று வேறாகத் தோன்றிற்றா வென்றார்.

சுக முணருமிடத்தில் துக்கம் விளங்குகிறதென்றார்கள்.

மனிதனுக்கு சுகமில்லையென்று கூறுங் காரணமென்னை என்றார்.

விசாரணைக் குறைவேயென் றொப்புக்கொண்டார்கள்.

ஆதி யென்னுந் தோற்றம் உண்டானபோதே அந்த மென்னும் முடிவு மிருப்பதாக விளங்குகின்றது. ஆதலின் தாங்கள் கூறும் பிறப்பிற்கும் இறப்பிற்குங் காரணம் எதுவென வுசாவினார்.

அதன் காரணங்களை யறியோமென்றார்கள்.

பெரியோர்களே தங்கட் கண்களில் தோற்றும் பொருட்களை சூன்ய மென்குறீர்களா தோற்றாப்பொருட்களை சூன்ய மென்குறீர்களா வென்றார்.

தோற்றும் பொருட்கள் மறைந்தவிடத்தை சூன்யமென்றே மென்றார்கள்.

சூனியத்தினின்று ஏதேனுந் தோற்றுமோவென்றார்.

அதன் விளக்கமறியாது விழித்தார்கள்.

பெரியோர்களே, உங்களுக்குள்ள சூனிய மிருக்கட்டும் பிணிகளின் உற்பவம் ஏதேனுங் கண்டீர்களோ வென்றார்.

அரசே, உபத்திரவங் கண்டு தீரும் பிணி யொன்று, உபத்திரவங் கண்டு கொல்லும் பிணியொன்று ஆக இரண்டு பிணிகளைக் கண்டுள்ளோ மென்றார்கள்.

பெரியோர்களே, இவ்விரண்டுவகைப் பிணிகளின் உற்பவங்களைக் கண்டீர்களோவென்றார்.

அறியோமென்றார்கள்.

மனிதன் மூப்படையுங் காரணத்தையேனுங் கண்டதுண்டோ வென்றார்.

அதையு மறியோமென்றார்கள்.

---

அருங்கலைச்செப்பு.
மூன்றாஞ் சங்கவியல்.
மக்கட் பிறப்பித் சுகமு மில்லை
இக்கட்டிடுகுறையால்.

பிறப்பதாதி யிறப்பதந்தங்
குறிப்பாம் பாழ்நிலையால்.
விழிப்போன்யாழை வினவுவதெல்லா
பழிப்பின் பகுதியேயாம். [ம்

மஸ்ரிகன் மாளாத்திற் குள்ளாகுங் காரணங்களையேனுங் கண்டதுண்டோ வென்றார்.

அதையு மறியோமென்றார்கள்.

பெரியோர்களே, தாங்கள் கொண்ட விசாரிணையால் உங்களுக்கேனும், உங்களைச் சார்ந்தவர்களுக்கேனும் பயனுண்டோவென்றார்.

யாதொரு பயனையு மறியோ மென்றார்கள்.

பயனற்ற சங்கத்தைச் சாருதலும், பயனற்றவார்த்தைகளைப் பேசுதலும், பாழாதலின் பெரியோர்களே தங்கடங்க ளில்லஞ்சேருங்களென்றனுப்பிவிட்டார்.

சக்கிரவர்த்தித் திருமகன் நான்காம் சங்கத்தோரை வரவழைத்து ஆசனமீய்ந்து பெரியோர்களே, தங்கள் சங்கத்தின் நோக்கம் யாது, அச்சங்கத்தால் தாங்க ளடைந்த பலன்க ளென்னை அதை விவரிக்கவேண்டுமென்றார்.

அரசே, எங்கள் சங்கத்தின் நோக்கம் யாதென்பீரேல், *சீவர்களுக்கு ஆதியுங்கிடையாது, அந்தமுங் கிடையாது, நன்மையுங்கிடையாது, தீமையுங்கிடையாது எல்லாம் தானே வீற்றுக்கொள்ளுவதால் யாவுந் தற்செயலென்றே கொள்ளுவதாக்குமென்றார்கள்.

தன்மராஜன் அங்கு வந்துள்ள ரேவார் பெரியவரைநோக்கி பெரியோய் உமக்கு வயதென்னை வென்றார்.

அரசே, எனக்கு நாற்பது வயதாகின்றதென்றார். இவ்வயதை உமது ஆதிவுற்பவங்கண்டு சொல்லுகின்றீரா அன்றேல் அனுதியினின்று சொல்லுகின்றீரா வென்றார்.

அரசே, என் ஆதிவுற்பவங்கொண்டே சொல்லுகின்றேனென்றார்.

பெரியோய் அங்ஙனம் சீவர்களுக்கு ஆதியுமில்லை அந்தமு மில்லையென்று கூறிய கருத்தென்னையென்றார்.

அரசே, சீவர்களுக்கு ஆதியுங் கிடையாது அந்தமுங் கிடையாதென்றார்கள்.

பெரியோர்களே, சீவர்களென்றால் ரூபிகளா அரூபிகளாவென்றார்.

அரசே, அரூபியே என்றார்கள்.

பெரியோர்களே, சீவர்கள் அரூபவஸ்துக்களாயின் மநுடசீவர்களென்றும் மிருகசீவர்களென்றும் ரூபங்களைக் குறிக்குங் காரணம் யாதென்றார்.

அரசே, தேகத்தை யாட்டுவது சீவனையன்றி தேகஞ்சீவனாகாதே என்றார்கள்.

பெரியோர்களே, உங்கள் கண்ணினால் தேகம் ஆடுவதைக் கண்டீர்களா தேகத்தை ஆட்டிவைப்பதைக் கண்டீர்களா வென்றார்.

அரசே, தேகம் ஆடுவதையே கண்டோமென்றார்கள்.

---

அருங்கலைச்செப்பு.
நான்காத் சங்க வியல்.
* தோற்றும் பிறப்பின் முதலுமில்லை
யாற்றுங் கடையுமது.

நன்மையுமில்லைத் தீமையுமில்லை
புன்மையூர் சேர்க்கது.
முற்செயல் யாவை யூர்ந்து மேற்றல்
தற்செயலென்றே யறி.

பெரியோர்களே, தேகத்தை யாட்டிவைப்பது ஓர் சீவனென்று கூறிப்பது காணாமற் கூறும் பொய்யல்லவோ வென்றார்.

அரசே, யாங்கள் கூறும் வழக்கமென்றார்கள்.

பெரியோர்களே, அறியாத சங்கதிகளை யடுத்துச்சொல்லி அயலாரைக் கெடுக்கும் பொய்யே இன்மெயாயிருக்க நன்மெயுமில்லை இன்மெயுமில்லையென்று கூறுவது பெரும் பொய்யல்லவோ வென்றார்.

அரசே, நன்மெயுந் இன்மெயு மீதெனவிளங்காமற் கூறுவது பொய்யாமோ வென்றார்கள்.

பெரியோர்களே, விவேகிகளுக்கும் ஓர் சங்கம் வேண்டும், கள்ளர்களுக்கும் ஓர் சங்கம் வேண்டும், ஆதலின் தாங்கள் கூடியுள்ளது யாது சங்கமென்றார்.

அரசே, யாங்கள் கூடியுள்ளது விவேகிகள் சங்கமென்றார்கள்.

பெரியோர்களே, தங்கள் சங்கத்தை கள்ளர் சங்கமென்றாலோ வென்றார்.

அரசே, யாங்கள் கள்ளர்களல்லவே என்றாகள்.

பெரியோர்களே, கள்ளர்களென்றால் தீயச்செயலை யுடையவர்களோ வென்றார்.

அரசே, ஆமென்றார்கள்.

அப்போது நன்மெயுமில்லை தீமெயுமில்லை யென்பது உங்கள் வழக்கமோ வென்றார்.

அதற்கும் ஆமென்றார்கள்.

ஆதியுமிலலை, அந்தமுமில்லை, நன்மெயுமில்லை, தீமெயுமில்லை யென்று சொலலித்திரிவது உங்கள் சங்கத்தின் இயல்புபோலு மென்றார்.

மாறுத்திரங் கூறாமல் மௌனத்திலிருந்தார்கள்.

பெரியோர்களே, தாஙக ளொவ்வொருவரும் சொன்னதைச்சொல்லுங் கிள்ளைபோன்றவர்களாதலின் உங்களால் உள்ள சங்கை விளங்காது தங்கடங்க ளில்லஞ்சேர்ந்து ஆதி யந்தத்தை யாராய்ச்சிசெய்யுங்கோளென்றனுப்பிவிட்டார்.

அதன்பின் சித்தார்த்தி சிறுவர் ஐந்தாவது சங்கத்தோர்களை வரவழைத்து பெரியோர்களே, தங்கள் சங்கத்தின் நோக்கமும் அதன் பயனும யாதென வுசாவினார்.

ஐந்தாவது சங்கத்தார் சிறுவரைநோக்கி அரசே, எங்கள் சங்கத்தின் நோக்கம் *புசிபபை விரும்பாதவனும், தாகத்தை யடக்குவோனும், அக்கினியின் கொதிப்பை சகிபபவனும், சூரியன் வெப்பத்தைத் தாங்குகிறவனும் எக்காலும் சுகமடைவான். இவைகளைத் தாங்காதவன் சுகமடையமாட்டானென்பதே என்றார்கள்.

பெரியோர்களே, தங்கள் தேகங்களிற் பசி தானே தோற்றுகின்றதா அன்றேல் பசியைத் தாங்கள் தோற்றவைக்கின்றீர்களாவென்றார்.

அருங்கலைச்செப்பு.
ஐந்தாம் சங்க வியல்.

| | |
|---|---|
| * உண்ணாதுண்ணை யொழிக்குமனத் கள்ளமகற்றுங் கரை. [தான் | தீயவெப்பந் தாங்குந் தரியல் ஆய சுக மென்றுணர். இத்திர வொடுக்க மேவா தொருவன் பற்றுஞ் சுகமற்றது. |

அரசே, பசி தானே தோற்றுகிறதென்றார்கள்.

அங்ஙனந் தானேதோற்றும் பசிக்குப் புசிப்பை விரும்பாமலிருக்கக்கூடுமோ வென்றார்.

புசிப்பை விரும்பாமலிருந்தால் பசி யெடுக்காமலிருக்கு மென்பது சங்கத்தின் கருத்தென்றார்கள்.

தற்காலந் தாங்கள் புசிப்புண்டு தேகத்தைப போஷிக்கின்றீர்களா வென்றார்.

அரசே, புசிப்புண்டு தேகத்தைப் போஷிக்கின்றோமென்றார்கள்.

அங்ஙனம் புசிப்பை விரும்பாதிருத்தல் என்பதின் கருத்தென்னை என்றார்.

அஃதெங்கள் முன்னோர் கருத்தென்றார்கள்.

பெரியோர்களே, முன்னோர் கருத்தை யுணராமல் பின்னோராகச் சொல்லிக்கொண்டு திரிவது உங்கள கருத்துபோலு மென்றார்.

ஆமென்றார்கள்.

பெரியோர்களே, உங்கள் சங்கத்தோர்க்குப் பிணி, மூப்பு, சாக்காடு தோன்றுவதில்லையோ வென்றார்.

அரசே, மூன்றுந் தோன்றுவதுண்டு என்றார்கள்.

பெரியோர்களே, இம்மூன்றின் உபத்திரவத்தால் உங்களுக்குத் துக்கம் உண்டா இல்லையா வென்றார்.

அரசே, இம்மூன்றினாலும் எங்களுக்குத் துக்கம் உண்டு என்றார்கள்.

பெரியோர்களே, தங்கள் சங்கத்தோர் கருத்தின்படி நடந்தால் எக்காலுந் துக்கமணுகாவென்று கூறிய உங்களுக்கு யிம்மூன்றினால் துக்கமணுகுங் காரணமென்னை என்றார்.

அரசே, எங்கள் சங்கத்தோர் நோக்கத்தைச் சொல்லிக்கொண்டு வருகிறோமன்றி அதன் பலனை யறியோமென்றார்கள்.

பெரியோர்களே, வியாபார சங்கமென்று சிலர்கூடி வியாபாரம் நடத்துவதில் ஓர் பயனைக் கருதி நடத்துகின்றார்களா பயனைக் கருதாமல் நடத்துகின்றார்களா. பூமியை விருத்திசெய்யும் ஓர் சங்கத்தார் உழுது பண்படுத்தி விதைப்பதில் அப்பயிற்றின் பயனைக் கருதி விதைக்கின்றார்களா கருதாமல் விதைக்கின்றார்களாவென் றாராயுங்கால் ஓர் பயனையும் அதன் சுகத்தையுங் கருதியே செய்துவருவது கண்கண்ட காட்சியாகும்.

அங்ஙனமுள்ள தாங்கள் சங்கத்தின் கருத்தை சொல்லிக்கொண்டு அதன் பயனறியோமென்பது பாழல்லையோ வென்றார்.

அரசே, பயனற்ற சங்கம் பாழேயென்றொப்புக்கொண்டார்கள்.

பெரியோர்களே, தாபரங்களுக்கும் ஓர் சங்கமுண்டு, பட்சிகளுக்கும் ஓர் சங்கமுண்டு, மிருகங்களுக்குமோர் சங்கமுண்டு, மக்களுக்கும் ஓர் சங்கமுண்டு. இவைகளுள் தாபரசங்கமமாகுந் தோப்புக்களினால் பட்சிகளுக்கும், மிருகங்களுக்கும், மக்களுக்கும் நிழலளிப்பதன்றி காய் கனி கிழங்குகளீய்ந்துத் தாங்களும் விருத்தியடைகின்றது.

பட்சிகளின் சங்கங்களோ ஒன்றுகூடிக் கூச்சலிட்டுத் தங்களினங்களைக் காத்துக்கொள்ளுகின்றது. மிருகங்களோ அதனதன் வகுப்பில்

ஒன்றுகூடித் தங்களைக் காத்துக்கொள்ளுகின்றது. மக்கள்சங்கமென்று கூடி யாதொரு பயனுமடையவில்லையென்பது பரிதாபமே.

ஆயினும் பெரியோர்கள் பயனற்ற சங்கத்தை நாட்டிப் பாழடைந்ததைப்போல் சிறுவர்களையும் பாழடையவிடாமல் பயனடையுஞ்சங்கத்திற் சேருங்களென்றோதி அவர்களையு மவர்களில்லங்களுக்கனுப்பிவிட்டார்.

வீணைகோபாலன் ஐந்து சங்கத்தோர்களையுந் தருவித்து விசாரிணைச் செய்தவற்றில் யாதும்விளங்காததால் தந்தைக்கு வேவுவிடுத்து மற்றும் விதரண சங்கத்தோர் வேறுளரோவென் றுசாவினர்.

அவற்றிற்கு சக்கிரவர்த்தியார் சற்று நிதானித்து தனது மூதாதை கலிவாகுச் சக்கிரவர்த்தியின் வம்மிஷவரிசையோர்களாகிய சாக்கையர்களே ஆறாவது கடைச்சங்கத்தோர்களாக நின்று கணிதாதிகளை விளக்கிவருகின்றபடியால் அவர்களிற் சில பெரியோர்களைத் தருவிக்கவேண்டுமென்றெண்ணி மிக்கோர்களை வரவழைத்து சாக்காய் நமது குழந்தை ஊர்வலஞ்சென்றநாள் முதல் தனக்கேதோ வோர் சங்கை தோன்றி தேசங்களிலுள்ள ஐந்து சங்கத்தோர்களையுந் தருவித்து வுசாவியும் தனதுசங்கை நிவர்த்தியாகாமல் மற்றுமுளரோவென்றேவினர். அதுகண்டு தங்களை வரவழைத்தேன். நீவிரு மவ்விடஞ்சென்று குழந்தைக்குற்ற சங்கையை விளக்குவதுடன் சித்திரமாளிகையை விட்டு வெளியேறாதிருக்கும் விதாணைகளை யூட்டி இளவரசை நிலைபெறச் செய்யுங்களென்றனுப்பினன்.

சாக்காக்களும் சக்கிரவர்த்தியி னாக்கினைப்படி சித்திரமாளிகைச் சென்று சித்தார்த்தரைத் தெரிசித்து ஆசனத்திருந்து அரசே, எங்களைத் தருவித்தக் காரணம் யாதென வினவினார்கள்.

பெரியோர்களே, தங்கள் சங்கத்தின் நோக்கங்களையும் அதன் பயன்களையும் அறியவேண்டியவனா யிருக்கின்றேன் விளக்குங்களென்றார்.

அரசே, எங்கள் சங்கத்தின் நோக்கமும் அதன் பயனும் யாதென்பீரேல்:—

ஒன்பது கிரகங்கள் கூடிநடத்துஞ் செயல்களே உலகத்தில் பொருந்தும் நிகழ்ச்சியென்றும் ஒவ்வோர் காயங்களி னிகழ்ச்சியும் நன்மெய் தின்மெயும் தோற்ற வொடுக்கங்கள் யாவும் நவக்கோட்களின் ஆட்டங்களென்றறிந்து அதன்மேறை நடந்துவருகிறோமென்றார்கள்.

கௌதம சிறுவர் பெரியோர்களை நோக்கி ஐயன்மீர் உலக பொருத்தமும் காயங்களும் நன்மெய் தின்மெய்களும் தோற்ற வொடுக்கங்களுமாகிய நிகழ்ச்சிகள் யாவும் நவக்கோட்களின் ஆட்டமென்றால் அச்செயல்கள் ஏதுக்குத்தக்க நிகழ்ச்சியா, நிகழ்ச்சிக்குத்தக்க யேதுவாவென்றார்.

அரசே, சருவசெயலும் நவக்கோட்களின் நிகழ்ச்சியென்றார்கள்.

பெரியோர்களே, சருவ நிகழ்ச்சிகளுக்கும் நவக்கோட்களே ஏதுவென்பீர்களா வென்றார்.

அரசே, சருவ நிகழ்ச்சிகளுக்கும் நவக்கோள்கள்தான் ஏதுவென்றார்கள்.

பெரியோர்களே, நன்மெய் தின்மெய்க ளிரண்டிற்கும் நவக்கோட்களை ஏதுவென்பீர்களாவென்றார்.

அரசே, தீக்கோட்கள் நோக்கமுறுங்கால் தீயபலனையும், நற்கோட்கள் நோக்கமுறுங்கால் நல்ல பலனையுந் தருமென்றார்கள்.

பெரியோர்களே, நற்கோள் பார்வைக்கோ ரேதுவும், தீக்கோள் பார்வைக்கோ ரேதுவு மிருக்குமல்லவோ வென்றார்.

அரசே, அவைகளிரண்டிற்கும் நவக்கோட்களை ஏதுவென்றார்கள்.

பெரியோர்களே, தீக்கோட்களென்றும், நற்கோட்களென்றும் பகுப்புண்டானதற்கு ஏதுக்க ளெவை யென்றார்.

அரசே, அதனதன் செயல்களை ஏதுவென்றார்கள்.

பெரியோர்களே, தீச்செயலும், நற்செயலும் ஒழிந்தவிடத்தில் தீக்கோள் நற்கோளென்னும் பெயருண்டோவென்றார்.

மாறுத்திரங் கூறாமல் திகைத்துநின்றார்கள்.

பெரியோர்களே, தீக்கோட்கள் நல்லபலனையும், நற்கோட்கள் தீய பலனையுந் தாராவோ வென்றார்.

அரசே, அந்தந்த கிரகங்கள் நின்ற விராசிபேதத்தால் நற்கோட்கள் தீயபலனையும், தீக்கோட்கள் நல்லபலனையுந் தருமென்றார்கள்.

பெரியோர்களே, சருவ செயல்களுக்கும் நவக்கோட்களை ஏது வென்று முன்புகூறினீர்கள் இப்போது இராசியை ஏதுவாக்குகின்றீர்கள். ஆக இவ்விரண்டிலெவற்றை முக்கிய வேதுவாகக் கொள்ளலாமென்றார்.

அரசே, இராசிகளையும் ஏதுவென்னலா மென்றார்கள்.

பெரியோர்களே, இராசிகளையும் கிரகங்களையும் ஏதுவாகக் கொள்ளுவதில் ஒவ்வொரு சீவராசிகளின் உற்பவங்களில் ஓரோராசியில் ஓரே கிரகம் பொருந்திவருமோ வென்றார்.

அரசே, காலத்திற்கு காலம் இராசிகளுங் கோட்களும் மாறுபட்டு வருமென்றார்கள்.

பெரியோர்களே, காலமும் ஒரேதுவாகும்போலுமென்றார்.

அரசே, கிரகங்களை முதலேதுவாகவும், இராசியை இரண்டாமேது வாகவும், காலத்தை மூன்றாமேதுவாகவுங்கொள்ளல் வேண்டுமென்றார்கள்.

பெரியோர்களே, காலத்தை யநுசரித்து இராசியும், இராசியை யநுசரித்துக் கிரகங்களு மிருக்கின்றபடியால் கிரகங்களை முதலேதுவாக எவ்வகையிற் கொள்ளலாமென்றார்.

அரசே, இம்மூன்றேதுக்களுள் முதலேதுவை யெதுவென்று எங்களுக்கும் விளங்கவில்லையே யென்றார்கள்.

பெரியோர்களே, மூன்று ஏதுக்களுக்கும் முதலேது அவரவர்கள் செயல்களென்றே விளங்குகிறதல்லவா வென்றார்.

அரசே, அவரவர்கள் செயல்களை முதலேதுக்களென்று நாங்களெவ்வகையிற் கண்டடைவோமென்றார்கள்.

பெரியோர்களே, தாங்களென்னைநாடி இவ்விடம் வந்தபின்பு இன்னகாலத்தில் வந்தோமென்று குறிப்பீர்களா வருதற்கு முன்பே காலத்தைக் குறிப்பீர்களா வென்றார்.

அரசே, இவ்விடம் வந்தபின்பே இக்காலத்தில் வந்தோமென்று குறிப்போமென்றார்கள்.

பெரியோர்களே, அதுகொண்டு தாங்கள் வந்தசெயல் முந்தியதா காலம் முந்தியதா வென்றார்.

அரசே, நாங்கள்வந்தசெயலே முந்தியதென்றறிந்தோமென்றார்கள்.

பெரியோர்களே, செயலைத் தழுவிக் காலமும், காலத்தைத் தழுவி இராசியும், இராசியைத்தழுவிக் கிரகமும் நிற்கின்றதல்லவாவென்றார்.

அரசே, அவரவர்கள் செய்கைகளையே முதலேதுவாகவும், காலத்தை இரண்டாமேதுவாகவும், இராசியை மூன்றாமேதுவாகவும், கிரகத்தை நான்காமேதுவாகவுங் கொள்ளுவோமானால் நமது மூதாதை கலிவாகு சக்கிரவர்த்தி வகுத்துள்ள கலியுலகக் கணிதங்கள் மாறுபடுமல்லவோ வென்றார்கள்.

பெரியோர்களே, தங்கட் கணிதங்களை யான் மாற்றுவதற்கு வரவில்லை முன்செயலைக்கொண்டு காலமுங் கணிதமும் விளங்குகிறபடியால் முன்செயலை விட்டுக் காலமுங் கணிதமும் விளங்காதல்லவோவென்றார்.

அரசே, உலகத்தில் தோற்றும் பொருட்களின் உதயத்தைக்கொண்டு பலன்களை கணிக்கின்றோமன்றி அவைகள் தோற்றுஞ் செயலையறியோமென்றார்கள்.

பெரியோர்களே,* ஒவ்வோர் சீவராசிகளின் உதயங்களுக்கு வேறு வேறு இராசிகளும், வேறுவேறு கிரகங்களும் மாறுகொண்டு தேருருளைப் போற் சுழன்றுவருகிறபடியால் முன் செயல்களை ஏதுக்களாகவும் தோற்றங்களை நிகழ்ச்சிகளாகவும் வருவது விளங்கவில்லையா வென்றார்.

ஏதுக்குத் தக்க நிகழ்ச்சியென்பது செயலுக்குத்தக்கத் தோற்றமென்று விளக்கிய இவர் கலிவாகுச் சக்கிரவர்த்தியின்செயலே சித்தார்த்திச் சக்கிரவர்த்தியென் றுருக்கொண்டனரோ வென்னும் பீதியால் அரசே, நமது மூதாதை கலியுலகக் கணிதத்தில் தோற்றங்கண்டு எழுதிவரும் யாங்கள் செயலைக்கண்டு எவ்வகையிற் கவனிப்போமென்றார்கள்.

பெரியோர்களே, முன் செயல்களைக்கொண்டு பின்செயல்கள் தோற்றுகிறபடியால் உங்கள் முன்செயலைக்கொண்டு உங்கள் தோற்றத்தையும் பலனையுங் கணியுங்கோள். அப்பலன் முன் சுகச்செயலைப் பற்றி வருமாயின் பூர்வபுண்ணியமாம் சுபபலனும், அசுகச்செயல்பற்றி வருமாயின் பூர்வ பாவமாம் அசுபபலனு மடைவீர்களென் றோதி கலியுலகாதி சுகம் ஒழுக்கமே முக்கியமென்று கணித்து எண்ணைப் பூர்த்திசெய்யுங்கோளென் றுக்கியாபித்து அவரவர்க ளில்லங்களுக் கனுப்பிவிட்டார்.

சித்தார்த்தி சிறுவரிடம் சாக்காக்கள்விடைபெற்று தங்கடங்களில்லங்களிற் சேர்ந்து சக்கிரவர்த்தித்திருமகனால் போதித்த † ஒழுக்கத்தைப் பின்பற்றுவதால் ஊழ்வினையற்று ஜெனனத்திற் புண்ணியபலன் தோற்றமுணர்ந்து ஒவ்வொருவர் கணிதக் குறிப்பையும் ஒலிவடிவ பாலிபாஷையில் 'ஜநநீஜென்ம சௌக்கியாணும், வத்தநீ குலசம்பதாம், பதவிபூர்வ புண்யாணு' மென சுருதியாக ஏதுக்குத்தக்க நிகழ்ச்சியாகும் பூர்வச்செயலுக்குத் தக்க தோற்றங்களை விளக்கி ஒழுக்கத்தை விருத்திசெய்து கலிவாகுவின் கணிதத்தைப் பரவச்செய்துவந்தார்கள்.

தம்மராசனை ஆறு சங்கத்தோர்களையுந் தருவித்து பிணி, மூப்புச் சாக்காடென்னுநான்குவாய்மெய் விசாரிணையினின்றும் சங்கைவிளங்காமல் புசிப்பைவிரும்பாமலும், சயனங்கருதாமலும், நித்திரைபிடியாமலும், இடைவிடா விசாரிணையிலிருப்பதை யுணர்ந்த வேவுகார்கள் அரசனுக்குத் தெரிவிக்க அரசனும் பெருங்கவலை யுடையவனாய் பிள்ளை சித்திரமாளிகையைவிட்டு வெளியேறாவண்ணம் வேவுகார்களுக் கறிக்கையிட்டு மிக்கப் பாதுகாப்பில் வைத்திருந்தான்.

ஓர் நாளிரவு அரசபுத்திரனுடன் சயனித்திருந்த அசோதரைத் திடுக்கிட்டெழுந்து கணவனையுங் குழவியையுந் தழுவி என் பிராணநாயகா நீவிரெங்களிருவரையும் நீங்கி வெளியேறியதுபோலும், குழவியும் யானும் சயனத்துடன் பூமியில் இறங்குவதுபோலும் சொப்பனங்கண்டேன் இதன் பயன் யாதோ வறியேனென் றலறினாள்.

அதை யுணர்ந்த சித்தார்த்தர் அசோதரையைத் தழுவி பெண்ணே நீ யாதுக்கு அஞ்சுகின்றாய் அரசபத்தினிக்குள் சிறந்தவளாக விளங்குவாய் உன் அரணிநிலைக்கும் ஓர் தாழ்ச்சியுண்டாகும். யான்கொண்ட நோக்க நிலைக்கு ஒருக்காலுந் தாழ்ச்சிவராது. எக்காலும் அரணியென விளங்குவாய். அன்பே அஞ்சவேண்டாமென் றமர்த்தி நித்திரைக்கொள்ளும்படி செய்து தான் நித்திரைக்கொள்ளாமல்,

சீவர்களுக்குத் தோன்றும் பிணி மூப்பு சாக்காட்டின் துன்பங்களை யகற்றும் சுகவழியைக்கண்டு சீர்பெறச் செய்விக்கவேண்டுமென்னுங் காருண்ணியக் கயிறு ஒருபக்கமிழுக்க மனைவி மகவென்னும் பாசக்கயிறு ஓர்பக்க மிழுக்கத் திடங்கொண்டு உலகிலுள்ள சருவசீவர்களின் யீடேற்றத்தின் பாகம் மனைவி மகவுக்கும் பொருந்துமென் றுன்னி பாலிகலையில் கும்போபித மாதமென்றும், வடகலையில் குப்பமாதமென்றும், தென்கலையில் மாசிமாதமென்றும் வழங்கும் பௌர்ணமி நள்ளிரவில் வெளியேறும் வழிகளை நோக்குங்கால் ஒவ்வோர் வேவுகாரருந் தோழிகளும் எச்சரிக்கையில் விழித்திருப்பதைக்கண்டு புறம்போய் ‡பொன்மதில் வெள்ளிமதில் இரும்பு மதில் மூன்றையுங் காலினால மெறித்துத் தகர்த்து வெளியேறி குதிரைலயஞ் சென்று சன்னாவென்னும் அஸ்வசேவகனை யழைத்து பட்டத்து பரிக்கு சேணமிடச்சொன்னார். சேவகன் கலக்கமுற்று அரசே, தலைத்தாரைவேந்தருக்குத் தாமோ ரறிக்கையுஞ் செய்யாமல்;

---

அருங்கலைச்செப்பு.
ஆறவது சங்க வியல்.

* நவக்கோள் கூடி நடத்து மாண்பு
உவப்பி நிகழ்ச்சியது
ஆயக் கோட்க ளாட்ட மதுவே
காய நிகழ்ச்சி யெனல்
நன்றுந் தீதும் நவக்கோளாட்ட
மென்று முணர்வ தது
தோற்ற வொடுக்கம் யாவுங் கோட்க
ளாற்ற செயலென் றுணர்.

யாப்பருங்கலைக்காரிகை.—† ஆர் கலியுலகத்து மக்கட்கெல்லாம், ஓதலினன்றே வொழுக்க முடைமெய்.

ஒழுக்க விவரம் - சூளாமணி.—ஆதிநாளரசர் தங்களருங்குலமைந்தமாக்கி, யோர தீருலகின்மிக்க ஒழுக்கமுந் தொழிலுந் தோற்றித், தீதுதீர்ந்திருந்த பெம்மான் திருவடி சாரச்சென்று, நீதிநூற்றுலகங் காத்து நிலந்திரு மலரநின்றான்.

சீவகசிந்தாமணி.—‡ அடியுலக மேத்தி யலர்மாரி தூவ, முடியுலகமூர்த்தி யுறநிமிர்ந்தோனியாரே, முடியுலகமூர்த்தி யுறநிமிர்ந்தோன் மூன்று, கடி மதிலுங் கட்டவிழ்த்தகாவலநீயன்றே.

மூன்கலை திவாகரம்.—மும்மதில் பொன்னும் வெள்ளியு மிரும்பும், மன்ன *சிவன் முன்னழித்த முப்புரமே.

நிகழ்காலத்திரங்கல்.—தேனடரு மானந்த செங்கமலத் தாளருள, மானிடர்போல் மண்மிசையில் வந்த ததிசயமே.

„கலியுலக விவரம் - சூளாமணி.—மருங்கலவ புணர்த்த பின்னை வானக வளாகமெல்லாம், கருங்கலோன் றகன்றமேவார் கவித்தது கவித்தலோடு,மிருங்கலியுலகமெல்லா மிருள்கொள வெருவிநோக்கி, பொருங்கலி யரசர்தானை போக்கிடமற்றதன்றே.

மானிடராய் வந்துமரணமூப்புப் பிணியைத், தானறிய மும்மதிலைத் தாண்டலதிசயமே.

தாண்டித் தலங்கடந்து தலைமுடியைத் தானறுத்து, வெண்டுவிம்பாகாடு மேவலதிசயமே.

வீரசோழியம்.—மேருகிரி யிரண்டாமெனப்பணைத்த விருபுயங்கள், மாரனிதை யாவேட்டு மும்மதில்மிதித்தனவே.

நான்காவது

# சித்தார்த்தி மஹாராஜ துறவு காதை.



பிறைமுடி தரித்து வாகுவல்லயம்பூண்டு வெளியேறுங் காரணம் யாதோவென வணங்கி நின்றான்.

சக்கிரவர்த்தி திருமகன் சன்னனைக் கையமர்த்தி குதிரைக்கு சேணங்கட்டியவுடன் தானிவேறி விடியவதற்குமுன் விம்பசார நகரஞ்சேர்ந்து குதிரையைவிட்டிறங்கி தனது திங்கள்முடி வாகுவல்லயம் மார்பதக்க முதலிய யாவையுங் கழற்றி சன்னனிடங் கொடுத்து இவைகள் யாவையும் என் தந்தையிடஞ் செலுத்தி உமது மைந்தர் மூப்புப் பிணி சாக்காடென்னும் மூவரசர்கள்பேரில் யுத்தத்திற்குப் போயிருக்கின்றார். அவர்களை ஜெயித்து கூடியசீக்கிரம் இவ்விடம் வந்து அகன் ஜெயபேரி தொனியையும் ஆனந்த நிலையையுந் தங்களுக் கருளுவாரென்றறைந்து போய்விட்டதாக சொல்லும்படி யாககியாபித்து தனது வாளை யுருவி சிரோமுடியை யறுத்தெறிந்துவிட்டு வாளையு மவன்கையில கொடுத்தனுப்பிவிட்டார்.

குதிரை சேவகன் சக்கிரவர்த்தியாரிடஞ்சென்று நடந்த வர்த்தமானங்கள் யாவையுங்கூறி தான் கைபெற்ற வாகு, பிறைமுடி, கச்சை, பதக்க முதலியவைகளையுங் கொடுத்தான்.

*அரசன் அவைகளைக்கண்டவுடன் திகைத்து தான் கொண்ட வெண்ணங்கள் யாவும் நிறைவேறாமல் சாக்கையர்கணிதம்போல் செய்கையின் தொடர்பாகும் விட்டகுறை யெத்தன்மைத்தோவென்றேங்கி பாலபருவங் கடந்து குமார பருவத்துள் உன் சக்கிரவர்த்திபீடத்தை துறந்தபோதிலும் உன் மனைவி பாசத்தை எவ்வகையிற் றுறந்தாய். உன் மனைவி பாசத்தைத் துறந்தபோதிலும் உன் மகவின் பாசத்தை எவ்வகையிற் றுறந்தாய் மகனேயென் றலரி மறுபடியுந் தேறி தன் பௌத்திரனைக் கொண்டுவரச்செய்து வாரியெடுத்து முத்தமிட்டு குழந்தாய், உன்தந்தை சித்தார்த்தர் சித்திர மாளிகையி லிருக்கும்வரையில் தேசமுழுவதும் பிரகாசித்திருந்தது. நீங்கியவுடன் இருளடைந்தபடியால் இனி வுன் பெயர் இராகுலன் இராகுலனென் றேஜி பட்டத்திற்கு பௌத்திரனிருக்கின்றானென்னுந் திடத்தால் கவலையை மாற்றி இராஜகிய சிந்தையிலிருந்தான்.

விடியர்கால வெள்ளி தோன்றியும் பட்சிகட் பாடும் நாத மெழாமலும், பசுக்களின் சப்தம் பிறவாமலும், தோழிகளின் கீத மெழாமலும், மாளிகையுள் அசைவற்றிருளடைந்திருப்பதை யறிந்த வசோதரை அலரி

---

வீரசோழியம்.—* அன்னையறங்கோன லங்கினர் சேட்சென்னி, ஒன்னாருடைபுறம போல கலங்கவர்ந்து, தன்னன் துறந்துவிடல்.

பாவாயறங்கோ னலங்கினர் சேட்சென்னி, மேவாருடைபுறம் போல நலங்கவர்ந்து, காவான் றுறந்துவிடல்.

காச்சகலம்பகம்.—பாசத் தளையறுத்துப் பாவக்கடல் கலக்கி, நேசத்தளைப்பட்டுநிற்குமே - மாசற்ற, காரார்வரையீன்ற கன்னிப்பிடியளித்த, வோராளைவந்தெனுளத்து

யெழுந்து கணவனைக் காணுமல் திகைக்குங்கால் வேவுகன் ஓடிவந்து அரணியை வணங்கி சக்கிரவர்த்தியார் பௌத்திரனைக் கொண்டுவரும்படி யாக்கியாபித்தாரென்றான்.

அசோதரைத் தன்னருமந்தக் குழவியை யவன் காத்திலளித்துக் காரணம் யாதென வுசாவினுள். மன்னுபுத்திரன் மாளிகையைவிடுத்து மும்மதிலையுந் தவிர்த்து வேற்றுநாடடைந்து தன் கைவாளினுல் சிரோரோமங்களை யறுத்தெறிந்துவிட்டுச் சென்ற சங்கதிகள் யாவையும் விளக்கிப் போய்விட்டபின்னர் அரணி திகைத்து *வாட்டமுற்று தன்சிரோமுடியையுங் கத்திரித்துக்கொண்டு சருவாலங்கிருதங்களையுந் தவிர்த்து சுத்த புசிப்பையு மகற்றி பிராந்தியுற்றபோதிலும் தன் கணவன் கொண்டுவருவேனென்று சொன்ன நித்தியபோகத்திற் கெதிர்பார்த்துக்கொண்டு,

†தன் கணவனால் வகுத்துள்ள தருமசாலைகளைச் சீர்திருத்தி எவ்வெவ்வகையில் யாராருக்கறமளித்து ஆதரிக்கவேண்டுமென்னும்நிலைகண்டு தன்மத்தைப் பரவச்செய்துவந்தாள்.

மாசிமாதப் பௌர்ணமியில் துறவடைந்த மன்னன் விம்பாசார நகரிலுள்ள வேபார் நதியிலிறங்கி தேகசுத்தஞ் செய்துகொண்டு ஆற்றுநீரையருந்தி கரையேறி நகாவீதிச்சென்று சிரேஷ்டமுற்றக் கையில் ஓர் அகலேயேந்தி பிச்சையேற்கும் குமாபருவமுற்ற கோமான் முகமலர்ச்சியையும் கண்ணொளியையுங் குளிர்ந்த பார்வையையும் தேஜசையுங் கண்ட லோபியர்களும் ‡ நாணிப் பிச்சமளித்தார்கள்.

பௌர்ணமியிற் பிறந்து பௌர்ணமியில் துறவடைந்த பூரணன் தன் காத்துள்ள வகலில் கிடைத்த அன்னத்தையெடுத்துக்கொண்டுபோய் ஓர் ஆற்றங்கரையில் வைத்துக்கொண்டு தேகசுத்திசெய்து அன்னத்தைப்

---

**காசிக்கலம்பகம்.**—*உடுத்தகலையு மேகலையு மொழுகும்பணியும் விரும்பணியுந், தொடுத்தவளையுங் கைவளையுந் துறந்தாளாவி துறந்தாலு, மடுத்தவமது வுரந்தானு மதனுலிதழி பரந்தாமம், விடுத்துவிடுவா னவனெனப்போய் வினம்பீர்காசி வேதியர்க்கே.

**யாபபருங்கலைக்காரிகை.** — இளநலமிவள்வாட வரும்பொருட்குப்பிரிவாயேல், தளநல முகவெண்பற்ருழ்குழற் றளர்வாளோ, தகைநலமிவள் வாடத்தரும் பொருட்குப் பிரிவாயேல், வகைநல மிவள்வாடி வருந்தியில்லிருப்பாளோ, அணிநல மிவள்வாட வரும் பொருட்குப் பிரிவாயேல், மணிநல மகிழ்மேனி மாசொடு மடிவாளோ.

**வீரசோழியம்.**—விடாஅது கழலுமென் வெள்வளையுந்தவிர்ப்பாய்மன், கெடாஅது பெருகுமென் கேண்மெயு நிறுப்பாயோ, ஒல்லாது கழலுமென் ஒளிவளையுந் தவிர்ப்பாய்மன், இல்லாது பெருகுமென் னெஞ்சமு நிறுப்பாயோ, தாங்காது கழலுமென்ற கைவளையுந் தவிர்ப்பாய்மன், நீங்காது பெருகுமென் னெஞ்சமு நிறுப்பாயோ, மறவாதவன்பினேன் மனனிற்குமாருளாய், துறவாத தமருடையேன் துயர்தீரு மாறருளாய், காதலார் மார்பன்றி காமக்குமருந்துரையா, யேதிலார் தலைசாய யானுய்யு மாறுரையாய், இணைபிரிந்தார் மார்பன்றி யின்பக்கு மருந்துரையாய், துணைபிரிந்த தமருடையேன் துயர்தீரு மாறுரையாய்.
* பகைபோன்றது துறை பரிவாயினகுறி, நகையிழந்தது முகம் நணிநாடிற்றுடம்பு, தகையிழந்தது தோள் தலைசிறந்தது துயர், புகைபரந்ததுமெய்பொறையாயிற்றென்னுயிர்.

**காசிக்கலம்பகம்.**—†இல்லானை மும்பத்திரண்டறமுஞ் செய்திருப்ப, செல்லார் பொழிற் காசிச்செல்வனார் — மெல்லபரக்கின்ற புன்கை பருவகல்கொண்டைய, மிரக்கின்ற வாறறிகிலேன்.

**சீவகசிந்தாமணி.**—‡மாசித் திங்கண் மாசினமுன்னமடிவெய்த, ஆசித்துன்ன மூசியவாடை யுடையாகப், பேசிப் பாவாய் பின்னுயிருக்கை யகலேந்த, கூசிக்கூசி நிற்பர் கொடுத்துண் டறியாதார்.

புசித்துக் கையலம்புங்கால் நீரினுள்ள *மட்சங்கள் ஓடிவந்து காத்திற்கழிந்த வன்னங்களைப் புசிக்கக் கண்ட குமரர் அகலில் மிகுந்திருந்த வன்னங்களையுமெடுத்து கொஞ்சங்கொஞ்சமாய் நீரில் விடுங்கால ஒரு மட்சத்தின் மீது மறுமட்சங்கள் விழுந்து சண்டையிட்டுப் புசிப்பதைக் கண்டு தவிர்த்தும் அவைகள் விடாது போரிடுவதை யுணர்ந்து ஒன்றுக்கொன் றுண்டாகும் ஆசையின் மிகுதியே இக்கலகத்திற்குக் காரணமென்றறிந்து அவ்விடமவிட் டெழுந்து ஓர் கால்வாயருகில் தழைத்து நிழலுற்றிருக்கும் மரத்தடியி லுட்கார்ந்துகொண்டு கால்வாயிலோடும் நீரை வுற்றுநோக்குங்கால் ஓடும் நீரினுடன் மட்சங்கள் போகாமல் எதிர்நோக்கி ஏறுவதைக்கண்டு அவ்விடம்விட்டெழுந்து கடைக்காலண்டைச் சென்று பார்க்குங்கால் நீர் வயல்களில் பரவவும், அதிற் சிதரியோடிய மட்சங்களைக் காகங்களுங் கொக்குகளும் பிடித்துத் தின்பதைக்கண்டு நீரில் எதிர்நோக்கியோடும் மட்சங்கள் எவ்விடம் போகுதென்று தொடர்ந் தேகுங்கால் வாய்க்கால்நீரிலேறி ஏரிநீரில் மறைந்துவிட்டதுகள். இவைகளைக் கண்ணுற்ற சித்தார்த்தர் நீரோடுங்கால் மட்சங்கள் எதிரேறுவது சுவாபமா அன்றேல் தன் பிராணனைக் காத்துக்கொள்ளற்காவென் றாராய்ச்சி செய்யுங்கால் ஓடும் நீரில் எதிரேறுவது சுவாபமாயின் சிலமட்சங்கள் வயல்வெளியிற் சிக்குண்டு காகங்களுக்கும் கொக்குகளுக்கும் இறையாயிரா,

அவ்வகை யிறையாவதைக்கண்ட மட்சங்கள் தங்கள் பிராணனைக் காத்துக்கொள்ளுவதற்கு யெதிரேறு மியல்பென்றறிந்து அவைகளுக்குள்ள பிராண பயத்தையுஞ் சிந்தித்துக்கொண்டிருக்குங்கால், நகரவீதியிலுள்ள விவேகிகள் அரசனிடஞ்சென்று வணங்கி அரசே, நமது வீதியில் குமாரபருவமும், குளிர்ந்த பார்வையும், மிருது வசனமும்வாய்த்த ஒருவர் தன் கையிலுள்ள வகலில் பிச்சையேற்ற வன்னத்தை யெடுத்துக்கொண்டு போய் ஆற்றங்கரையில் புசித்துக்கொண்டிருக்கின்றார் அவர் நடையுடை பாவனைகளைப் பார்க்குங்கால் சிறந்த சீமான்போற் காணப்படுகிறதென் றுரைநதார்கள்.

அதைக்கேட்ட விம்பாசார வரசன் திடுக்கிட்டெழுந்து பல்லக்கை கொண்டுவரச்செய்து ஏறிக்கொண்டு ஆற்றங்கரை வந்துசேர்ந்து சித்தார்த்தரைக் கண்டு திகைத்து அருகிற்சென்று ஐயன்மின் நீவிர்யாவரென்றான் யானோர் விசாரிணைப்போக்கனென்றார். தாங்கள் விசாரிணைப்போக்கராயினும் தேசம் யாதோ வென்றான். கபிலநகரென்றார். அங்கு தாங்கள் யாருடைய புத்திரரென்றான். மண்முகவாகு சக்கிரவர்த்தியின் ஏகபுத்திரரென்றார். அதைக்கேட்ட விம்பாசாரன் அவரை வணங்கி தன் பல்லக்கி

அருங்கலைச்செப்பு.—* தலைத்தார் வேல்போகஞ் சாலத் துறந்து, நிலைத்தாருய் நின்றானிறை.
இறையோ னகலேந்தி யேற்றவன்ன மூண்டு, பொறையூர் புற முணர்ந்தான் பின்.
மீனுமுடல்கொண்ட* விற்போரிடங்கண்டு, தானுமிச்சை யென்றா னிறை.
நீரோட்டக்காலும் நேரோடும் மீனும், பாரோட்டங் கண்டான் பயன்.
விம்பாசாரன்றன் வேண்டல்மிகுகொண்டு, அன்பாலடைந்தானறன்.
மூன்றொருத்திமான மூனைந்தவம் மூப்பன், தன்றோற்றன் ஞேயகற்றினன்.
பின்றொருத்தன் மூப்பன் பெண்பாலர் நோய்கண், டின்னுதவர் கொண்டா னுடல்.

அசோகரை நெஞ்சுவிடுதூது.—* மதுரந்தருஞ் சாத்தன்வன் கோயில்முன்னே, சதுரங்கமாபலமாத் தங்கும்—குதிரைபரி, தோரணனும் பெயருஞ் செப்பியபோர் கொள்ளுரவு, கோரது பொய்யென்று நீக்கியே—தேருமிடத்.

லேற்றிக்கொண்டு அரண்மனைச்சேர்ந்து ஆசனமளித்துத் தானும் அருகி லுட்கார்ந்து அரசே, தாங்கள் உலக யின்பங்களைத் தவிர்த்து ஓடேந்தியக் காரணமென்னை யென்றான்.

எனக்குற்ற சங்கைகளை அரசபோதத்தினின்று அதிகாரவிசாரிணை யா லெவ்வெவ்வரிடத்து விசாரித்தும் சங்கை விளங்காததினால் ஒடுக்கநிலை யில் வோடேந்தி வணக்கவிசாரிணையில் வெளியேறினேனென்றார்.

அதைக்கேட்ட விம்பாசாரவரசன் திடுக்கிட்டு தம்மாராயனைநோக்கி இறைவா, தங்கள் சக்கிரவர்த்தி பீடத்தையும் மனைவி மைந்தன் சுகத்தை யும் விடுத்துக் கையில் ஓடேந்தி யென்ன சுகத்தை யடையப்போகின்றீ ரென்றான்.

சோதிரரே, தாம் கூறிய சுகங்களில் பிறப்பது துக்கம், பிணி துக் கம், மூப்பு துக்கம், மரண துக்கம் பிரத்தியட்ச வநுபவத்திலிருக்கின்றதி னால் எச்சுகத்தி லென்னை நிலைக்கச்சொல்லுகின்றீரென்றார்.

இறைவா, ஓர் குடித்தனக்காரனிலுங் கிராமாதிபதி மேலானவன். கிராமாதிபதியிலுந் தேசாதிபதி மேலானவன். தேசாதிபதியிலும் அர சன் மேலானவன். அரசனிலுந் தார்வேந்தன் மேலானவன். தார்வேந் தனிலும் *தலைத்தார்வேந்தன் மேலானவன். அவ்வகைத் தலைத்தார்வேந் தனின் ஏகபுத்திரராகிய உமக்கு யாதொரு சுகமுமில்லை யென்பீராயின் யாங்க ளென்ன சுகத்தை யடைவோமென்றான்.

சோதிரரே, ஒரு ஆட்டை மேய்ப்பவனுக்கு சாதாரணம். பத்து ஆடுகளை மேய்ப்பவனுக்கு சொற்ப கஷ்டம். நூறு ஆடுகளை மேய்ப்பவ னுக்கு அதனிலுங் கஷ்டம். ஆயிரம் ஆடுகளை மேய்ப்பவனுக்கு அதிக கஷ்ட மிருக்குமல்லவா வென்றார்.

இறைவா, தலைத்தார்வேந்தர் இராட்சியபாரம் அதிகமாயினும் அவ்வவர் பொருப்பில் ஆளுகையை விடுத்து ஆதிபத்தியம் நடத்துவோமா யின் சுகவாழ்க்கைப் பெறலாமன்றோ வென்றான்.

சோதிரரே, நமக்குள்ளடங்கிய சகலக் குடிகளின் சுகவாழ்க்கை யால் நாம் சுகமடையலாமா அன்று குடிகளின் அசுகவாழ்க்கையால் சுகம டையலாமாவென்றார்.

இறைவா, சகல குடிகளின் சுகவாழ்க்கையே நமக்கும் சுகநிலை யென்றான்.

சோதிரரே, தங்கள் நாட்டிலுள்ளக் குடிகளின் சுகநிலைகள் யாவற் றையுங் கண்டதுண்டோ வென்றார்.

இறைவா, ஒவ்வோர் மனிதனும் பிறப்பதிலுந் துக்கங் காண்கின் றேன், வளர்தலிலுந் துக்கங் காண்கின்றேன், பொருளை சம்பாதித்தலிலுந் துக்கங் காண்கின்றேன், அவைக ளழிதலிலுந் துக்கங் காண்கின்றேன், அதனைக் காப்பாற்றுதலிலுந் துக்கத்தைக் காண்கின்றேன், அதன் சார்பா ல் என் அரசிலுந் துக்கத்தைக் காண்கின்றேன். ஆதலின் குடிகளின் சுக நிலை யீதென விளங்கவில்லையே யென்றான்.

---

மணிமேகலை.—*சாக்கையராளுந் தலைத்தார்வேந்த, னுக்கையுற்றுதித்தனனுங்க வன்றனென.

சோதிரரே, தமது நாட்டுக் குடிகளிடத்திலுந் தம தாசிலுந் துக்கமேவிசேஷித்திருக்கக்கண்ட நீவிரேதேனுஞ் சுகத்தைக் காணவில்லையோ வென்றார்.

இறைவா, துக்கத்தைக் கருதாவிடத்து சுகமும், சுகத்தைக் கருதியவிடத்தில் துக்கத்தையுங் காண்கின்றேனென்றான்.

சோதிரரே, சகல குடிகளையுந் துக்கத்திலாழ்த்தி நாம் சுகமடையக் கருதுதல் சுகமாமோ வென்றார்.

இறைவா, சகலர் சுகத்தையுங் கருதுதலே சுகமென்றான்.

சோதிரரே, இருளுக்கு வெளிச்சமும், ஆணுக்குப் பெண்ணும், எதிரடையாகக் காணுதற்போல் துக்கத்திற்கு எதிரடை சுகமிருத்தல்வேண்டும். அந்தந்த துக்கங்களுக்குரிய உற்பவங்களைக் கண்டறிவோமானால் நித்திய சுகவாழ்க்கைத் தோன்றும். *அந்த நித்திய சுகத்தை சருவசீவர்களுக்கு மளித்து அதில் நாமும் சுகமடைதல் மிக்க சுகமல்லவா வென்றார்.

இறைவா, அவ்வகை சுகத்தை யிதுகாறுங் கண்டவர்களுமில்லை கேட்டவர்களு மில்லை, அனுபவித்தவர்களு மில்லை. ஆதலின் தாங்கள் வீணிலலைந்து சுகதேகத்தைப் பாழாக்கிக்கொள்ளாமல் இத்தேச ராட்சியபாரத்தைக் கைக்கொண்டு சுகவாழ்க்கை யடையவேண்டுமென வணங்கினான்.

சோதிரரே, சருவ வுயிர்களின் யீடேற்றத்தை நாடி வெளிவந்தயான் தன் சுகத்தைப் பார்த்தல் துக்கமாதலின் என் துறவை தடுக்காதேயுங்களென்று வேண்டினார்.

அதைக்கேட்ட விம்பாசார வரசன் மனங்கலங்கி சருவசீவர்களின் சுகத்தைக் கருதி சக்கிரவர்த்திப் பீடத்தைத் துறந்ததும், மனைவியைத் துறந்ததும், அருமந்த மகவைத் துறந்ததும் பெரிதல்ல எக்காலமு மானந்த நிலையிலிருந்த சுகத்தை யெவ்வகையிற் றுறந்தீரென்று கதறி உலக யின்பத்தை தவிர்த்த (பாலி மொழியால்) அவலோகிதா அவலோகிதாவென்றேற்றி தாங்கள் செல்லுமிடத்தையேனுஞ் சொல்லவேண்டுமென்று பணிந்தான்.

சோதிரரே, நானோரிடத்தைக் கருதி செல்லாமல் சுகவாழியைக் கருதி செல்லுகின்றேன். என்னை மறுககாதீரென்று வெளியேறுங்கால் அவலோகிதரை யோர் விருத்தன் மறுத்து தாம் வெளியேறிய சங்கை யாதென வுசாவினான்.

அவலோகிதர் பெரியோனைநோக்கி ஐயன்மின் தாமடைந்துள்ள மூப்புநிலைக்கு நரை திரை சான்றாயினும் ஏதேனும் பிணிகண்டுளதோவென வினவினார்.

அவலோகிதா, எனக்கு உலகந் தெரிந்தவளாயில் உடற்பிணியொன்றுமறியேனென்றான்.

பெரியோய், உமக்கு மனைவிமக்களுண்டா இல்லையா வென வுசாவினார்.

---

மணிமேகலை.—*தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பு, மன்னுயிர் முதல்வனறமுமிதென்றான்.

வீரசோழியம். — ஆருயிர்களனைத்தினையுங் காப்பதற்கே யருள்பூண்டு, லோருயிர்க்கே யுடம்பளித்தால் ஒப்புரவிக்கென்னுளும்.

அவலோகிதா, சிறுவயதில் என் மனைவி மடிந்துவிட்டாள், மறு மனைவியை யான் தேடிக்கொள்ளவில்லை யென்றான். அருகினின்ற மற்றோர் பெரியோன் அவலோகிதா, யான் பிறந்து வளர்ந்து நாற்பது வயதுக்குள் மூன்று விவாகஞ்செய்து மூவரும் மடிந்து நான்காவது விவாகஞ் செய்திருக்கின்றேன் உடலிற் பற்பல வியாதிகளுந் தோன்றி யுபத்திரவப் படுகின்றேனென்றான்.

பெரியோய், விவாக சுகத்தை விரும்புதல் மனுகுல விருத்தியின் நன்மெயொன்றும், அதே சுகத்தை யதிக விருப்பத்தால் பிணிகண்டு மடிக்குந் தின்மெயொன்றுமாகிய இருவினைச்செயல்கள் ஒருச்சுக வியல்பிற் றோற்றுகிறதல்லவா வென்றார்.

அவலோகிதா, எனது நேயர் மனைவியற்று ஒருமெயுற்று வியாதி யற்றிருக்கின்றார். யானோ மாறு மனைவிகளைக்கொண்டு தீராப்பிணிகளுங் கண்டு தவிக்கின்றேனென்றான்.

பெரியோய், தமக்குத் தோன்றியுள்ள பிணிகள் தம்மால் தோன்றியதா தானே தோன்றியதா வென்றார்.

அவலோகிதா, என்னனுபவச் செயலால் இப்பிணிகள் யாவும் என்னால் தோன்றியதன்றி தானே தோற்றியதல்லவென்று உறுதியாகக் கூறுவேனென்றான்.

பெரியோய், உம்மால் தோற்றியதற் காதாரமென்னை யென்றார்.

அவலோகிதா, யான் மாறிமாறி செய்துகொண்ட விவாகசங்கமச் செயல்களால் காலத்திற்குக்காலந் தோன்றிய பிணிகளின் உற்பவத்தைக் கொண்டும் என் மீறிய சேர்க்கைச் செயல்களைக்கொண்டு மிப்பிணிகளி னுற்பவங்களுக்கு நானே காரணமென்றேனென்றான்.

பெரியோய், உம்மால் தோன்றியப் பிணிகளி னுற்பவமுணர்ந்தும் அஃது தோன்றாமற் காத்துக்கொள்ளாத காரணமென்னை யென்றார்.

அவலோகிதா, அதி மோகவிச்சையே யதற்குக் காரணமென்றான்.

பெரியோய், தாங்கள் மோக விச்சையை யதிகரிக்கச்செய்துகொண்டபடியால் பிணி யதிகரித்துப் பீடிக்கப்படுகின்றீர். தமதருகிருக்கும் பெரியோர் மோகவிச்சையை யதிகரிக்கவிடாமல் காத்துக்கொண்டபடியால் பிணியற்று சுகித்திருக்கின்றாரல்லவா வென்றார்.

அவலோகிதா, எங்களுக்குரியச் செயல்களே யெங்க ளனுபவத்தில் விளங்குகிறதே யென்றான்.

சக்கிரவர்த்தித் திருமகன் மற்றும் பிறந்தமுதற் பிணி யறியேனென்ற பெரியோனை நோக்கி ஐயன்மின், தமது மனையாள் இறந்தபின் மறு மனையாளைத் தேடாதக் காரணமென்னை யென்றார்.

அவலோகிதா, மடிந்த மனைவியின் குணமும், வடிவும், மிருதுவான வார்த்தையும் மற்றப் பெண்களிடங் காணாமெயே காரணமென்றான்.

அதனைக்கேட்ட தம்மராசன் காரணத்திற்குத் தக்கக் காரியங்கள், ஏதுக்குத்தக்க நிகழ்ச்சியாய் விளங்குவதை முற்று மறியவேண்டுமென்று வெளியேறுங்கால் பெரியோர்கள் வணங்கி அவலோகிதா, தமது †சித்திர மாளிகையின் முன்பு இரதகஜதுரக பதாதிகள் யாவுந் தமதேவலுக்கு எதிர்பார்த்திருக்க சௌந்தரமளப்பாதம் புழுதியிற் பட நடப்பதைக் காண

யென்னைக் கொடுமெய் செய்தோம் இறைவனேயென் றிரஞ்சி விம்பாசாரன் பரிகளிலேனு மேறிச்செல்லவேண்டுமென்று வருந்தினார்கள்.

ஒடுக்கத்திற்கு வேடேந்தி விசாரிணையில் வெளியேறிய வெமக்குப் பரியும் பளுவாமென்றோதி விம்பாசாரன் நகரங் கடந்து காடுகளுள் நுழைந்து ஓர் மலையடிவாரத்தில் வருங்கால் அரவங்காட்டாது அடிவாரத் தொளித்திருந்து வழிப்போக்கரை யடித்துப் பறிக்கும் அரக்கர்களவர் அப்பனை வழிமறித்து அவர் முகத்தைக்கண்டு தங்கள் கொடூர்ச்செயல்களைத் தவிர்த்தும் அரசருக்குள் யீகையில் மிகுந்தவராதலின் தியாகராய ரென்றும், தனத்தின் மிகுதியால் செல்வராய ரென்போர் செவியிலிருந்த * பொற்குண்டலத்தைக் கழற்றிக்கொண்டு செப்புக்குண்டலத்தை செவியி லணிந்துவிட்டுப் போய்விட்டார்கள்.

தன்மாயன் தன் செவியிலிருந்து அரக்கர்கள் கழட்டிக்கொண்டது பொற்குண்டலமென்றும், அவர்களணிந்தது செப்புக்குண்டலமென்றுங் கருதாது பின்சென்றுபார்த்தபோது மறைந்துவிட்டார்கள், மற்றும் புறங்களிற் பார்க்குங்கால் அரக்கர்களால் பொருட்களை யபகரித்துக்கொண்டு அடித்துக் கொன்றுப்போட்டுள்ளப் பிணங்களை மிக்கக் காணப்பட்டது. அவைகளைக்கண்ட சித்தார்த்தர் மனங்குழைந்து உயிரைவதைத்து பொருள் சம்பாதிக்கத்தக்க மக்களும் உலகத்தி லுண்டோவென்று சொல்லிக்கொண்டு காடுமலைகளைக் கடந்து ஓர் சிற்றூர் சேர்ந்து பிச்சையேற்றுண்டு சற்றிளைப்பாறி அவ்வூரிலுள்ளோர் அதிக வாடம்பரமும் கூச்சலுமில்லாமல் தன்தன் வேலைகளி லமைதியுற்றிருப்பதினால் ஆற்றலுற்றிருப்பதைக் கண்ட வவலோகிதர் அவ்விடஞ் சிலகால் தங்கவேண்டுமென்றெண்ணி ஓர் விருத்தக் கிழவி வாசமாயிருக்குஞ் † சிறுகுடிசையில் தங்கினார்,

அவ்விடந்தங்கி இந்த சிற்றூர் அமைதியினால் எவ்வள வாற்றலுற்றுளதோ வதைப்போன்ற நிலையே நமக்கு சுகநிலையாகுமென்றுன்னி சீவராசிகளி னுற்பவங்களையும் அதனதன் முடிவுகளையும் பட்சிகளின் தோற்றங்களையும் அதன் ஒடுக்கங்களையும் மக்கட் பிறப்புக்களையும் அவர்கள் மரணங்களையும பூமியின்மீது நீர்த்தோயுமேதுவால் புற்பூண்டுகளும், கிருமிகளும், மட்சங்களுட், பட்சிகளும், மிருகங்களும், மக்களுந் தோன்றும் நிகழ்ச்சிகளையும் நீரி னேதுவாலும், அக்கினியி னேதுவாலும், பிணிகளி னேதுவாலும், விஷங்களி னேதுவாலும் மறைதலி னிகழ்ச்சிகளையும், பூர்த்தியாக வறியவேண்டிய நோக்கத்தால் மீளவுஞ் சிறுகுடியிற் றங்கி அவ்விடமுள்ள சீவராசிகளின் குணகுணங்களை யாராய்ச்சிசெய்வதும்,

மலையடிவாரங்களிற் சென்று அவ்விடமுள்ள சீவராசிகளின் உற்பவ வொடுக்கங்களைக் காண்பதுவும், மலை சிகரங்களிலேறி அவ்விடத்திய

---

* நிகழ்காலத்திரங்கல்.-ஒப்பற்ற குண்டலத்தை யூழரக்கர் வவ்வி, செப்புகுண்டலமிட்ட செய்தி யதிசயமே.

அசோகனை நேத்ரவிடுதூது.—காதினையிற்பூண்ட கனகசெப்புக் குண்டலங் க. டிதறவே காட்டுமிரு திண்புயமுமோதவிட,

† நிகழ்காலத்திரங்கல்.-அழகன் இலாகா னம்மண்ணலருள்வடிவன், கிழவிச்சி[illegible]லங்காண்டலதிசயமே.

வீரசோழியம்.— சொய்தினைகாத்தக் குளவியடுக்கத்துப், பொய்தற் சிறுகுடி வாரனீயைய - நலம்வேண்டின்.

ஆய்தினை காத்த மருவியடுக்கத்தெம், ஆய்சற்சிறுகுடி வாரனீயைய - நலம்வேண்டின்.

மென்றினைக்காத்த மிகுபூங்கமழ்சோலைக், குன்றச்சிறுகுடி வாரனீயைய - நலம்வேண்டின்.

தோற்ற வொடுக்கங்களைக் கண்டறிவதுமாகியச் செயல்களில் பட்சிகள் தன் தன் கூட்ட தன்தன்யே சேருவதும், மிருகங்கள் அதனதன் உருவங்களோடி யணுகுதலும், மனுமக்களில் சுராபான மருந்துவோரிடம் சுராபான விச்சையுள்ளோ ரணுகுதலும், மாமிஷம் புசிப்பவர்பால் மாமிஷ யிச்சையுள்ளோ ரணுகுதலும், கள்ளச்செய்கையுள்ளோர்பால் கள்ளமுள்ள முள்ளோர் கலப்புருதலும், மூர்க்கச்செய்கைகளுள்ளோர்பால் மூர்க்கவிச்சையுள்ளோ ரணுகுவதுமாகிய சேர்க்கைகளுடன் ;

மனிதவுருவங் கண்டுங் குரங்குகளுக்குரிய செயல்களையும், குரங்குருவங்கண்டும் மனிதருக்குரிய விவேகங்களையும், மனிதவுருவங் கண்டும் நாயிக்குரிய பொறாமெய்க் குணங்களையும், நாயுருவங்கண்டும் மனிதனுக்குரிய விவேகச்செயல்களையும பிரித்துணர்ந்து ;

மனத்தின் ஆசை பெருக்கமும், கோபப்பெருக்கமும், கருமத் தோற்ற வொடுக்கங்களுக்குக் காரணமாயிருப்பதென்று கண்டு உள்ள ஏதுக்களுக்குங் காரணந் தானாகவும், உள்ள நிகழ்ச்சிகளுக்குங் காரியந் தானாகவும் விளங்குதலால் உள்ள நிலையை யறியவேண்டிய வுசாவலால் ;

தன்னைநோக்கி யுள்ளத்தெழும்பும் ஆசையை யெழவிடாமல் நசித்தும் தோற்றும் ஆசையை உள்ளத்திற் கொள்ளவிடாம லகற்றியும், உள்ளத்திலெழுங் கோபத்தை யெழவிடாமல் நசித்தும், தோற்றத்தால் வருங் கோபங்களை சாரவிடாம லகற்றியும், வந்தச் செயல்களினால் மனதுக்குண்டாகுஞ் சொற்ப வாறுதலை யுணர்ந்து ;

யாவும் உள்ளச்செயலென்றறிந்து காமக்கொதிப்பை எழவிடாமலும், தோற்றுங் காமத்தை யெண்ணவிடாமலு மகற்றுங்கால் உதிரத்திரட்சியின் தணலை காமாக்கினியாக வீசுதலை யுணர்ந்து, புசிப்பை யடக்க வேண்டுமென்றெண்ணி தான்சிறிதுகாலந் தங்கியிருந்த சிறுகுடிலையும்விட்டகன்று இலக்குன்றுகளேறிவருங்கால் அவ்வழியாக வோர் ஆட்டிடையன் மந்தைகளை வோட்டும்போது பாதையில் ஓர் குட்டி தவறிவிழுந்து காலுடைந்துவிட்டபடியால் நடக்கவியலாது நொண்டிக்கொண்டு மெதுவிற்போகவும் இடையன் ஓட்டும்பயத்தால் தாயாடானது முந்திவோடுவதும் நடக்கமாட்டாமலிருக்குங் குட்டியிடம் அம்மேயென்று வோடிவருவதும் மறுபடியும் இடையன் ஓட்ட வோடுவதுங் குட்டி தவிழ்ந்துகொண்டு தவிப்பதும் தாயாடு இரும்பிஇரும்பி யம்மேயென் றோடிவருவதுமாகியப் பரிதாபத்தைக் கண்டுவரும் ;

சக்கிரவர்த்தித் திருமகன் இதங்கி ஆட்டின்குட்டியை வாரி மார்பிலணைத்துக்கொண்டு தாய் ஆட்டைநோக்கி அம்மா வுன் பிள்ளையை வீட்டு வரையிலுங் கொண்டுவந்துவிடுகிறேன் நீ பயப்படாமல் நடவென்று கொண்டுபோகுங்கால் ;

இடையன் அருகில் வந்து பரிதாபத்தால் செம்மறிக்குட்டியையுட்டிலும் சுமக்கும் நீர் என்றால் சுமக்கமுடியாத விக்கம்பளிமூட்டையையும் எடுத்துவரவேண்டுமென்று அப்பன் தோளி லேற்றிவிட்டுப் போய்விட்டான்

தம்மாசன் செம்மறிக்குட்டியையும், தோற்பை மூட்டையையும் நெடுந்தூரஞ் சுமந்துக்கொண்டுபோய் ஆட்டிடையன் வீட்டண்டை சேரக்கேபோது அவன் மனைவி கண்டு அடபாவி யாரோ பெரியவர்போற் கா

ண்கின்றது அவரிடஞ் சுமையை யேற்றியது தன்மமல்லவேயென்றலறினாள். அப்போதுதான் இடையனுக்கும் பயமுண்டாகி வணங்கிக்கொண்டான். சித்தார்த்தரும் இடையனைநோக்கி உனக்கும் உன் பிள்ளைகளுக்கும் உண்டாகியத் துன்பம்போல் உன் ஆடுகளுக்கும் உன் ஆட்டின் குட்டிகளுக்கும் உண்டாகுந் துன்பங்களைக்கருதிப்பாரென்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

தனிவழிப்போய்ப் பலதேசங்களையுங் கடந்து ஓர் மலைக்குகையிற் சேர்ந்து நாளுக்குநாள் புசிப்பைக் குறைத்துக்கொண்டேவந்ததினால் தேகத்துள்ள வென்புகள் யாவுந் தோன்றக் கண்பஞ்சடைந்து சிலதூரம் நடந்த வாயாசத்தினால் மெய்மறந்து ஓர் மரத்தடியில் வீழ்ந்துவிட்டார்.

அவ்வழியாகத் தன் புருஷனுக்குக் கஞ்சிகொண்டுபோகு மோர் பெண்ணானவள் அப்பனை நெருங்கிப் பார்த்துவிட்டு தன் புருஷனிடஞ் சென்று ஐயே, சிலகாலங்களுக்குமுன் நமது ஆட்டுக்குட்டியையும், மூட்டையையுஞ் சுமந்துவந்த பெரியவர்போல் ஒருவர் மிக்க வாயாசத்தால் விழுந்துகிடக்கின்றார் பார்ப்போம் வாருங்கோளென் றழைத்தாள்.

இருவருஞ்சென்று விழுந்திருப்பவரை யுற்றுநோக்கி * செம்மறிக் குட்டியை யேந்திவந்தப் பெரியவரெனவே பதறியெடுத்து மார்புடனணைத்து தன் மனைவி தனக்குக் கொண்டுவந்த பாற்கஞ்சியை சிறுக சிறுக ஊட்டினான். அதனை யருந்திய அப்பன் இரண்டுநாழிகைக்குமேல் கண்விழித்துப்பார்த்து ஆயாசந் தெளிந்தபின் நீவிர் யாவரென்று வுசாவினார். அவர்க ளிருவரும் ஆனந்தங்கொண்டு ஐயே, தாங்க ளொருகால் எங்களாட்டுக்குட்டியை சுமந்துவந்தீர் அந்த நன்றியை யாங்கள் மறவாமல் தங்களுக்குப் பால்கஞ்சி சுமந்துவந்தோமென்றார்கள். அதைக் கேட்ட தம்மராஜன் தன்னறச்செய்கைத் தன்னைக்கார்த்ததை யெண்ணி நகைத்து அவர்க ளிருவரையுநோக்கி நான்செய்த நன்றி யுங்களுக்குப் பெரிதல்ல நீங்க ளெனக்கு உண்டிகொடுத்து உயிர்கொடுத்த நன்றியை வுலகம் எக்காலும் மறக்காதென்று வாக்களித்து அதேயிடத்திற் சிலகாலந்தங்கி அவர்கள் போஷிப்பால் தேகத்தைத் திடப்படுத்திக்கொண்டு இனி தேகத்தை வொடுக்குவதிற் பயனில்லை மிதாகாரம் புசித்துக் காமநிலையைக் கருக்க வேண்டி,

---

* அசோதரை நெஞ்சுவிடு தூது.—இடையன்பாற் சென்ற விருசெம்மலானத் தொடருமறிக்குட்டியுடன் ஏறாதலை— யெடுத்து, கம்பளந்தண்டாதிக் கையேந்திக்கொண்டு,விம்புமடிபாதை யிருநடந்து - நமபுந், தகைமெயுடையோ ராய்த்தக்க பணிசெய்தே, யகமுமுகமு மிகமலர்ந்து - சுகமாய், செம்மறிதன் குட்டி திமிரகம்பள மணிந்து, நம்புமெய்யுள்ளன்பை நாட்டி - நம்பி.

இடைகாட்டு சித்தர் பாடல்.— மூம்மலர்க்கிட மூப்பொதிக்கப்பாலு-மூப்பாழ் கடந்த வப்பாலில், செம்மறி யோட்டிய வேலையமட்டுஞ்-சிந்தையில் வைப்பீரோ கோனரே.

நீகழ்காலத்திரங்கல்.—பைம்பொற்கலை கொண்டு பாராளுங்கையில், செம்மறியை யேந்துஞ் செய்கை யதிசயமே.

செம்மறியுந் தோற்பையுஞ் சேர்ந்தகம் பனமேந்தி, யம்மறியனில்லி லளித்தததிசயமே.

பாரமிகவேந்தி படியில்மிகநடந்து, நாரமிகு வன்மை தரித்த ததிசயமே.

செங்கோலையேந்துங்கை செம்மறியை யேற்றதன்றி, பொங்கும்பாற்கஞ்சருந்தப் போற்ற லதிசயமே

போற்றியவரளித்தப் புன்புசிப்பையேற்று, வாற்றலுற மீளை யளித்த ததிசயமே.

### ஐந்தாவது

# சித்தார்த்தர் பஞ்சவிந்தியத்தை வென்று இந்திரரும் மெய்கண்டு புத்தருமாய காதை.



உள்ளக் கருவிக் காரணாதிகளின் தோற்றங்களையும், ஒடுக்கங்களையும் ஆராய்ச்சிசெய்ப வாரம்பித்தார். காரணம் அசத்திற் காணும் புறத் தோற்றங்கள் யாவுந் தோன்றுதலும் மறைதலும் பிறத்தலும் இறத்தலு மாகியச் செயல்களில் ,

இன்று நாளை யென்னுங் காலக்கணிதங்களும் பொய்த் தோற்றமாக விளங்கியபடியாலும் தோற்றிக்கொண்டே யெழும்பும் பொருட்கள் யாவும் க்ஷணத்திற்குட்சணம் அழிந்துக்கொண்டேவருஞ் சுவாபமென் றறிந்தபடியாலும் ;

உள்ளத் தோற்ற வொடுக்கங்களாகும் இராகத் துவேஷ மோகங்களென்னும் காமவெகுளி மயக்கங்களின் உற்பவங்களையும் அதன் செயல்களையும் அச்செயல்களினா லுண்டாகுந் துன்பங்களையும் அழிவுகளையும் நாளுக்குநாள் உள்ளுணர்ந்துவருவதுடன் ;

தேகத்தால் ஊறு பேதங்களையும், கண்ணால் வருண பேதங்களையும் நாவால் சுவை பேதங்களையும், மூக்கால் நாற்றபேதங்களையும், செவியால் ஓசை பேதங்களையு முள்ளுணர்ந்து மூக்கினால் நாற்றமறிதற்கு மண் காரணமென்றும், நாவினால் சுவையறிதற்கு நீர் காரணமென்றும், கண்ணொளியாற் பார்வை யறிதற்கு தீ காரணமென்றும், செவியால் சத்தமறிதற்கு ஆகாயங் காரணமென்றும், தேகத்தில் உணர்ச்சி யறிதற்கு வாயு காரணமென்றும் அறிந்துகொண்டதன்றி தீயும், ஆகாயமும், மனவிரிவுக்கும் மடிவுக்குங் காரணமென்றும் நீரும், காற்றும், மண்ணும் மூச்சுக்குக் காரணம் என்றுமுணர்ந்து மூச்சானது கழுத்தைப் பீடமாகக் கொண்டு பீஜத்திற்கும் நாசிக்கும் மாறலிடுவதும், மனமானது இருகண் மத்தியையும் மூக்கின் முனையையும் பீடமாகக்கொண்டு விரிந்து மடிவதுமாகிய செயலில் பாசபந்தப் பலபற்றுக்களால் மனம்விரிந்து உலகமாதலும், சாந்தம் யீகை அன்பு பெருகி சிரேஷ்டநிலை தோற்றும் உள்ளொளிவையும் நாளுக்குநாளுணர்ந்து பிறப்பு, பிணி, மூப்பு, மரணமென்னும் நான்கு வாய்மையின் துக்கம், துக்கோற்பவம், துக்கோற்பவக் காரணம், துக்கநிவாரணமாகும் நான்குமார்க்கங்களை யறியவேண்டி பூர்வம் * முத்தாநதியென்று வழங்கி தற்கா

---

* அசோதரை நெஞ்சுவிடு தூது -முறவாலுயர்வா லுனைப்போ லெனக்குப், பிறிதாருளாதலாற் பேணி—யறவாழி, யான்குமாரதேவன்பா லன்புடனே தூதுசெல்ல, நான்கருதி யுன்பாணவிற்றினை-னி யான்புகலு, மவ்விறைவனென்று மமருமிடஞ் சொல்லக்கேண், மௌவன்மணக் குமலர் சோலை-செவ்விதரு, முத்தாநதி சூழ் முதுகிரியாமாங்கு நீ,வித்தாரமாய்ச் செல்லும் வேளைதனிற்-கத்தும்.

லம் தயாவென்று வழங்குமிடத்தில் தனது விவாககாலத்தில் உலக்கைத் தடியை யூன்றிப் பிண்டிமரமெனத் துளிர்த்து வைக்கிளைப் பிரிந்து வளர்ந்திருந்த * பிண்டி மரத்தடியிலுட்கார்ந்துகொண்டு இராகத் துவேஷ மோகங்களென்னு முக்குற்றங்களுக்குக் காரணச் சுழலாகும் இராசதம், தாமதம், சாத்துவிகமென்னு முக்குணப் பிரிவுகளும் இடைகலை, பிங்கலை, சுழிமுனை யென்னு முச்சுவாச பிரிவுகளுமாகிய வாறுள்ளங்க முகங்களை இருவிழி மத்திய வோரங்கமாகும் † உள்விழி பார்வையில் நிறுத்தி கண் பார்த்தவிடத்தில் மனம்போதலும், செவி கேட்டவிடத்தில் மனம்போதலும், நாவு ருசித்தவிடத்தில் மனம்போதலும், மூக்கு முகர்ந்தவிடத்தில் மனம்போதலும், தேகஞ் சுகித்தவிடத்தில் மனம்போதலுமாகியச் செயல்களுக்குரிய சுவை, வொளி, ஊறு, வோசை, நாற்றமிவற்றினிலையாம், ‡ பொறிவாயல்களைந்தினையுமவிக்கு மிடைவிடா வந்தர்முகப் பார்வையின் நிரந்தர பழக்கத்தால மனமென்னும் பெயரற்று நாதவெளியுற்று பேரறிவாம் இரவுபகலற்றவிடந் தங்கி ஆனந்த § நித்திரையடைந்து நித்திய சுகமுற்று பங்குனிமாத பௌர்ணமியில் காமனென்னும் பெண்போக விச்சையையும் சிலைத்துமக் கபங் கண்டுக் கொல்லுங் ¶ காலனென்னும்மரணத்தையுஞ் ஜெயித்துக்கொண்டார். இதையே பற்றற்ற அநித்தியவணுத்தும நிருவாணநிலை யென்பர். இந்நிலையால் காம ரூப மிரண்டுமற்று புளியம் பழம் போலும், ஓடுபோலும் பயிரங்கமும் அந்தரங்கமும் வேறுபவன்று முதல் சித்தார்த்தியென்னும் நாமமற்று புத்தரென் றழைக்கப்பெற்றார். உலர்ந்த வுலக்கைத் துளிர்த்த மரத்தடியி லுட்கார்ந்தபடியால் பிண்டிமரமென்

---

* சித்தாந்தத் தொகை. --அருணெறியாற் பாரமிதை யாறைந்து முடனடக்கிப், பொருள் முழுதும் போதியின்கீழ் முழுதுணர்ந்த முனிவரன்ற, னருள் மொழி யானல் வாய்மெய் யறிந்தவரே பிறப்பறுப்பார், மருணெறியா மபிறநூலு மபக்கருக்கு மாறனதோ.

† திருமூலர் திருமந்திரம்.-அற்றார்பிறவி யவரிரு கண்களை, வைத்தார் புருவத்திடையே பார்க்க,வொத்தேயிருக்கவுல கெல்லாந்தெரியும், எத்தாலுஞ் சாவில்லை இறைவனுமே.

‡ குறள். — பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீரொழுக்கம், நெறிநின்றார் நீடுவாழ்வார்.

§ பாம்பாட்டி சித்தர்.--ஓங்காரக்கம்பத்தி னுச்சிமேலே, யதனுள்ளும் புறம்பையுமறியவேண்டும், ஆங்காரக் கோபத்தை யடக்கிவிட்டே, யானந்த வெள்ளத்தைத் தாக்கிக்கொண்டே, தூங்காமல் தூங்கியே சுகம் பெறவே, தொந்தோம் தோந்தோமென் றாடாய்பாம்பே.

¶ மணிமேகலை.-மாதவ ருரைமிடங் காட்டிய மறையோன், சாதுயர்நீக்கிய தலைவன் தவமுனி. காமனைக் காய்ந்தனை காலனைக் கடிந்தனை.

சீவகசிந்தாமணி.---ஒன்றாயவூக்கவேர் பூட்டியாக்கைக் கெறுவுழுது, நன்றாய நல்விரதச் சென்னல்வித்தி யொழுக்கநீர், குன்றாமற்றாங்கொடுத்தைம் பொறியின் வேலிகாத்தோம்பின், வென்றார் தம் வீட்டின்பம விளைக்கும் விண்ணோ ருலகின்றே. தருமன் றண்ணளி யாற்றனதிகையால், வருணன் கூறுயிர் மாற்றலில் வாமனே.

* சிலப்பதிகாரம். – பணையைந் தோங்கிப் பாசிலைப்போதி, யணிதிகழ் நீழ லறவோன் றிருமொழி.

சீவக சிந்தாமணி.—காசறு துறவின் மிக்கக் கடவுளர் சிந்தை போல, மாசறு விசும்பின் வெய்யோன் வடதிசையடைய முன்னி, யாசற நடக்குநாளு ளிளங்களைக் கிழவன் வைகிப், பாசறை பரிவுநீக்கும் பங்குனி பருவஞ்செய்தான்.

யாப்பருங்கலக் காரிகை.—பிண்டியினீழற் பெருமான் பிடர்த்தலை, மண்டலந்தோன்று மால்வாழியன்றேய்,

சிலப்பதிகாரம். — வெங்க நெடுவேள் வில் விழாக்காணும், பங்குனி முயக்கத்து பனியரசு யாண்டுளன்.

மணிமேகலை.—ஆலமர்ச்செல்வன் மதன்விழாக் கோல்கொள, வாலமர் கொள்ளும் பங்குனிபருவம், காண்மினோ வெனக் கண்டு நிற்குனரும்.

றும், மும்மல சோகமற்றபடியால் அசோகு மரமென்றும், அரசனே மரத்தடியி லுட்கார்ந்தபடியால் அரசன் மரமென்றும், மரத்தடியிலிருந்தே சத்தியதன்மத்தைப் போதித்தபடியால் போதிமரமென்றும், கருங்கற் போன்ற மரமாதலால் கல்லால மரமென்றும் வழங்கிவந்தார்கள்.

பதினறுவது வயதில் விவாகமுடிந்து இருபதுக்குமேல் புத்திரசந்தான முண்டாகி சிலகால் தங்கி வெளியேறி * முப்பதாவது வயதில் நிருவாணமுற்றபடியால் அதை யநுசரித்துவந்த அரசர்களுங் குடிகளுந் தங்கள் வம்மிஷ வரிசைக்குப் புத்திரசந்தான முண்டானவுடன் முப்பதாவது வயதில் மடங்களிற் சேருவது வழக்கமா யிருந்தது.

இராகத் துவேஷ மோக மூன்றையுமறுத்து மெய்ப்பொரு ளொன்றைப் பற்றுதல்.

அதாவது, உலகப் பற்றுக்கள் யாவையுமறுத்து உண்மெய்ப்பொருளா மொருபொருளைப்பற்றினபடியால்;

உண்மெய் யுணர்ந்த ததாகத நிலையில் சுவர்க்க மத்திய பாதாள மூன்றுலகங்களையுந் தனக்குள் கண்டதன்றி செல்லல் நிகழ்ல் வருங்காலமாகு முக்காலங்களின் தோற்றங்களுந் தனக்குள் விளங்குவதைக் கண்ட ததாகதர் தானே கண்ட காட்சியைத் தனக்குள் ளடக்கிக்கொள்ளவேண்டிய வெண்ணம் பிறந்தது. அதையே பைசாச நிலையென்றகற்றினர். இரண்டாவது உலகத்தி லுள்ள சீவராசிகளின் அந்தகாரத்தை விலக்கி உள்ளொளிவிளக்கவேண்டுமென்னும் ஓரெண்ணம் பிறந்தது. அதையே பிரம்ம நிலை யென்றார்.

அதாவது, பூமியை உழுது பண்படுத்தி நஞ்சையாகுந் துன்பஞ் செய்தபோதிலும் அது நற்பலனைத் தருவது சுவாபமாதலின் அதுபோல் மக்கள்கூடிப் பலவகைத் துன்பந் தரினும் அதைக்கருதாது நன்மெய்செய்யுங் குணநிலைக்கு பிரமமென்னும் பெயரையும வகுத்தார்.

உள்ளத்தி லெழும் அசுத்தங்களைத் தெள்ளா நீக்கி பெண்மயல் போக்கி பஞ்ச யிந்திரியங்களை யடக்கிக் காமனை வென்றக் காட்சியால் ஐந்திரர் இந்திரரென்னும் பெயர் வாய்த்தது.

* சீவகசிந்தாமணி.—ஐயாண்டெய்தி மெய்யாடி யறிந்தார் கலைகள்படை நவின்றார், கொய் பூமாலை குழன் மின்னுங் கொழும்பொற்றோடுங் குண்டலமு, மையன் மார்கள் துணக்கின்றியா லுங்கலிமா வெருண்டேர்த்தார், மொய்யாரலங்கன் மார்பதற்கு முப்பதாகி நிறைந்ததே.

நல்வழி.—முப்பதாமாண்டளவின் மூன்றற் றொருபொருளை, தப்பாமற்றன்னுட் பெறானேல் - செப்புங்கலையளவே யாகுமாம் காரிகையார் தங்கள், முலையளவே யாகுமா மூப்பு.

தாயுமானர் சுவாமிகள்.—பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றை, பற்றுக பற்று விடற்கு என்றார்.

மகிதமுனி ஞானம்.—நித்தமும் நீசுத்தமதாய் நின்றுபார்த்தால், நின்தேகம் பிரம்மமடா நீதான் காண்பாய், சுத்தமுடன் சோதிமனக் கணுவலந்த, சுருதிமுடிவான சுடரொளியைக் கண்டால், பக்தியுள்ள தேகமது சுத்தமாச்சு, பாலகனே யவ்விருத்து பரந்து போச்சு, வெற்றியுள்ள அஷ்டசித்துங் கைக்குள்ளாச்சு, வேதாந்த புருவமைய்ய மேலிநில்லே.

சீவகசிந்தாமணி. — ஆசையார்வமோடையமின்றியே, யோசைபோயுல குண்ணநோற்றபி, னேச்பெண்ணொழித் திந்திரர்களாய், தூயஞானமாய்த துறக்கமெய்தினர்.

அறநெறிச்சாரம்.—இந்தியக் குஞ்சரத்தைத ஞானப்பெருங்கயிற்றால், சிந்தனைத் தூண்பூட்டி சேர்த்தியே - பந்திப்பர், இம்மைப்புகழும் இனிச்சொல் கதியையும், தம்மைத் தலைப்படுத்துவார்.

யாதோராசிரியனுமின்றி பிறப்பின் துக்கத்தையும், பிணியின் துக்கத்தையும், மூப்பின் துக்கத்தையும், மரண துக்கத்தையும் ஜெயித்துக் கொண்டபடியால் ஓதாமலுணர்ந்த முனிவனென்றும் ஓர் சிறந்த பெயரை யளித்தார்கள்.

சக்கிரவர்த்தித் திருமகன் தன்னை மறைக்கும் அஞ்ஞான யிருளாம் நித்திரையை நீக்கி சதா விழிப்பாம் ஆனந்தத்திற் றூக்கும் இரவுபகலற்று நித்தியநிலையினின்று சருவசீவர்களின் உள்ளங்களையுங்கவர்ந்து அவரவர்களுக் குண்டாகுந் துக்கங்களையும், அதன் உற்பவங்களையும், அதன் நிவாரணங்களையும் போதிக்கவாரம்பித்து முதலாவது ;

☛ சௌபபாபஸ்ஸ அகரணங்
குஸலஸ உபஸம்பதா
ஸஸித்த பரியோதபனங்

எனும் மூன்று நீதிநெறி பேதவாக்கிய அஸ்திபாரகற்களாகும் பாபஞ்செய்யாதிருங்கள், நன்மெய்க் கடைபிடியுங்கள், உங்களிதயத்தை சுத்திசெய்யுங்கோளென்னுந் திரிபீடங்களை வகுத்தார்.

இத்திரிபீடங்களாகும் மூன்று பேதவாக்கியங்களை ஓர் வோலையிலெழுதாமலும், பட்டைகளிலெழுதாமலும் ஒருவர் நாவினாற் கூறவும் மற்றவர் செவிகளிற் கேட்டுக்கொள்ளுவதுமாயிருந்த வரையாக் கேள்வி எழுதாக்கேள்வியிலிருந்தது. இதைமெய சுருதியென்று கூறினர். அக்கால் சாந்தம நிறைந்த தண்மெயா மந்தண நிலையையும் அன்பே வோருருகொண்ட வடிவையுங்கண்ட குடும்பத் தாசபத்தினிகளும் மற்றுமுள்ளோரும் அருகில் வந்து வணங்கி அரசன் மரத்தடியி லுட்கார்ந்திருப்பதைதவிர்த்து பொற்பீடங்களை யமைத்தும், வெள்ளியாசனங்களை விரித்தும் அவைகளின்மேரி லுட்காரும்படிக் கேட்டுக்கொண்டார்கள். சிம்மமும், இரிடபமும் அருகிற் றூங்கினின்றது. நாகங்கள் தோளிலுந் தாளிலும் புரண்டுலாவியதுகள். மயில்கள் தோகையினால் வெயில் மறைத்ததுகள். அவைகளைக்கண்ட வரசர்கள் மூன்று பூச்சக்கரக் குடைகளைக் கொண்டுவந்து உதயசூரியன் சுடர் தாங்காமல் கிழக்குசார்பி லோர்குடையும், அஸ்தசூரிய

---

அருங்கலைச்செப்பு. — இந்தியத்தை வென்றான் தொடர்பாட்டோ டாரம்ப, மூர்த்து துறந்தான் முனி.

குறள்.—ஐந்தவித்தானாற் றலகல் விசும்புளார்க்கோமான், இந்திரனே சாலுங் கரி.

பொரிவாயி லைந்தினை யவித்தற்குப்பயன் புத்தனெனு மிந்திரனேயோதுஞ்சான்ற.

சீவக சிந்தாமணி.—அறவுக்கொடிக் கடவுளொடு காலத் தொலைத்தோயெம், பிறவியறுகென்று பிறவிக்கை யிலகாவி, கறவுமலர் வேய்ந்து கறுஞ்சார்ந்து நிலமெழுகித், அறவுநெறி கடவுளடி தூமமொடு தொழுதார்.

பாலனைய சிந்தை சுடரப்படர் செய்காதி, நாலுமுடனே யறிந்து நான்மெவரம்பாகி, காலமொரு மூன்று முடனே யுணர்ந்தகடவுள், கோலமலர்ச்சேவடிகள் கொண்டுதொழுதும்யாம்.

மூழங்குகடனெற்றி சுடர்மூளைத்தெழுந்ததேபோ, வழுங்கல் வினைகளற நியிர்தாங்குலக மூன்றும், விழுங்கியுமிழாதுகுணம் வித்தியிருந்தோய்நின், னிழலில் குணச் சேவடிகளேத்தி தொழுதும் யாம்.

உத்தரிய பல்குணங்கட் செல்வராம் பாகி, கீத்தவிரு விந்திரனை நின்றுதொழுதமரர், காத்தமும்ப வேற்திதவை நல்லை யவர் நண்ணித், தோத்திரஞ்சொலாநிதுகண் மாகதுணிக்கின்றூர்.

ன் சுடர் தாங்காமல் மேற்குசார்பி லோர் குடையும், மத்தியகால சுடர்தாங்காமல் உச்சிக்குநேர் மேலோர் குடையும் ஆக முக்குடைகளை நிழற்றி போதனை வினவி நின்றார்கள்.

அதையுறிந்த ததாகதர் அன்பர்களையழைத்து * தாமரைப் புட்பங்களையுந் தாமரைக் கொட்டைகளையுங் கொண்டுவரச்செய்து பூமியிற்பரப்பி அதன்மேலி லுட்கார்ந்துகொண்டு இத்தாமரையானது நீரிலிருந்தும் நீர் ஒட்டாம லிருப்பதுபோல் ததாகதன் உங்களுடன் கலந்திருந்தும் உங்கள் பற்றுக்களற்று உண்மெய்யி லுட்கார்ந்திருக்கின்றேன். அந்த நித்திய பீடத்திற்கு இவ்வனித்திய பீடம நிலையாகாவென் றுணர்த்தினர். அன்றுமுதல் தாமரைக்கொட்டைக்கு குருமணியென்றும், தாமரை புட்பத்திற்கு குருமலரென்றும் பெயருண்டாயிற்று.

இரண்டாவது தன்னை யடுத்த மாணாக்கர்களுக்குத் திரிபீடங்களை விளக்குவதற்கா யவர்களையும், மற்றுமுள்ளோரையும் நோக்கி அன்பர்காள் உலகத்தில் தோற்றும் பொருட்கள் யாவும் க்ஷணத்திற்குட்சணம் அழிந்துகொண்டேவருகின்றபடியால் சகலமும் அநித்தியமாயிருக்கின்றது.

அவ்வனித்தியவாழ்வை நித்தியமென்று தாவிபிடித்திருக்கும் ஒவ்வொருவரும் தனக்கு நித்திறை மறைத்தக்கால் மனைவி மக்கள் பந்து மித்திரர் பொற்பூஷண திரவியங்கள் யாவும் எங்கு மறைந்திருந்தது. தன்னை மறைத்த வத்திறை யெத்திற மொத்தது. அந்த நித்திறை இரண்டுநாள் மூடுமாயின் இறந்தானென்று தகனஞ்செய்துவிடுவார்கள்.

அடுத்தடுத்து இரவும்பகலும் மறைக்காவண்ணம் இரவுபகலற்றவிடத்தே விழித்திருக்கும் நித்தியநிலையை வுண்மெயென்று கூறப்படும்.

அதுவே மெய்ப்பொருளாதலின் அம்மெய்ப்பொருளை மறைக்குந் திரைச்சீலை யடுக்குகளாகும் பொருளாசை, கோபம், கள்ளருந்தல், முறட்டுத்தனம், வஞ்சகம், பிடிவாதம், பொருமெய், தற்புகழ்ச்சி, புறங்கூறல், ஆணவம், கெடுமதி யிவைகளேயாம்.

---

*வீரசோழியம்.—மூடைத்தலையை மதவேழந், தடைக்கையான் வெயின்மறைக்கும், பிடித்துறவடைந்தார்க்கே, நடக்குமென் மனனேகாண்.

தாடினை யிரும்போத்து, தோகையான் வெயின் மறைக்கும், காடகமுரைந்தார்க்கே, யோடுமென் மனனே தாண்.

வாசிட்டம்.—புண்டரிக வாதனத்தில், புத்தன்போல் உத்தர முகனாய்.

யாப்பருங்கலை.—நெறிகமழ் தாமரை மீமிசை யொதுங்கிய, அறிவனை வணங்கி யறைகுவன் யாப்பே.

அறநெறிச்சாரம். — தாவின்றி மெய்ப்பொருளுங் கண்டுணர்ந்து தாமரை, பூவின்மேற் சென்றான் புகழடியை.

சிலப்பதிகாரம்.—மலர்மிசை யடைந்த மலரடிக்கல்லதென், தலைமிசையுச்சி தானணி பொறாது.

குறள்.—மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடுவாழ்வார்.

தாயுமானவர்.—செங்கமல பீடமேல் கல்லாலடிக்குள்வளர், சித்தாந்த முத்திமுதலே.

சூளாமணி. — குருமணித் தாமரைக் கொட்டை சூடிய, திருமணிப் பீடமுஞ் செதுக்கவாயவும்.

நிகழ்காலத்திரங்கல்.— திருமலராந்தாமரையுட் சேர்ந்து கல்லாலடியிற், குருமலராங் குப்பல் குவிந்த ததிசயமே.

தாயுமானவர்.—குருமணி யிழைத்திட்ட சிம்மாதனத்தின்மிசை, கொலுவீற்றிருக்கு நின்னை.

சிலப்பதிகாரம்.—திங்கண்மூன் றடுக்கிய திருமுக்குடைக்கீழ்ச், செங்கதிர்ஞாயிற்றுத் திகழொளி சிறந்து, கோதைதாழ் பிண்டிக்கொழு நிழலிருந்த, வாதியிறோற்றத் தறிவனை வணங்கி.

ஆ ரு வ து

# ஆதிவேத வாக்கிய விவா காதை.



நித்திறையை சுகமென்றெண்ணி நாளுக்குநாள் திறைச்சிலைகளால் மேலுமேலும் மூடப்பட்டுவருவானாயின் சதா நித்திறையால் இம்மெய் நசிந்து விளக்கிடாய் மறுமெய்யெடுப்பன்.

குணப்பற்றுக்களின் நிலையை யறியவேண்டின் தசவாண்டுகளுக்கு முன் கண்ணிணாற் கண்ட காட்சியையும், மூக்கினால் முகர்ந்த நாற்றத்தையும், செவியினாற் கேட்ட ஓசையையும், நாவினால் உருசித்த சுவையையும், தேகத்தாற் கண்ட சுகத்தையுஞ் சிந்திக்குங்கால தோற்றுவித் தடங்கும் ஞாபகநிலையில் இராகத் துவேஷ மோகம் பெருகி பிறவி தோற்றத்தால் உலகம் விரிந்து உண்மெய் மறைந்திருக்கின்றது.

அந்த ஞாபகநிலையை உள்விழியால்நோக்கி இராகத் துவேஷ மோகங்களைப் போக்கி சுத்தவிதய சத்துவநிலையில் நிற்பீரேல் உண்மெய் விளங்கும்.

அவ்வுண்மெய்தான் நித்தியத்திற்கு வழியாயிருக்கின்றது. உண்மெய்தான் நித்தியமா யிருக்கின்றது. உண்மெய்தான் நிருவாணநிலையுமென்றறிந்து வழுதமருந்தாமல்,

இம்மெய்மறைவதற்கும் மறுமெய்தோற்றுவதற்கும் போவாபற்றி நிற்கின்றீர்கள். அப்பற்றுக்களே பிறவிக்குக் காரணமெனப்படும்.

அதாவது மண் பெண் பொன்னென்னும் பொருட்களைத் தாவும இராகத் துவேஷ மோகமென்னு மிதயப்பற்றுக்களேயாம.

அவ்விதய வுற்பவம் மூன்று வகையாம். அதன் தோற்றநிலைக்கு குணியென்றும், தோற்றிவைக்கும் நிலைக்கு குணமென்றும் பெயர்.

* இதில் பெருந்திண்டி, பேராசை, சோம்பல், கடுஞ்சினம், காமம், நீதிகேடு, பெரு நித்திறை, பொய், தன் முயற்சியின்றி பிறரை கெஞ்சுதலாகும் ஊக்கமற்ற தாமதகுண மென்னப்படும்.

யீகை, விரதம், தருமம், பேணுதல், அறிவின் விருத்தியை நாடல் கேள்வி முயலல், நன்று தீமைதன் றுணாலாதி முயற்சியை இராசதகுணமென்னப்படும்.

---

* பின்கலை நிகண்டு.- தாமதம் நித்திரையே குண்டி சாம்புதல் சோம்பு மூரி, காமமே சீறிக்கேடு கண்ணுறக்கம் பொச்சாப்பு, காமசஞ்சலமே தருகம் நாட்டலா யிம்மூப்பாதும், ஆமலி யுடனே மற்ற மெலிவொடு சகளுமாமே.

தானமே தவமே மற்ற தருமம்பேணுதலினோடு, ஞானமே கல்விகேள்வி நல்லறிவை தெரிதரானே, ஞானமோன் றில்லார் வைத்த விராசத குணங்களென்ப, மனமீன் முனிவன்மூன்று தலைத்திடு மூன் மெய்தானே.

எற்றசாத்துவிதத்தோடே யிராசதத்தாமதங்கள், ஆற்றமுக் குணங்களாகு மதிற்சத்து விதமே ஞானம, சாற்றிடு மதுமே மெய்மெய் சாலநல்லருளுண்டாதல், பேதற்றிய வாய்மெயோடைம் புலனடக்குதலுமாமே.

ஞானம், தவம், மெய்யுணர்ச்சி, அருள், வாய்மெய், ஐம்புல னடக்கலாதி நன்மெய்க் கடைப்பிடித்தல் சத்துவகுணமென்னப்படும்.

உலகதோற்றத்தில் மகிழ்ந்து இவன் மித்துரு அவன் சத்துருவென்றும், இவன் உன்னியன் அவ னன்னியனென்றும், இவன் தாழ்ந்தவன் அவ னுயர்ந்தவனென்றும், இவன் செல்வமுடையவன் அவன் வறுமையுடையவனென்றும் ஒன்றாக்கொண்டை பேதிக்காமல் சகல சீவராசிகளுக்கும் உண்மெய் ஒன்றென் றுணர்ந்து சீவகாருண்யமுடையவர்களாய் பொருமை யென்னும் பொக்கிஷத்தைச் சேர்த்து சுகவழியைக் கண்டடையுங்கள்.

அச்சுகவழி யாதெனில், மாறாப்பிறவியிற் சுழன்று மேலுமேலுந் துக்கத்தை யதிகரிக்கச்செய்யுந் தீவினைகள் பத்தையுமகற்றி நல்வினையாம் பத்துப் பாதையில் நடத்தல்;

அதாவது, அவாவின்மெய், அருள், தன்னை யறிதல் இம்மூன்றையும் மனத்தா லனுசரிக்கவேண்டியது.

இனியவை கூறல், உண்மெய் கூறல், பயனுள கூறல், அறங் கூறல் இந்நான்கையும் நாவினு லனுசரிக்கவேண்டியது.

பெரியோரை வணங்கல், தான மீதல், தவமேட லிடுதல் இம்மூன்றையும் தேகத்தா லநுசரிக்கவேண்டியது.

பாரதம் தசாகமென்னும் பத்துப் பாதையையே சுகவழியென்றும் முத்திக்கேகுந் தசபாரமிதமென்றுங் கூறப்படும்.

*இச்சுகவழிக்குத்தடைகளாகும் தீயச்சிந்தை, பேராசை, கோபம் இம்மூன்றையும் மனதிற நங்கவிடாமல நீக்கவேண்டியது.

கடுஞ் சொல், பயனிலாச் சொல், கோட் சொல், பொய்ச் சொல் இந்நான்கையும் நாவில் எழவிடாம லடக்கவேண்டியது.

கொலை, களவு, பயனற்றச் செய்கை இம்மூன்றையுந் தேகத்தாற் செய்யாம லிருக்கவேண்டியது.

இவ்வகையாக மனத்தாற் செய்யுந் துர்க்கருமம் தேகத்தைப் பற்றிக்கொண்டும் தேகத்தாற் செய்யுந் துர்க்கருமங்கள் மனதைப்பற்றிக்கொண்டும் துக்க விருத்தியை யதிகரிக்கச் செய்து, அநித்தியமாகிய மரணத்திற்குக் கொண்டுபோகும்வழியைத் திறந்துவிடுவதுமல்லாமல் பிறவிக்கும் ஓர் வித்தாயிருக்கின்றது.

தேகத்தாற் செய்யும் நற்கருமங்கள் மனதைப் பற்றிக்கொண்டும், மனதாற் செய்யும் நற்கருமங்கள் தேகத்தைப் பற்றிக்கொண்டும், ஒன்றுக்கொன்று கலந்து அன்பையும் ஆற்றலையும் பெருக்கி உண்மெயாகிய நித்தி

---

* மணிமேகலை.--தீவினையென்பதியாதென வினவின், ஆய்தொடி நல்லாய் ஆங்கது கேளாய், கொலையே களவே காமத்தீவிழை, யவையா துடம்பிற் றோன்றுவ மூன்றும், பொய்யே குறளை கடுஞ் சொல் பயனில், சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும், வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சி, யென்றுளந்தனி லுருப்பன மூன்றும், பத்துவகையாற் பயன்றெரி புலவ, ரித்திறம்படார் படர்குவராயின், விலங்கும் பேயும் நரகருமாகி, கலங்கிய உள்ளக் கவலையிற் றோன்றுவர்; நல்வினை யென்பது யாதென வினவிற், சொல்லிய பத்தின் றொகுதியிற் றீர்ந்து, சீலந்தாங்கி தானந்தலைநின்று, மேலென வகுத்த வொருமூன்று திறத்துத், தேவரு மக்களும் பிரமருமாகி, மேவிய மகிழ்ச்சி வினைப்பய னுண்பவர்.

யைப்பிணியைத் திறந்துவிடுவது மல்லாமல் பிறவிக் கேதுவாம் வித்தையும் அழித்துவிடுகின்றது.

தன்னை யறிந்தவ னெவனோ அவன் சுகப்படுவான். உண்மெய்யை யுணர்ந்தவன் எவனோ அவன் நித்தியமடைவான்.

மூதாரமும் பெருமெய்யுமானது உண்மெய் துன்பசாகரத்திலிருந்து உங்களை விடுவிக்கச் செய்வதும உண்மெய், உலகபாசங்களினின்று விடுவிக்கச்செய்யும் இரட்சகரும் உண்மெயென் றறிந்துக்கொள்ளுவீர்களாக.

நீங்கள் உங்கள் உண்மெய்யை யறிந்துக்கொள்ளுவதற்கு சக்தியற்றவர்களாயிருந்தாலும் அவ்வமுதத்தைக் கசப்பென் றெண்ணினாலும் உங்கள் உண்மெயில் நம்பிக்கை வையுங்கள். உண்மெய்யைவிரும்புங்கள். உண்மெய்யில் அன்பை வளர்த்துங்கள்.

யதார்த்தத்தில் உண்மெய்தான் எவற்றிற்குஞ் சிறந்தது. அதை யாதாமொருவர் கூட்டவாவது குறைக்கவாவது மாற்றவாவது விருத்திசெய்யவாவது முடியாதென்று கூறி தன்னை யடுத்த மாணாக்கர்களை யருகிலழைத்து ஒன்றுக்கொன்றை பற்றி பிறவிக்காளாகும் ஜின்மத்திரை பதினாறுவகை நிலைகளை விளக்கிவருங்கால் மாணாக்கர்கள் மனதில் அவைகட்பதியாமற் பரவுவதை யுணர்ந்த பகவன் வரிவடிவாகும் அட்சரங்களை யுண்டுசெய்து அதன்வழியாக தன்மங்களைப் பதிவடையச்செய்யவேண்டுமென் றெண்ணி வடமொழியையு மதனட்சரங்களையுந் தென்மொழியையு மதனட்சரங்களையும் உற்பத்திச்செய்து;

*மாணாக்கருள் ஜனகர், வாமதேவர், நந்தி, சோமரென்னப்பட்டவர் நால்வருக்கு ஜெயமுத்திநிலையாகும ஜின்முத்திரையையளித்து தானியற்றிய வரிவடிவ பாஷையாகும் வடமொழியென்னும் சகடபாஷையை பாணினியாருக்கும், தென்மொழியாகுந் திராவிடபாஷையை அகத்தியருக்கும், போதித்து ஞானத்தானமளித்து எட்டுத்திக்குகளிலும் மெய்யறத்தைப் பரவும்படிச செய்தார்.

காரணம், மகடபாஷை யென்றும், மூலபாஷையென்றும், பிராகிருதபாஷை யென்றும், பாலிபாஷையென்றும, வழங்கிவரும் ஆதிபாஷை வரிவடிவமில்லாமல் ஒலிவடிவமாத்திரமா யிருந்தபடியால் தன்மங்களை நிலைக்கச் செய்வதற்கு வடமொழியையுந் தென்மொழியையும் உற்பத்திச்செய்தார்.

† பாணினியவர்கள், கபிலர், ஜனகர், வாமதேவர், நந்தி, சோமனைவருக்கும் சகடபாஷையையூட்டி வடநாடெங்கும் மெய்யறமாம் புத்ததன்மத்தைப் பரவச்செய்தார். அகத்தியருக்கும் திருமூலருக்கும் திராவிடபாஷையையூட்டி யவற்றுள் அகஸ்தியர் தென்றிசைசென்று தமிழ்பாஷை

* வைராக்கியசதகம்.—ஆலகீழலிலன் றொருநால்வருக், கறநெறி யுரைத்தானை, காலகாலனை சிவப்பிரகாசனென், கண்மணிதனையுன்னு.

† பதஞ்சலியார் சூரணம்.—வசனசத்தி கபிலாதி மாமுனிவர் மகிதமரான முனைகாதியும், வாம சோம முனிநந்திதேவன் வடபாஷை யோதினர்க்கு வன்மையே, மேருவாவுட வீதிதோறுமுயர் வேதஞான ஜனகாதியர், மேலைவீதிதிரு மூலர்வர்க்கம்க வேயிருந்தவினையாடினார், பானுகீழ்திசையி லேயர்சட்டமுனி பாணுமாமலையி லாதினார், பன்னுதென்றிசையிலே யிருந்து தமிழ் பாஷையோதினனகத்தியனே, தானிலே யிவர்கள் சேஷவர்க்கமிது சேர்டிகோஷமிவர் தம்மிலே, சதுரங்கிரி யுமச்ச சுக்ரமுனி நாசராபதி கொக்கணன், சேருவாவுவா தேமடங்கனைசெய்துசித்தநிகமாடினார், தேசதேசமிசைபாஷையாது மிவர் செப்புநன்முறைதெரிந்திடே.

யையூட்டி வரிவடிவாம அட்சரபதிவால் தன் மங்களைப் பாவச்செய்து மடங்களைக் கட்டுவித்து உலோகோபகார சித்துக்களுமாடி வைத்தியம், ஞானம், நீதி முதலிய பொக்கிஷங்களை யளித்துவந்தார்.

* அவலோகிதரென்பதும், சாத்தனென்பதும், கிழவனென்பதும், இந்திரனென்பதும் பகவனுக்குரிய வாயிர நாமங்களி லடங்கியதுவகளே யாம்.

உலக யிதத்தைக் கனிந்து பலவுபெருயது வாக்கியங்களை யூட்டினவராதலின் அவலோகிதரென்றும், விண்ணவரும் மண்ணவருஞ் சாற்றுதற்குரியவராதலின் சாத்தனென்றும். சகலமும் அறிந்தவராதலின் கிழவனென்றும், ஐயிந்திரியங்களை வென்றவராதலின் ஐந்திரர், இந்திரரென்றும் வழங்கப்பெற்றார்.

பூமியின்கண் நீரினைதுவால் தாபரவர்க்கங்கள்தோன்றி-தாபரவர்க்கங்களினைதுவால் ஊறுவனங்கள்தோன்றி—ஊறுவனங்களினைதுவால், மட்சங்கள் தோன்றி-மட்சங்களினைதுவால், பட்சிகள் தோன்றி-பட்சிகளினைதுவால், விலங்குகள் தோன்றி-விலங்குகளினைதுவால், வாலனார் வாலற்ற நரரென்னும் மக்கள் தோன்றி-ஆறுவது தோற்றம் விரிந்து நின்ற மக்களுள் வாலவயதில் அறிவின் விருத்தியினின்ற வாலறிஞன் தனக்கோராசிரியனில்லாமலும் வரிவடிவமாகும் அட்சரபாஷை யில்லாமலும் தன திடைவிடா விசாரிணையினைதுவால் மெய்ப்பொருளை ஓதாம லுணர்ந்து முக்காலமுமறிந்த முனீந்திரனென்னும் ஏழாவது தோற்ற தேவனாக விளங்கியபடியால், சகல சங்கத்தோர்களும் முன் இந்திரரை ஆதிதேவனென்றும், ஆதிகடவுளென்றும், ஆதிபகவனென்றும், ஆதிநாதனென்றும், ஆதியீசனென்றும, ஆதிசிவனென்றும், ஆதிமூலமென்றும், ஆதிகுருவென்றுஞ், சகல நூற்களின் காப்புகளிலும் அவனையே தொழுதுவந்ததுமன்றி மற்றுமுள்ள மக்களும் அவனைவணங்கிமெய்யறம்பற்றி † தீவினையையுமகற்றிக்கொள்ள வேண்டுமென்று முயற்சியிலிருக்கின்றார்கள்.

போதிவேந்தன் சரணலால் அரண்புகோமென்று வாசர்கள் புடைசூழவும் மற்றுமுள்ளமாக்கள் சூழநிற்கவும் ஆலமர்க் கடவுள் திரிபேத

* முன்கலைதிவாகரம்.—வடநூற் கரசன் றென்றமிழ்க்கவிஞன், கவியரங் கேற்று முபயக்கவி புலவன், செரிகுணத்தம்பற் கிழவோன் சேந்த, னறிவுகரியாக தெரிசொற் றிவாகரத்து, முதலாவது தெய்வப்பெயர்தொகுதி.

வீரசோழியம் —மதத்திற் பொலியும் வடசொற்கிடப்புந் தமிழ்மரபு, முதத்திற்பொலியேயழை சொற்களின் குற்றமுமோங்குவினை, பதத்திற் சிசைவு மதிக்கே முடிக்க பன்னூறுபிரம், விதத்திற் பொலியும் புகழ்வலோகிதன் மெய்த்தமிழே.

[illegible] பதிப்புரை.—இடமுடைய மும்மொழியாம் திரிபிடக நிறைவிற்சாய், வடமொழியை பாணினுக்கு வகுத்தருளியதற்கிணையாத், தொடர்புடையத் தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்த, குடமுநிக்கு வற்புறுத்தார் கொள்ளாற்று பாகர்.

சிலப்பதிகாரம்.—கண்களிமயக்கத்துக் காதலற்றிருந்த, தண்டமிழாசான் சாத்தனிஃதுரைக்கு.

தொல்காப்பியம்.—மயங்காமரபினெழுத்துமுறைகாட்டி, மல்குநீர் வரைப் பினைந்தார்.

மணிமேகலை.—ஆயிரவமத் தாழியன் திருவடி.

கமலசூத்திரம். — சகஸ்திராம பகவன்

† மெய்ப்பாட்டியல்சூத்திரம்.—தீவினையை வெல்லும் அறவாழி தெய்வம் அஞ்சல்

சூறன்.—அறவாழியந்தணன்தாள் சேராந்தார்க்கல்லார், பிறவாழிநீந்தலரிது.

வீரசோழியம்.—பீடுகொண்டவார்தனிர் யிரக்குபோதி யானைவெம், பிராவனாருமெத்துவார்பிறப்பிறப்பிலார்களே

வாக்கியங்களாகுந் திரிபீடங்களை வகுத்து அதன் முதன் மொழியாகும் பாபஞ்*செய்யா திருங்கோளென்பதை கர்மபாகையாகவும், நன்மெய்க்கடை பிடியுங்கோளென்பதை அர்த்தபாகையாகவும், இதயத்தை சுத்திசெய்யுங்கோளென்பதை ஞானபாகையாகவுமுள்ள பேதத்தி னுட்பொருளை விளக்கி மகடபாஷையுள் மறைந்துள்ள மும்மறை வாக்கியங்களை அவனவன் தேகங்களி லுணருமாறு தென்மொழியில் மெய்யறம், மெய்ப்பொருள், மெய்யன்பென்னும் அறம்பொருள் இன்பத்தை யுணர்த்தி இப்பேரின்ப நிலையை அவனவ னநுபவிக்க வேண்டியவனுதலின் அதையே அவன் முதிர்ந்த முத்திநிலை நிருவாணமென்றுங் கூறிவருங்கால் நாக சர்ப்பங்கள் அவர் தோளினும் தாளினும் புரண்டோலாவவும் யானைகள் தாமரை புட்பங்களைக் கொய்து வந்தர்ச்சிக்கவும் தனது மாணாக்கர்களிற் சிலர் சித்துக்களை விளையாடவுங் கண்ட கருணாம்பரன் அவர்களை அருகிலழைத்து நீங்கள் செய்துவருஞ் சித்துக்கள் மெய்யறச்செயலாலும், மெய்ப்பொருள் உணர்ச்சியாலும், மெய்யின்ப சுகத்தாலும் எண்பத்தொன்பது சித்துக்களுந் தானே விளங்கும். அந்தக் காணாமல் நீங்களே சித்தியென்னணங்கொண்டு செய்வீர்களானால் டம்ப மதிகரித்து மெய்ப்பொருள் மறையுமென்று கூறினார்.

அதை யவர்களுணராது ஆசிரியருக்கே சித்தினிலை தெரியாதென் றகங்கரித்த வெண்ணத்தை யறிந்த வறிவன் விருட்சத்தடியிலிருந்து மறைந்து தான் வரும்வழியில் தனது பொற்குண்டலங்களை கழட்டிக் கொண்டு செப்புக் குண்டலத்தை செவியிலிட்ட வைந்தாக்கர்கள் முன் தோற்றினார்.

ஆதிவேதமென்னும் மூன்று பேதவாக்கியங்களை யோதியவரும் அதில் மறைந்துள்ள நான்கு மறைப்பொருட்களாம் உபநிடதங்களை விளக்கியவருமாகிய வேதியன் மறத்தடியிலிருந்து மறைந்தவுடன் அவ்விடம் நிறைந்துள்ள சகல மக்களுந் திகைத்து நின்றார்கள். அவர் ஆசனத்தைத் தாங்கினின்ற * யானை, ரிஷபம், சிம்ம மிவைகள் அவரைத்தேடவும் அவர் தோளினுந் தாளினும் புரண்டு விளையாடிக்கொண்டிருந்த சர்பங்கள் ஓடிவந்து அவர் உட்கார்ந்திருந்த மரத்தடியில் வந்து † படமெடுத்து ஆடுகிறதும் வந்திருக்கு மக்களைப் பார்த்துத் கவிழ்ந்துகொள்ளுவதுமாகியச் செய்கையிலிருந்தனகள். அரசமரத்தடியிற் காணாத மககள் சர்ப்பங்களை தரிசித்துக்கொண்டுபோனார்கள். அவனை ?பந்திசெல்லும்ரிஷபமும் அவராசனத்தின்முன்வந்து சயனித்துக்கொள்ளுதலை தொழிலாயிற்று.

---

* சீவகசிந்தாமணி.—ஆதிவேதம்பயந்தோய் நீ, யலர்பெய்மாரி யமர்ந்தோய் நீ, நீதிநெறியை யுணர்த்தோய் நீ, நிகரில் காட்சிக் கிறையோய் நீ, நாதனென்னப் படுவோய் நீ, மைசெய்பிறவிக் கடலகத்துன், பாதகமலந் தொழவெங்கள், பசையாப்பவிழப் பணியாயே.

அருங்கலச்செப்பு — வேதங்கடன்னை விளித்தான் மெய்யுரைத்தான், போதிசேர் வேந்தன் புகழ்.

சூளாமணி. — ஆதியங்கடவுளை யருமறை பயந்தனை, போதியங் கிழவனை பூமிசை யொதுங்கினை, போதியங் கிழவனை பூமிசை யொதிங்கிய, சேதியஞ்செல்வனின் றிருவடி வணங்கினம்.

† சீவகசிந்தாமணி.—குழலுடைச்சிகழிகைக் குமரன்றேளினை, கழலுடையினையவர் கச்சின் வீக்கலி, சுழலுடைக்கடவுளை யரவுசேர்த்தென, விழவுடைமுதுநகர் விலாவிக்கின்றதே.

§ யாப்பருங்கலக்காரிகை —வானார்த மழைத்தடக்கை வளமலைமேல் வைப்பதாங்கக், கோனார்ந்த பூணாகங் குழைபுனை கொட்டெருத்தின், மாலைதாழ் கூந்தலார் வரன்முறையான் வந்தேத்த, சோலைதாழ் பிண்டிக்கீழ்ச்சூழ்ந்தவர்களுனையென்றுமையான்.

ஐந்துபேரும் அரவங்காட்டாது அடித்துபறிக்கும் அரக்கர்களாதுவின் நிலைக்கக்கண்ட பகவனின் தோற்றத்தால் தியங்கி தங்களால் செப்புக்குண்டல மளித்த தேசிகனென்று மயங்கி ஒருவருக்கொருவர் தங்கடங்கள் முகங்களைப் பார்த்துக்கொண்டு வாய் பேசாம னின்றார்கள்.

அதை யுணர்ந்த பகவன் அரக்க ரைவர்களையும் நோக்கி அன்பர்களே! தங்களிருப்பிடங்கள் எங்கு, செய்யுந் தொழில்க ளென்னை மனைவி மக்க ளெவ்விடமென வுசாவினார்.

அரவ மடங்கியக்கா லடித்து பறித்து யேதோரிடமுமின்றி யதேச்சைபாய்த் திண்று திரிபவர்களாதலின் பகவன் முகமலர்ச்சியையும், அவரது தேஜசையும், அன்பு மிகுத்த பார்வையும், மிருதுவான வார்த்தையையுங் கண்ட வைந்தரக்கர்களுந் தங்களுக்குள் சதா குடிக்கொண்டிருந்த கள்ள விஷங்களாகும் அரவத்தை யகற்றி ஐயன் பாதத்தில் விழுந்து எங்கள் அக்கிரமங்களைப் பொருக்க வேண்டுமென்று வணங்கினார்கள்.

அதை யறிந்த பகவன் ஐவரையும் எழுந்திரியுங்களென்று கூறி வோர் மறத்தடியில் உட்கார வைத்துக்கொண்டு அன்பர்களே தாங்கள் செய்துவந்த அக்கிரமங்கள் எவை யான் பொருக்க வேண்டியவைகள் யாதென வுசாவினார்,

அதற் கைவர்களு மெழுந்து வணங்கி ஐயனே, சில காலங்களுக்கு முன் தாங்க ளிவ்வழியில் வந்தபோது தமது செவியிலிருந்த பொற்குண்டலங்களைக் கழட்டிக்கொண்டு செப்புக்குண்டலத்தை செவியிலிட்டுப் போய்விட்டோம். அதே செப்புக்குண்டலத்தை தங்கள் செவியிற் காணுங்கால் முன்பு யாங்கள் கழட்டிக்கொண்ட பொற்குண்டலத்திற்கு மேலான ப் பிரகாசமும் ஒளியுங் காண்கின்றபடியால் எங்களுள்ளங் கலங்கி யாங்கள் முன்செய்த அக்கிரமத்தைப் பொருக்கும்படி வேண்டினோமென்றார்கள்.

தாங்கள் முன்செய்த செய்கையை அக்கிரமமென் றறிந்து கொண்டீர்களாவென்றார்.

ஐயனே யதனை அக்கிரமமென் றறிந்துகொண்டோமென்றார்கள்.

இதுகாறுந் தாங்கள் செய்துவந்த செய்கைகள் யாவும் அக்கிரமமென் றறிந்துகொண்டீர்களா கிரமமென் றறிந்து கொண்டீர்களா வென்றார்.

ஐயனே, யாங்கள் செய்து வந்த செய்கைகள் யாவும் அக்கிரமமே யென்றார்கள்.

தாங்க ளிதுவரையு மறியாதக் கிரமங்களையும், அக்கிரமங்களையும் இன்று எவ்வகையில் அறிந்துகொண்டீர்களென்றார்.

ஐயனே, தாங்கள் செவியிலிட்டக் குண்டலங்களே எங்களை சீர்பெறச் செய்துவிட்டதென்றார்கள்.

தாங்க ளெமக்களித்த செப்புக்குண்டலந் தங்களை எவ்வகையில் சீர்படுத்தியதென்றார்.

ஐயனே, அச்செப்புக் குண்டலம் எங்களிட மிருக்குமளவுங் களிம்பேறி யிருண்டைந்திருந்தது. அதைத் தங்கள் செவியிலிட்டபோது களிம்பற்று வொளிவீசுகின்றது. *அவ்வொளியைக் கண்ட எங்களுள்ள

* கெந்தாவத்திரங்கல். — இந்தக்கர்செய்துவந்த அதியாக் கொலைக்களவு, உந்தன்முகங்கண்டே யொழிந்த அதிசயமே. ஒழிந்த வுள்ளத் துள்ளக்களங்க முழுதகற்றி, பழுதற்ற சங்கம் பதித்த அதிசயமே.

அரச னவ்வாக்கியத்தை சிரமேற்கொண்டு வரிவடிவாம் வட அக்கரங்களையுந் தென்னக்கரங்களையுங் கற்று பாறையிற் பதிக்குஞ் சீலத்தை வினவினான்.

அரசன் மனதில் வரிவடிவட்சரங்கள் பதியும்வரையில் அவ்விடமே புசித்து மலையிற் றங்கி தன்மங்களைப் போதிக்குங்கால் திரண்ட கூட்டங்கள் மலைக்குவந்து தன்மத்தை வினவும் போக்குவருத்தி லிருந்தார்கள்.

அரசன் பாறைப்பதிவை வினவியகால் ஓர் பாறையைத் திருத்தி அடியிற் குறித்துள்ள தசபாரங்களைப் பதியச்செய்தார்.

* உங்களுக்குள்ள அன்பை மற்றசீவராசிகளின்மீதருளி சீவர்களை விருத்திசெய்வீர்களாக

உங்களுக்குள்ள பாக்கியத்தை நடுநிலைமெயினின்று எளியமக்களுக்கீய்ந்து யீடேற்றுவீர்களாக.

உங்கள் மனதைப் போகும் போக்கில் விடாமல் அடக்கத்தினின்று ஆண்டுகொள்வீர்களாக.

உங்களுக்குள்ள ஒழுக்கங்களை வழுவடையாது நற்பாதையில் நடத்துவீர்களாக.

உங்கள் மனைவியை மற்றவன் விரும்பாதிருக்கவெண்ணுகிறவர்கள் அன்னியர் மனையாளை யிச்சியாதிருப்பீர்களாக.

உங்கள் பொருளை மற்றவர்கள் களவாடாதிருக்கவிரும்புகிறவர்கள் அன்னியர் பொருளை யபகரிக்காதிருப்பீர்களாக.

உங்களுடலுக்கு மற்ற சீவராசிகளால் கொலையுந் தீங்கும் நேரிடாமலிருக்க விரும்புகிறவர்கள் மற்ற சீவராசிகளைக் கொலையுந் தீங்குஞ் செய்யாம லிருப்பீர்களாக.

உங்க ளறிவை விருத்திசெய்ய விரும்புவீர்களாகில் உங்களறிவை மயக்கும் வஸ்துக்களை யருந்தா திருப்பீர்களாக.

உங்களை யொருவன் பொய்சொல்லி வஞ்சியா திருக்க விரும்புகிறவர்கள் நீங்க ளொருவரைப் பொய்சொல்லி வஞ்சியா திருப்பீர்களாக.

உங்க ளிதயத்தி லெழும்பும் காம வெகுளி மயக்கங்களை எழவிடாமலுந் தங்கவிடாமலு மகற்றுவீர்களாக.

என்று ஒழுக்கங்களையும் சீலங்களையும் பதிவுசெய்ததை யுணர்ந்த வரசன் மற்றுமுள்ளப் பாறைகளிலும்பதியச்செய்து குடிகளும் அரசனுந் தினே தினே யுண்மெய் விசாரிணையி லிருந்தார்கள.

* பாரதப்பத்து.—அன்பை பெருகவி யாருயிர்க் கூட்டி, யின்பை விருத்திச் செயல். அறத்தை விருத்தி யாருயிரா ம்பல், புறமெய்நநிலையாம். மனத்தை யொடுக்கி தாழடக்கல், ஊர்த்த கடனென்றறி. உள்ள வொழுக்க முயர்த் தோன்றல், விள்ளுஞ் சுகவழியாம். அன்னியர் மனைவி யாசையேற்றல், உன்னியல் பாழ்மனையாம். பைர்பொருளா சை யுள்ளத்தெழுவல், பேர்மனை தறபொருள் பாழ். தன்னுடல் சார்க்குந் தீனையர்தரணி, மன்னுயிர் காத்தல் மனு. அறிவை பெருக்கி யாற்றலுடையோர், செறிவை மயக்கமறல். வஞ்சமகற்றி வாழ்வை விரும்பில், துஞ்சம் பொய்மையொழி. காமவெகுளி மயக்கமகற்றி, யேமவிதயத்திரு. பாரதம் பத்தும் பாறைப் பதித்து, சீரது தந்தான் சினன்.

* மாரனைவென்று முத்திவழிக்குமுதல்வனுகவும் ஜெயமுத்தியென்னும் ஜின்முத்திரை யருளிய ஜினன் அம்மலையிற் சிலநாட் தங்கி கலைவடிவும் சிலைபதிவு மளித்தக்கால் (சினன் மலையென்றும், ஜினன் மலையென்றும்) சைனமலையென்று மதற்குப் பெயருண்டாயிற்று.

விம்பாசார நகரமெங்கும் வரிவடிவ பாஷையும் தசபாரகோஷமும் பரவியவுடன் ஜினன் அந்நகரம்விட்டகன்று பூர்வம் பாலிபாஷையில் வாரணாசி யென்னுங் காசிநகரடைந்து முதற் சங்கத்தை ஸ்தாபித்தார்.

† கிறுபகரென்னும் புத்தபிரான் பாரதத்தை மலையிலெழுதியுள்ளாரென்பதும் மகா புராண பாடம்.

பாரதமென்பதும் தசபாரமென்பதும் பாரமிதமென்பதும் செய்யுட்களாயிராது. வாச்சுநடையி லெழுதியுள்ள தசசீலத்தின் பெயராம்.

விம்பாசாரன் தேசத்துள்ளக் குன்றின்மீது சிலநாள் தங்கி தசசீலங்களைப் பதிவுசெய்து தசாத தன்மசக்கர முருட்டியபக்கால் குன்றைவேந்தனென்றும் வேறுபெயரா லழைக்கப்பெற்றார். ஆதிநாதனென்றும், ஆதிவேதமென்றும், முதநூலென்றும் வழங்கிய திரிபீட வாக்கியங்களை வரிவடிவாம் அட்சரங்களில்லாமல் ஒலிவடிவாம் வார்த்தையாற் கூறவும் செவியால் கேட்கவு மிருந்தகாலத்தில் அவற்றை எழு பேதமாக வழங்கி வந்தார்கள். அதாவது, ஆதிநூல், எழுதாக்கேள்வி, ஆரணம், ஓத்து, சாகை, சுருதி, இருக்கு என்பதுவாம். வரிவடிவாம் அட்சரங்களையும் பகவனின்றருளியப் பின் அவர் ஆதிநூலை எழுவகைப் பெயரால் வழங்கி வந்தார்கள். அதாவது ஆகமம், ஆரிடம், பிடகம், தந்திரம், பனுவல், சமயம், சூத்திரம் என்பதுவாம். ஆதிவேதம், ஆதிநூலென வழங்கும் திரிபீடம், திரிபிடகமென்னும் திரிபேத வாக்கியங்கள் யாதெனில்:—

பாபஞ்செய்யாதிருங்கள்.

நன்மெய்க் கடைபிடியுங்கள்.

உங்க ளிதயத்தை சுத்திசெய்யுங்கோ ளென்பதே.

---

பரம்பரபோதம்.

*வீரசோழியம்.—போரக்கரோரைவீரக் கரவமிழ்தம் பொழிந்தனையே, ஆரமிழ்த மணிநாகர்க் குலமுயய வருளினையே, வார்சிறைப்புள்ளரையர்க்கும் வாய்மெனெறி பகர்ந்தனையே, பார்மிசை யீரைந்தும் பாவின்றி பயிற்றினையே.

சிலப்பதிகாரம்.—வெங்கநெடு வேள்வில் விழாக்காணும், பங்குனி முழக்கத்துப் பணியரசு யாண்டுளன்.

சீவகசிந்தாமணி.—காசறு துறவின்மிக்க கடவுளர் சிந்தைபோல, மாசறு விசும்பின் வெய்யோன் வடதிசை யயனமுன்னி, யாசறு நடக்குநாளு ளங்கனை கிழவன் வைகிப், பாசறை பரிவு தீர்க்கும் பஙகுனி பருவஞ்செய்தான்.

மணிமேகலை.—ஆலமர்ச் செல்வன் மதன்விழாக் கோல்கொள, பாலமர் கொள்ளும் பங்குனி பருவங், காண்மினோ வெனக் கண்டுநிறகுனரும்.

பிங்கலைநிகண்டு. — சிறந்திடுங் குன்றவேந்தன் குணபுத்திரன் சீலநூலை, மறஞ்செயாவாறே கற்று மதிமயக்கதினுலே, குறைந்திடுந் தமது மேற்கோள் கொளீஇய மற்றது காக்கே, யுந்தது மறியாதாரைப் போறலே யறிமடந்தான்.

† பிங்கலைநிகண்டு.—தருமராசன, முனிந்திரன், சினன் பஞ்சதாரைவிட்டே, யருள்கரந் தவுணர்க்கூட்டுக் ததாகதன் ஆதிதேவன், விரவுசாக்கையனே சைனன் விநாயகன் சினந்தவிர்த்தோன், அரசுநீழலிலிருந்தோன் அறிஅறன் பகவன் செல்வன்.

* ஆதிபேத வாக்கியம் கன்மபாகை இதன் காரணம்; பாபஞ்செய்யாதிருத்தல் காரியம் மெய்ப்பொருளறிதல் இதன் பெயர். பொருட்பால் பௌடிகம் இருக்கென்று கூறப்படும். இரண்டாம் பேதவாக்கியம், அர்த்தபாகை இதன் காரணம் நன்மெய் கடைபிடித்தல் காரியம் மெய்யற வுணர்ச்சி. இதன் பெயர் அறத்துப்பால், இயமம், தைத்தரியமென்னப்படும். மூன்றும் பேதவாக்கியம், † ஞானபாகை இதன் காரணம் இதயசுத்திசெய்தல் காரியம் மெய்யின்பமாம் பேரின்ப உணர்ச்சி. இதன் பெயர் காமப்பால் சாமமென்னப்படும். பேதவாக்கியங்கள் மூன்றேயன்றி நான்காவது பேதவாக்கிய மில்லை. ஒரு பொருள் ஏகமென்னும் வீட்டுப்பேறை குறிக்கும் நிருவாணமாம். பேரின்பநிலையை நான்காவதுபேதமெனக் கூறிய போதிலும் மொழிக்குமொழி ருசிக்கும் மும்மொழியாம் மூன்று பேதவாக்கியங்களன்றி நான்காவது பேதவாக்கியங்கிடையா. அறம் பொருள் இன்பத்திற் காதாரமாம் வீடுபேற்றை அவனவ னுணர்ந்து பேரின்பஞ் சுகிக்க வேண்டியவனாதலின் அதன்பெயர் ‡ அதர்வணமென்று கூறிவிட்டார்கள். ஒன்றென்னும வீடுபேற்றை யடைதற்கு மும்மொழிகளாம் மூன்றுவாக்கியங்களும் மாறுபொருளால் நான்கு பேதமாயிருந்ததுகொண்டு வடமொழியில் பேதமென்றும், தென்மொழியில் § வேதமென்றுங்கூறினார்கள்.

¶ மூன்றுபேதவாக்கியங்களும் வீடும்விளங்குதற்கு வாக்கியமொன்றுக்கு எட்டு உபநிட்சயார்த்தங்களாக நான்கு வாக்கியங்களுக்கும் முப்பத்திரண்டு கலையாம் உபநிடதங்களை விளக்கினார்.

**பாபமென்ப தேவை.—உபநிடதமென்னும் உபநிட்சயார்த்த முதலெட்டு.**

‖ 1. அன்னியப் பிராணிகளின்மீது கோபங்கொண்டு துன்பஞ்செய்தல் பாபம். 2. அன்னியர் பொருளை யவர்க ளனுமதியின்றி யபகரித்தல் பாபம். 3. அன்னியரைக் கெடுக்கவேண்டுமென்று தீங்குநினைத்தல் பாபம். 4. அன்னியர் ஸ்திரீகளை அபகரித்தல் பாபம். 5. அன்னிய

---

* பின்கலை நிகண்டு ஆதிநூலெழுதாக் கேள்வி யாரண மொத்துச்சாங்க, யேதமில் சுருதிதன்னோ டிருக்கிவை யேழும் வேதம், வேதநூற் பொருளினும்ம விதித்திடு ஞானபாகை, யாதியாவ கருமபாகை யருத்தபாகையுமா மென்ப.

† மெய்தெரிகாரணந்தான்வேதத்தின் ஞானபாகை, யுய்யுமெய் யறமுறைக்கு முற்றநல் லர்த்தபாகை, துய்யநற் செயலைப்பற்றல் சுத்தநற் கருமபாகை, வெய்யபௌ டிகமேயாதி விரியுப நிடதமாகும்.

‡ எமமா மிரண்டாம் வேதமிசைதயித்திரியத்தோடு, தோமிலா யசுவாமென்று சொல்லுவர் நீதிநூலோர், சாமமேமூன்றும் வேதஞ் சாற்றும்பே ரின்பப்பேற்றை, வாமமுன் மொழியொன் றில்லா வதர்வண வேதமாமே.

§ தந்துரைபுனைந்துரைத்தல்சார்ந்தபாயிரத்திறனுடு, முந்திய பதிகமே நூன் முகவுரை முப்பேராகும், அந்தமா மாகமத்தோ டாரிடம் பிடகமற்றுந், தந்திரம் பனுவலோடு சமயம் சூத்திரமு நூற்பேர்.

¶ முன்கலைதிவாகரம்.—உபநிடதம்வேதத்தின், உட்பொருள் நுட்பம்.

அருங்கலைச்செப்பு.—கன்மபாகை யஷ்டகம்.

**முதல்வேதவாக்கியம்.**

‖ பாபஞ் செய்யாதிருத்தல்.—1. சீவர்களவத்தைச் செய்தொழில் யாவும், பாவமஃதென்றே யறி. 2. ஏனையோர்பொருளை யெடுத்துமகிழ்தல், ஊனமுப்பாவமதாம். 3. உள்ளத்தீங்கை யுளத்தேநிறப்பல், கள்ளப் பாவமதாம். 4. அன்னியர்தார வாசை பெருக்கம், பின்னிய பாபப் பூணை. 5 புலையு னிச்சைப் பேணி வருத்தல், கொலையாம் பாபக்குழி. 6. கன்னிய ருள்ளங் கலங்கக்கூறல், பன்னிய பாவமுதல். 7. நெஞ்ச மொளித்த வஞ்சம் யாவும், புஞ்செய்ப் பாவப்புனல். 8. அறிவை மயக்கி யாருயிர் வதைத்தல், நெறியை யகற்றும் பவம்.

சீவப்பிராணிகளைக் கொலைசெய்தல் பாபம். 6. அன்னியர்மனம் புண்படவார்த்தை பேசுதல் பாபம். 7. அன்னியர்களை வஞ்சித்து வருந்தச்செய்தல் பாபம். 8. அன்னிய ரறிவை மதுவூட்டி மயங்கச்செய்தல் பாபம்.

### நன்மையென்பதேவை-உபநிடத மென்னும் உபநிட்சயார்த்த மிரண்டா மேட்டு.

* 1. அன்னியபிராணிகளுக்குண்டாகுந் துன்பங்களைநீக்கி யாதரித்தல் நன்மெய். 2. அன்னியருக் கில்லாப் பொருளீய்ந்து தன்னைப்போல் சிர்பெறச்செய்தல் நன்மெய். 3. அன்னியர்களைத் தன்னவர்கள் போல் நேசித்து ஆதரிப்பது நன்மெய். 4. அன்னியர் மனைவிகளை தாய்தங்கையர்போல் பாதுகாத்தல் நன்மெய். 5. அன்னிய சீவப்பிராணிகளைக் கொலைச்செய்யாமலும் கொலைக்கேவாமலு மிருப்பது நன்மெய். 6. அன்னியர் மனமும் உடலும் பூரிக்கும் மிருதுவான வார்த்தையாடுதல் நன்மெய். 7. அன்னியர்களுக் குபயோக முண்டாகும் வார்த்தைகளைப் பேசி விருத்திபெறச்செய்தல் நன்மெய். 8. அன்னியர்களின் அறிவைப் பெருகச்செய்து வழுதுண்ணச்செய்தல் நன்மெய்.

### இதயசுத்தமென்பதேவை-உபநிடதமென்னும் உபநிட்சயார்த்த மூன்றமேட்டு.

† 1. தன்னிடத்துண்டாங் கோபத்தைதங்கவிடாம லகற்றிசாந்தத்தைப் பெருக்குதல் இதய சுத்தம். 2. தன்னிடத்துண்டாங் காமத்தை தங்கவிடாமலகற்றி அன்பைப் பெருக்குதல் இதய சுத்தம். 3. தன்னிடத்துண்டாம் மயக்கங்களை யகற்றி அறிவை வளரச்செய்தல் இதய சுத்தம். 4. தன்னிடத் துண்டாம் வஞ்சினம் பொறாமெக் குணமகற்றி சகலர் சுகவாழ்க்கையை விரும்புதல் இதய சுத்தம். 5. தன்னிடத் துண்டாம் பொய்ப்பொருளாசையை யகற்றி மெய்ப்பொரு ளுசாவுதல் இதயசுத்தம். 6. தன்னிடத்துண்டாம் சிற்றின்பச் செயல்களை யகற்றி பேரின்பத்தை நாடல் இதய சுத்தம். 7. தன்னிடத்துண்டாம் டம்பச்செயல்களை யகற்றி அடக்கத்தி நிறறல் இதய சுத்தம். 8. தன்னை வஞ்சித்து துன்பப்படுத்தியவனை அன்புடன் ஆதரித்தல் இதய சுத்தம்.

---

அருங்கலைச்செப்பு. — அர்த்தபாகையஷ்டகம்.

#### இரண்டாம் வேதவாக்கியம்.

நன்மெய்க் கடைபிடித்தல்.—1. ஆருயிர் துன்ப மகற்றி யாற்றல், பேருயிர் நன்மெய்ப்புகழ். 2. யீந்து மளித்து மேற்கா திருத்தல், சாந்தநன்மெய்த் துணை. 3. தன்னுயிர் தவிர்த்து மன்னுயி ரோம்பல், உன்னிய நன்மெய்யுறன். 4. அன்னியர் தார மன்னை தங்கை, யுன்னு நன்மெய்யுறல். 5. கொலையும் புலையுங் கொள்ளாதகற்றல், நிலையாம் நன்மெய் நிழல். 6. அமுதவாக்கு மன்பிநோக்குங், குமுத நன்மெய்க் குடை. 7. வாக்கின் வாய்மெ வளம்பெற வோதல், நோக்கு நன்மெய் நெறி. 8 அமுதமூறுமறிவையேற்றல், சமய நன்மெய்ச்சுழி.

அருங்கலைச்செப்பு. — ஞானபாகை யஷ்டகம்.

#### மூன்றும் வேதவாக்கியம்.

† இதயத்தை சுத்திசெய்தல்.—1. துன்னுங்கோப மகற்றியாற்றல், உள்ளக் களங்க மறல். 2. காமமகற்றி கருணை விளித்த, லேமவுள்ளத் துளிர். 3. மயக்கமகற்றி வானறி வோம்பல், சுயம்பாமுள்ளக் கலை. 4. வாழ்க்கைக் கருதி வஞ்சமகற்றல், சூழ்ச்சியுள்ளத் தவம். 5. மெய்ப்பொருள் நோக்கி வீணகமாற்றல், ஐயவுள்ளச் செயல். 6. அழியா வின்பவாற்ற லடைதல் விழியா முள்ளக்குறி. 7. அடக்கமமைந்து வாடமொழிதல், அடைக்கு முள்ளக்கரை. 8. நீங்கி னுருவத் தானைத் தேற்றல்,பாங்கி னுள்ளப் பயன்.

### வீடு, முத்தி, நிருவாணமென்னுந்தேவை.—உபநிடதமென்னும் உபநிட்சயார்த்த நான்காவதேட்டு.

1. தனனிடத்துண்டாம் பற்றுக்களற்றுசதானந்தத்திலிருப்பது நிருவாணம். 2. தன்னை மறைக்கும் நித்திரையை செயித்து சதாவிழிப்பிலிருப்பது நிருவாணம். 3. தன்னை மாறிமாறி பிறக்கச்செய்யும் மரணத்தை செயித்த நிலை நிருவாணம். 4. தன்னை சதா துக்கத்திலாழ்த்தும் காம வெகுளி மயக்கங்களை யறுத்த நிலை நிருவாணம். 5. தானே தோன்றுகிறதும் கெடுகிறதுமாகிய மனதை தோன்றாமலுங் கெடாமலும் அலையற்ற கடல்போல் நிற்பது நிருவாணம். 6. தனக்குண்டாகும் மரணபயம் செநநபயமற்று யாதுக்குங் கலங்காமல் நிற்பது நிருவாணம். 7. தன்னுள் தானாய் விளங்கும் உண்மெய்யாம் பேரின்பமே நிருவாணம். 8. தானேதானே சுயம்பிரகாச சதாநித்திய சித்தாம் அகண்டநிலையே நிருவாணம்.

இவ்வகையாக சதுர்முகனென்னும் பெயர்பெற்ற சாக்கையமுனிவரருளிய பேதவாக்கியங்களும் அதன் உபநிட்சயார்த்தங்களென்னும் † 32 உபநிடதங்களும் வடமொழியில் பொருள்மறைந்து மறைகளென்னும் பெயர்கொண்டிருந்த முதநூலாகுந் திரிபிடகத்திற்கு வழிநூலாகும் முப்பாலென்னுந் திரிகுறளை சாக்கையகுல ‡ நாயனார் செந்தமிழி லியற்றி தெளிவடையச்செய்தார்.

---

அருங்கலைச்செப்பு.—நிருவாண அஷ்டகம்.

நான்காம்வேதவாக்கியம்.

* வீடுபேறு.—1. பற்றுக்களற்றுப் பழம்பொருளாற்றலுற்ற முத்திநிலை. 2. தூங்கா விழிப்பிற் சுகநிலை காண்டல், பாங்காமுத்திப்பலன். 3. பிறப்புஇறப்பின் பேற்றைசெயித்தல், துறப்பின் முத்தி சுகம். 4. காமம் வெகுளி மயக்கமகற்றல், சேமமுத்திச்செயல். 5. தோற்றவொடுக்க மனத்தின் செயலை, யாற்றல் முத்தி சுகம். 6. மரண பயத்தை மாற்றி மகிழ்தல், திரண்ட முத்தித் திடம். 7. உண்மெய் கண்டு வுள்ள மகிழ்தல், திண்ண முத்தித் திறம். 8. தானே தானே சுயம் பொளியாதல், வானோர் முத்தி வளம்.

† வீரசோழியம்.-எண்பத் தொன்பது சித்தி யியல்பினுலுணவென்று, பண்பொத்த நுண்பொருளை பாரறியப்பகர்ந்தனையே. துப்பியன்ற குணத்தோடு தொழில்களால் வேறுபட, முப்பதின்மேலிரண்டுகலை முறைமையான் மொழிந்தனையே.

‡ திருவள்ளுவர் மாலை.—இன்பம்பொருளறம் வீடென்னு மிந்நான்கும், முன்பறியச்சொன்ன முதுமொழிநூன் — மன்பதைகட்குள்ளவரிதென் றவை வள்ளுவருலகங், கொள்ள மொழிந்தார் குறள். நான்மறையின் மெய்ப் பொருளை, முப்பொருளா நான்முகத்தோன், றான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த நூன்முறையே, வந்திக்கச் சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ், சிந்திக்க கேட்கச் செவி.

—:o:—

# ஏழாவது

# சதுர் சத்திய காதை.



பகவன் காசியையடைந்து தருமசங்கத்தை நாட்டி திரிபீடங்களாகுந் திரிபிடக மூன்று பேதவாக்கியங்களையும் ஒரு வீடுபேற்றையும் போதித்து ஒவ்வோர் பேதவாக்கியங்களுக்கும் எட்டு உபநிட்சயார்த்தங்களென்னும் முப்பத்திரண்டு* உபநிடதங்களையும் விளக்கி வரிவடிவாகும் வடமொழிதென்மொழிகளையூட்டி ஒவ்வொருவரிதயத்திலுமுள்ள * இருளையகற்றி தருமத்தைப்பரவச்செய்தப்பேருபகாரத்தாலும் அத்தருமமானது ஏழைகளுக்கும், தனவான்களுக்கும், விவேகிகளுக்கும், அவிவேகிகளுக்கும், சுகதேகிகளுக்கும், பிணியாளருக்கும் பொதுவாஞ்சுகமடையுஞ் சுகவழியாகக்கண்டவொவ்வொருவரும் அவரைக் † காசியீசனென்றும், காசி விசுவேசனென்றும், காசி விசுவநாதரென்றுங் கொண்டாடியதுமன்றி சிவராசிகளின் ஆறுவது தோற்ற மநுக்களுள் ஏழாவது தோற்ற முதற்றேவனாகத் தோற்றியபடியால் * ஆதிதேவனென்றும், முன்கடவுளாகத் தோற்றியபடியால் ஆதியங்கடவுளென்றும், முதலிந்திரராகத் தோற்றியபடியால் முன்னிந்திரனென்றும், முதல்நாதனாகத் தோற்றியபடியால் ஆதிநாதனென்றும் போற்றி அரசனாகப் பிறந்து சற்குருவாக விளங்கிய சம்பிரமத்தை பலதேச வாசர்கள்முதல் குடிகள்வரையிற் கொண்டாடி வந்தார்கள்.

பேதவாக்கியங்களையும், உபநிடதங்களையும்விளக்கிய பகவன் அவற்றை யுணரவேண்டியதற்குக் காரணமாகும் நான்கு வாய்மைகளை விளக்கவாரம்பித்தார்.

அந்நான்குவகை வாய்மை யுணர்ச்சியே நான்கு பரிசுத்த சத்தியங்களென்று கூறப்படும். இப்பரிசுத்த சத்தியமானது நேராகக் காட்டக்கூடியதும், உரைக்கக்கூடியதும், வெளியரங்கமானதும், ஆழ்ந்து பார்க்கக்கூடியதும், பிரத்தியட்சமாய்க் காட்டக்கூடியவைகளுமாம்.

நான்கு பரிசுத்தசத்தியங்களாவது:—பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு இவை நான்கிலுந் துக்கமுண்டாமென்பது சத்தியம். இவற்றை விசாரிக்கப்புகின்,

---

* சிவஞானவிளக்கம்.—பச்சைமரத் தாணிபோற் பாய்ந்திருந்த மும்மலத்தைத், தைச்சிருந்த மும்மலத்தைத் தானீக்கி— அச்சமிலாத், தானீன்ற தற்பரத்தைத் தந்தருளி யெந்தனுக்கு, கோனாகி வந்தான் குரு.

† மணிமேகலை.—காசினிமாநகர் கடல்வயிறு புகாமல், வாசவன் விழாக்கொள் மறவேனென்று, காயங் கரையெனும் பேரியாற்றடைகரை, மாயமின் மாதவன் றன்னடி பணிந்து, தருமங்கேட்டு தாடொழுதேத்தி.

சீவகசிந்தாமணி.—முனிவரு மூயன்று வான்கண்மூப்பிகந்துடைய்வின்ப, கனிகவர் கண்ணுமேத்தக் காதிகளறிந்த காச்சு, தனிமுதற்கடவுட் கோயிறன் வலங்கொண்டு செல்வான், குனிதிரை மூலைத்த வெய்யோன் குன்றசூழ் வதனை யொத்தான்.

| * சப்பேசதுசத்யங். | | † நான்கு பரிசுத்த சத்தியங்களாவது |
|---|---|---|
| 1. துக்கா சத்யா. | ... | 1. துக்கம். |
| 2. துக்காசமுத்ய சத்யா. | ... | 2. துக்கோற்பத்தி. |
| 3. துக்க நிரோத சத்யா. | ... | 3. துக்க நிவாரணம். |
| 4. துக்க நிரோத காமினிபிரதிபதா சத்யா. | | 4. துக்க நிவாரணமார்க்க *மென்னப்படும். |

‡ இந்நான்குவாய்மெயினுழ்ந்த சத்தியத்தைகண்டடைவது மிக்கக் கஷ்டமாயிருப்பினும் உண்மெயி லன்புள்ளவன் தனதுசாந்தத்தையேயிகை யாகக் கொடுக்கக்கடவன்.

உலகம சுகத்தையே நாடுகின்றது. சுகத்தில் சிக்குப்பட்டிருக்கி றது. சுகமயக்கத்திற் சுழல்கின்றது. இவ்வகை விழிப்பதும் மறைப்பதும் தோன்றுவதுங் கெடுவதுமாகிய சுகத்தை நாடுகிறவர்களுக்கும் அதே சுக மயக்கத்திலிருப்பவர்களுக்கும் ஆசையை யொழித்து நிருவாணசுகத்தை யடைவது கஷ்டமா யிருக்கும். அதன் சத்தியம் விளங்கவும் விளங் காது.

முதலாவது துக்க சத்யம்.

ஓ! சகோதிரர்களே! துக்கமென்பது வாய்மெயான சத்தியம். அஃது யாதென்பீரேல் :—

பிறப்பது துக்கம், பிணி துக்கம், மூப்பு துக்கம், மரணம் துக்கம், பொருளை சப்பாதித்தலுந் துக்கம், அது அழிதலுந் துக்கம், வேண்டிய பொருள் கிட்டாதது துக்கம், சுருக்கமாகச் சொல்லின் ஐம்புலப பற்றுக் களே துக்கமென்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! பிறப்பென்பது யாதெனில் :—

உற்பேதம பிறப்பு, கற்போற்பத்தி பிறப்பு, பஞ்சஸ்கந்த வுருவமா தல் பிறப்பு, சுருக்கத்தில் ஐந்து புலன்கள் சேர்ந்து வுருவமைந்து தோற் றலே பிறப்பென்னப்படும்.

ஓ! சகோதிரர்களே! பிணியென்பது யாதெனில் :—

ஆசையாம் அதிபோகத்தா லுண்டாதல் பிணி, அல்லலடைதற் பிணி, ஆற்றாமை பிணி, அதிபுசிப்புப் பிணி, சுருக்கமாக தேகம் சகிக் கக்கூடாத துன்பமடைதலைப் பிணியென்னப்படும்.

ஓ! சகோதிரர்களே மூப்பென்பது யாதெனில் :—

முதிர்ந்த வயதுற்று தள்ளாடல் மூப்பு, நரை திரை தோன்றுதல் மூப்பு, நாடிகள் தளர்தல் மூப்பு, சுருக்கத்தில் ஐம்பல சுகர்ச்சிகள் குறை ந்துக்கொண்டுவருதலே மூப்பென்னப்படும்.

---

* { சப்பே சது சக்யங்.
  { ஞானுவலி கரோதீதி ஹீனே.

† மணிமேகலை.—துன்பந்தோற்றம்பற் றே காரண, மின்பம் வீடே பற்றிலி கா ரண, மொன்றிய வுரையே வாய்மெ நா ன்காவது

‡ சீவகசிந்தாமணி.—துனெறி வகையி னோக்கி நுண்ணிதி னுணர்ந்து தீமெப், பானெறி யலவுநீக்கிப் பரிதியங் கடவுள ன்ன, கோனெறி தழுவினின்ற குணத் தொடு புணரின்மாதோ, நானெறிவகை யினின்ற நல்லுயிர்க் கமிர்தமென்றான்.

அருமெயினெய்தும் யாக்கையும் யாக் கையதறிவுந், திருமெய் நீங்கிய துன்ப முந் தெளிபொருட் டுணிவும், குருமெய் யெய்திய குணத்தொடு பொருந்து பய னும, பெருமெ வீட்டோடும் பேசவல் தேனிது பெரியோய்.

ஓ! சகோதிரர்களே ! இறப்பென்பது யாதெனில் :—

பிறிவு இறப்பு, மறைதல் இறப்பு, தேகம் நீற்று நீசாதல் இறப்பு இருளடைதல் இறப்பு, சருக்கத்தில் பஞ்சஸ்கந்தங்களின் பிரிவுகளாற்று ஐம்புல நுகர்ச்சிகளாற் பஞ்சாவஸ்தைகள் தோன்றிமடிதலே இறப்பெனப்படும்.

ஓ! சகோதிரர்களே ! பஞ்சஸ்கந்தங்கள் யாதெனில் :—

முதலாவது ரூபஸ்கந்தம். இதையே தேகமென்னப்படும். இரண்டாவது வேதனா ஸ்கந்தம். இதையே வுணர்ச்சியென்னப்படும். மூன்றாவது சன்ஞா ஸ்கந்தம். இதையே அறுவகை யிந்திரியங்களின் உணர்சிக ளென்னப்படும். நான்காவது சங்காரா ஸ்கந்தம். இதையே மனோ வாக்குக் காயங்களா லுண்டாகும் உணர்ச்சிக ளென்னப்படும். ஐந்தாவது விக்ஞான ஸ்கந்தம். இதையே அறிவென்னப்படும். இவ்வைந்தும் அமைந்துள்ள உருவத்தையே வடமொழியில் ஆன்மனென்றும், புருஷனென்றும்; தென் மொழியில் மாணிட னென்றும், மகனென்றுங் கூறப்படும்.

ஓ! சகோதிரர்களே ! ரூபஸ்கந்தங்கள் யாதெனில் :—

அஃது நான்குவகைப்படும். முதலாவது படவிதாது. இரண்டாவது அபோதாது. மூன்றாவது தேஜோதாது. நான்காவது வாயுதாது வென்னப்படும்.

முதலாவது, படவிதாதுவின் விவரம். உறுதியானதுங் கனத்ததுமான உரோமம், நகம், பல், தோல், சதை, நரம்பு, எலும்பு, ஈரல், இருதயம், குண்டிக்காய், மண்ணீரல், நுரையீரல், இரைக்குடல், குடல், மணிக்குடல் மற்றும் தடித்த வுருவங்களுள்ளதை படவிதாது என்னபடும்.

பண்டி அல்லது வண்டி யென்றபேர் து சக்கரம், இருசு, ஏற்கால், முதலியவைகள் சேர்ந்துள்ள வஸ்துவாகும். அங்ஙனமின்றி இருசைமட்டும் வண்டியென்று கூறலாகா. வீடென்றபோது கல், மண், கதவு, சன்னல், தூண் முதலியவைகள் சேர்ந்துள்ள வஸ்துவாகும். அங்ஙனமின்றி தூணைமட்டும் வீடென்று கூறலாகா. சதை, எலும்பு, நரம்பு முதலிய படவிதாதுக்களே ரூபஸ்கந்த முதலாதாரங்களாகும்.

சகோதிரர்களே ! அபோ தாதென்பது யாதெனில்: உதிரம், கபம், சீழ், வியர்வை, நிணநீர், கண்ணீர், சிறுநீர், கிலேன் முதலியவைகளேயாம். தேஜோ தாதுவென்பது யாதெனில்: கோபாக்கினி, பசியாக்கினி, காமாக்கினியாகும் மூன்றுக்கும் ஆதாரமாகிக் கீல்களிலுள்ள ஊனை யுருக்கி நீட்டவும், முடக்கவும் மூன்றாதாரமாகு முன்னன லென்னப்படும். வாயுதாதென்பது யாதெனில்: சுவாசமென்னும் பெயர்கொண்டு உதிரத்தைப் பரவச்செய்தற் காதாரமாகும் ஆவியென்னப்படும். இத்தியாதி மண், நீர், தீ, காற்று சேர்ந்தவைகளே உருவமென்றும், ரூபமென்றும், தேகமென்றுங் கூறப்படும்.

ஓ! சகோதிரர்களே ! வீடென்றபோது கல், மண், கதவு, தூண், சன்னல் முதலியவைகள் சேர்ந்துள்ள வஸ்துவாகும். அதேபிரகாரம் நரம்பு, சதை, தோல், எலும்பு முதலியவைகள் சேர்ந்துள்ளதையே நாம் தேகமென்றுங் கூறுகிறோம்.

தி யென்றும், மோட்சமென்றும், நிருவாணமென்றுஞ் சொல்லுஞ் சுகநிலையின் பீடம் எதினால் அமைக்கப்பட்டிருப்பம் தன்னில், கொலைதவிர்த்த சிவகாருண்ணியத்தினாலேயாம் ஒரு மனிதனை நல்லவனென்று மற்ற மனிதர்கள் சொல்லுவதுடன் சருவ சீவராசிகளும் நல்லவனென்று அருகிற்சென்று அன்பு பாராட்டுமாயின அவனது சிவகாருண்ய, அன்பையே சுகவாரி யென்னப்படும். மாறிமாறிப்பிறக்கும் மாளாப்பிறவியின் துக்கத்தை நீக்கிப் பிறப்பறுக்கும் உள்ளத்துறவை நோக்குபவன் கொலையை யகற்றி சிவகாருண்யத்தை நோக்குவனேல் துறவின்வழி வெள்ள விளங்கும். சருவசீவர்களையுந் தன் புசிப்புக்கென்று கொல்லாமலுங் கோபத்தாற் கொல்லாமலுங் காருண்ய மிகுதலுந் தான் கொலைபுரிவதை யகற்றுவதுமன்றி கொலைபுரிபவனையுந் தடுத்தாட்கொள்ளுவானாயின் தன்னைக் கொலையுண்ணும் இயமனென்னுங் காலனுக்கானென்பதாம். மாமிச புசிப்பால் தன் யாக்கையைப் பெரிதாக்க முயலுவோன் சருவ சுகத்தையுஞ் சுருக்கித் துன்பத்தைப் பெருக்கிக்கொள்ளுகின்றான். தேகத்தைக் கொழுக்க வளர்ப்போன் பிணிபீடையால் வாதைப்படுவதை யுணர்ந்தும் விவேகிகள் வெறுக்கத்தக்க புலால் இச்சையால் கொலைபுரிந்து அதன் விருத்தியைக் கெடுப்பதினும் தன் தேகத்தை சுருக்கிக்கொள்ளுபவன் சுகமடைவான். அதாவது, புற்பூண்டுகளிலிருந்து புழுக் கீடாதிகளும், புழுக்கீடாதிகளினின்று மட்சம பட்சிகளும, மட்சம் பட்சிகளினின்று ஊர்வன மிருகாதிகளும், மிருகாதிகளினின்று வாலற்ற நரர்களாம் மக்களும், மக்களினின்று தேவர்களும், ஒன்றிலிருந்தொன்று உயர்ந்துகொண்டேபோவது உலகத்தோற்றமாதலின் சீவராசிகளின் உயர்வைக் கெடுக்குங் கொலைத் தொழிலைத் தன்னுயிர் நீங்கினுஞ் செய்யாதிருக்கக்கடவன்.

2-வது களவு.

ஓ! சகோதிரர்களே! ஒரு மனிதன் களவுசெய்யுந்தொழிலினின்று நீங்கி அதைச் செய்வதில்லையென்று விரதங்கொண்டவன் தனக்குக் கொடுப்பதைப் பெற்றுக்கொள்ளுவான். கொடாததை யெடுக்க மாட்டான். அவன் வாங்கவேண்டியப் பொருள் எவ்வளவோ அவ்வளவுங் காத்திருந்து வாங்கிக் கொள்ளுவான். உரியவன் உத்திரவின்றி தொடமாட்டான். வஞ்சினத்தாலுங் களவினாலும் மற்றோர் பொருளை யபகரிக்கலாகாதென்னும் எண்ணத்தை உறுதிபடுத்தினவன் இதய பரிசுத்த மடைவான். நித்திய சுகத்தை விரும்புகிறவன் மறந்தும் அன்னியன் பொருளை யபகரித்து அவன் மனதைப் பெருமூச்சுட னலையவிடமாட்டான். அதாவது, விவேகமிகுத்தோர் தனதுள்ளத்தி லெழும் களங்கங்களாம் வஞ்சினம், தீங்கு, களவு முதலியன யெழாம லகற்ற வேண்டிய தழகாதலின் உலக மாக்கள் களவினுங் களவை யெண்ணாதிருத்தல் நன்று. ஓர் மனிதன் களவினால் சேகரித்தப் பொருள் தனது மூத்தோர் பொருளையுஞ் சேர்த்துக்கொண்டு சென்றுவிடும். அதுபோல் களவின் பொருளால் வளர்த்த தேகமும் தன்னையறியாமல் விழுந்துபோம். பொருளைக் கருதினவன் அருளைக் கருதான். அருளைக் கருதினவன் பொருளைக் கருதான். அருளையும் பொருளையுங் கருதினவன் இருளினின்று தவிப்பான். பொருளை விரும்புகிறவன் புண்ணியவச தேகத்தை வருத்தி சம்பாதித்தல் வேண்டும். அங்ஙனமின்றி வருத்தியு முயற்சியுமற்று சம்பாதித்தவன் பொருளை வகை யறியாது களவுசெய்துக்கொள்பவன் அப்பொருட்களைத் தன்னையறி

யா திழந்து சகலராலு மவமதிக்கப்படுவான். அருளைக்கருதினவன் பொருளையும் பொருளுக்குடையவனையும் நோக்காமல் ஜீவர்களின் சுகத்தை நோக்குபவனாதலின் களவென்னுங் கருத்தே யவன் உள்ளத்தி லுதிக்காதென்பதாம். ஆசையின் மிகுதியால் அன்னியன் பொருளை யபகரித்து ஆனந்தமுறுதல் படிப்படியே துக்கத்தி லிறங்கி சதா துக்கத்திலாழ்த்திவிடும். உலகத்தார் ஒருவனைக் கள்ளனென்றறிந்துக்கொண்டவுடன் அவன் வரும் இடங்களிலும் போகும் இடங்களிலுங் கண்ணோக்கமுற் றிருப்பார்கள். அவ்வவர் நோக்கமே யவனைத் துன்பத்தி லாழ்த்தி மாளாதுக்கத்தி லாழ்த்திவிடும். ஆதலின் களவை யகற்றி களங்கமறுப்பதே முத்திக்கு வித்தென்னப்படும்,

**3-வது காமம்.**

ஓ! சகோதிரர்களே! ஒரு மனிதன் தன் தாரமன்றி அன்னியர் தாரத்தையேனும் அன்னியர் இஸ்திரீகளையேனும் விரும்புவதில்லையென்று விரதம்பூண்டவன் பிதாவினாலாவது, மாதாவினாலாவது, மூத்தோராலாவது, சகோதிரனாலாவது, சகோதிரியாலாவது பாதுகாக்கப்பட்ட கன்னிகையையேனும் மாங்கல்ய ஸ்திரீயையேனும், அடிமைப்பெண்ணையேனும், வேசியையேனும், இச்சிக்கமாட்டான். ஒருவனது இல்வாழ்க்கைக்கும் சுகத்திற்கும் இல்லாளே காரணமாதலின் அவ்வில்லாளை மற்றொருவ னிச்சித்து அவள் புருஷனுக்கும் அவளுக்கு மிருந்த அன்பையும் ஒற்றுமெயையுங் கெடுத்துப் பாழாக்கியபோது அவன் இல்லமும் குடும்பமுங் கூடிவாழும் வாழ்க்கைக் கெட்டு குலைந்துவிடுவதினால் அத்தகையக்குடிக்குக் கேடுண்டுசெய்வதைப் பார்க்கினுந் தான் ஒருவன் கெடுவது நலமென்றெண்ணித் தனதுயிரைப் போக்கிக்கொள்ளுவான். அதுவுமன்றி தன் தாரத்தை மற்றொருவ னிச்சித்தபோது தனக் கெவ்வளவு மனத்தாங்கலுங் கோபமும் பிறந்து குடிகெடும்படி நேரிடுகின்றதோ அதுபோல் மற்றவனது குடியுங் கெடுமென்றெண்ணி அன்னியதாரத்தைக் கனவிலும் நினையாதிருப்பன். அன்னியர் மனைவியையேனும், கன்னியையேனும், அடிமைப்பெண்ணையேனும் இச்சிப்பவனுக்கு மற்றவர்கள் பகையும் அவள் சீலைக் கெடுத்த பாவமும் அவள் குடும்பத்தோர் எவ்விதத்தும் அடிப்பார்களென்னும் பயமும் ஓர் பெண்ணின் சீரைக் கெடுத்தாயே ஆடோ பாவியென்னும் பழியும் இவன் ஜீவியகாலமெல்லாம் நிலைத்துவிடுமென்றெண்ணி காமிய விச்சையைக் கண்டித்து அவ்வாசையை யகற்றிவிடுவான். ஈகையில் மிகுத்தோனென்றும் வாக்கில் மிருதுவானவனென்றும் சொல்லக்கூடியவனாயினும் அன்னியன் மனையாளை யிச்சித்து அக்குடியைப் பாழாக்கினா னென்று பெரியோர் கேழ்விப்படுவோராயின் தன் மனையின் அருகிலேலனுஞ் சேர்க்காரென்றெண்ணி அச்சமுண்டாகிக் காமத்தை எறித்துக்கொண்டே வருவான். கொலை களவு மிகுத்த பாபிஷ்டிகளுடன் சேர்ந்து ஓர் குடியைக் காலமெல்லாந் துக்கத்தி லாழ்த்துங் காமிஷ்ட்டியென்னும் பெயரையும் வகிக்கமாட்டான். இதுவே நற்கன்மங்களென்னப்படும். இந்நற்கன்மங்கள் யாவுந்திரண்டப் பொதுப்பெயரே கடவுளென்னப்படும்.

### சம்மா அஜீவா—நல்வாழ்க்கை.

ஓ! சகோதிரர்களே! நல்வாழ்க்கையைததாகதன் விவரிக்கின்றேன். அதாவது மனையறத்திலிருப்பவன் மனையறமென்பதுயாது, துறவறமென்பதுயாதெனவுசாவி மனையறத்துனின்று இல்வாழ்க்கையைநோக்கிதனக்குத்

தக்க இல்லாளை சேர்த்துக்கொள்ளக்கடவன். அவ்வில்லாள்பிறந்த குடும்பத்தில் அவனைக் கொலைபுரிந்தான் இவனை வஞ்சித்தான் அன்னியன் தாரத்தை யிச்சித்து அவன் குடும்பத்தைக் கெடுத்தான் இவன் சொத்தை யபகரித்துக்கொண்டான் என்னும் பழியில்லாமலும், கொலைத் தொழிலை கொரேமாகக் கொண்டவன் உள்ளத்தில் எக்காலும்வஞ்சத்தையுடையவன் என்னும் பாவமில்லாமலும், கோபமே வோருருவாகக்கொண்டவனும் கத்திரியைப்போல் ஒவ்வோர்குடும்பத்தைச் சோமறகத்திரிப்பவனும் எக்காலும் விரோதச்சிந்தையே கொண்டவனுமாகிய பகையில்லாமலும், இவன் கள்ளன், இவன் கொலைஞன், இவன் வஞ்சன், இவன் வழி பறிப்போன் என்னும் அச்சமும், நோயில்லாமலுமுள்ளக் குடும்பியா யிருப்பாளாயின் தனக்கோர் பழிநோமலும், பகை நோமலும், பிணி நோமலும், பயம் நோமலும் சுகவாழ்க்கையி லிருப்பான். அவ்வாழ்க்கையினால் இல்லஞ்சார்ந்த குடும்பிகளுக்கும், சங்கஞ்சார்ந்த சமணர்களுக்கும், சமணநீத்து சித்துநிலை வாய்ந்த •அந்தணர்களாம் அறஹத்துக்களுக்குந் துணையாக விளங்குவான். வித்தியா குரு, ஞான குரு, ஆதரித்தோன், தாய்தந்தையர் ஐவர்களையுங் *கண்டவுடன் அன்புடன் வணங்கி ஆதரித்து முகமலரச் செய்பவன் தன திவ்வாழ்க்கைத் துணைவியுடன் வழ்க்கைத்துணைநலனு மடைவான்.

வித்தியா முயற்சியிலும் தேக முயற்சியினுஞ் சம்பாதிக்கத்தக்க பொருள் பழிபாவத்திற் கேதுவில்லாமலும் பிறன்மனம் வருந்தாமலுங் கொணர்ந்து தலைவனுந்தலைவியும் யாக்கை இரண்டாயினும் மனமும் அன்பும் பொருந்த நின்று நடாத்தும் தருமமே வாழ்க்கை தருமமாகும். உலக நோன்புகளாகும் பஞ்சபாதகங்களை நீக்குவோருககும் பஞ்ச பொறிகளின் வாயல் அவிப்போர்களுக்குப் பக்கத்துணை வாழ்க்கையுற்று பூரணப் பக்குவ மடையச்செய்பவனாதலின் இவனது ஒழுக்க வாழ்க்கையே உண்மெய் யுணர்த்தும் உத்தம வாழ்க்கையாகும்.

தருமமென்பதே இல்வாழ்வோன் பீடமாயிருத்தலின் அவ்வில் வாழ்வோன் நீதியிலும், நெறியிலும், வாய்மெயிலும் பற்றுள்ளவனா யிருப்பானாயின் அவன் மண்ணுலகத்தானாயினும் விண்ணுலகத்தா ரெண்ணில் வைக்கப்பட்டவனாகின்றான்.

இல்வாழ்வோனுக்குப் பழிபாவ மேற்கும் சம்பாதித்தியம் யாதெனில், ஒருவன் மதியை மயக்கி அவன் குடும்பத்தைக் கெடுக்கத்தக்க வஸ்துக்களும், பல வுயிர்களைக் கொன்று விற்கத்தக்க மாமிஷங்களும், விஷங்களை யேற்றி விற்கத்தக்க ஆயுதங்களும் மனிதர்களை அடிமைபிடித்து விற்குந் தொழில்களும், சூது விளையாடுவோருக்கும் கள்ளர்களுக்கும் இடங்கொடுத்து அதினால் சீவிக்குந் தொழில்களும் பழிபாவத்துக்குரிய தொழில்கள் யாவையு மகற்றிப் பாங்கிலையில் வாழக்கடவன்.

இத்தகைய வாழ்க்கையுடையவனுக்குத் துணைநலமாக வந்தவள் தன் கணவனையே தன்னைக் காக்குந் தெய்வமாகவும் தன்கணவனையே தன்னை யாதரிக்கும் ஆளாகவும் தன் கணவனையே தன்னைக் காக்கும் காவலாளியாகவும் பல பதார்த்தங்களை வட்டித்து தன் கணவனுக்கூட்டி திருப்தியடையச்செய்தலே ஆனந்தமாகவும் தன்கணவன் மகிழ்வடைய மிருதுவான தொனிகொண்டு வார்த்தைப் பேசுதலே இன்பமாகவும் உடையவளே வாழ்க்கைக்குத் துணைநலமாவள். மனைக்குடையவள் எப்பெரியோரைக் காணினும் அவர்களை வணங்கி உபசரித்தலும் பாபுருஷர்களைக் கா

னில் அவர்களுக்குத் தன் முகத்தையுந் தேகத்தையும் மறைத்துக்கொண்டு நாணமுறுதலும் அன்னியபுருஷர்களில் பெரியோர்கள் காணிலுஞ் சிறியோர்கள் காணிலுந் தன் தேகத்திற் படில் பயிற்புறுதலும் எப்போதுந் தன் பார்வையையும் நடக்கையையும் அடக்கி ஆண்டுவருபவள் வாழ்க்கைக்குத் துணைநலமாவள். தன் கணவனுக்குத் திரண்டதிரவியங் கிடைத்தவிடத்து சந்தோஷமில்லாமலும் திரவிய மில்லாதபோது துக்கமில்லாமலுங் கணவனைத் திருப்தி செய்துக்கொண்டு கணவன் வார்த்தைக்கு எதிர்மொழி பேசாமலும் கணவன் செய்யுந் தருமச்செயல்களுக்கு எதிர்மறைக் கூறும விருப்பவள் வாழ்க்கைக்குத் துணைநலமாவாள். கணவன் புசிக்கத்தக்கப் பதார்த்தங்களை வட்டித்து அவன் பசிவேளை யறிந்து புசிக்கச்செய்து தேக சுகத்திற்கும், தேக போஷிப்பிற்கும ஆகாரநோக்கத்திலிருப்பவள் வாழ்க்கைத்துணைநல மனைவியேயாயினுந் தாயிக்குமொப்பாவாள். தன் கணவன் மதுப்பிரியத்தால் மயங்கி வெறிக்குங்கால் அவனுக்கு அன்பின் மதியூட்டி அவ்வருந்தலை மறக்கச்செய்தலும், தன்கணவன் பரஸ்திரீகமனத்தில் நுழைவானாயின் அவனுக்குக் கோபக்குறிக் காட்டாது இன்ப வார்த்தைகள் பேசி மிக்க அன்புபாராட்டி யாலிங்கனமுற்று அன்னியஸ்திரீகளின் எண்ணங்களை மாற்றுவதினும் பழிபாவ யாசகத்தொழிலின்றி வருத்தி சம்பாதிக்கத்தக்க முயற்சியில் நடவும்படிச்செய்வதுடன் தானும் முயற்சியினின்று நற்கருமங்களை நடாத்தச் செய்பவள் வாழ்க்கைத்துணை நலமாவதுடன் மந்திரிக்கு மொப்பாவாள். பெண்ணெனத்தோன்றும் ஓர் உருவமே தனது துற்கருமச் செயல்களினால் இயமனென வின்று இல்லத்தின் சுகங்களைக் கெடுத்துப் பாழாக்கிவிடுவாள். பெண்ணெனத் தோன்றும் ஓர் உருவமே தனது நற்கருமச்செயல்களினால் தனக்குத் தாய்போல் விளங்கி ஞானமுதூட்டும் நல்வழிக்குந் துணையாவாள். ஓர் இஸ்திரீயை தன் கணவன் காப்பனென்றுந் தன் பந்துக்கள் காப்பரென்றுங் கூறுவதிற் பயனில்லை. இஸ்திரீயானவள் தன்னுடைய கற்பைத் தானே காத்துக்கொள்ளுவது சிரேஷ்டமாக விளங்குவதால் வாழ்க்கைத் துணைக்கும் அவளே துணையாவாள். இத்தகைய வாழ்க்கை சுகமுண்டாக்கும். பெண்களும் பிள்ளைகளும் நற்கருமத்தொடற்சியின்வழியாய் வளர்பவர்களின் பலனுதலின் இல்லத்தில் வாழுங் கற்புடையாள் வாக்கு இகத்தை யழிக்கவும், இகத்தை வளர்க்கவுங்கூடியதா யிருக்கின்றது.

இவ்வாழ்க்கைத்துணை நல் மனைவியும் துணையாம் நல்மனைவியின் கணவனும் தங்கள் நற்கருமப் பலன்களால் சுகவாழ்க்கையுற்றுத் தங்களை யடுத்தவர்களையுஞ் சுக முறச்செய்து சத்திய தரும சங்கத்தையும் நிலைபெறச்செய்வதால் இவர்கள் வாழ்க்கையே சுகவாழ்க்கையாம் இதையே நல்வாழ்க்கையென்று கூறப்படும்.

ஓ! சகோதிரர்களே! நன்முயற்சியை விளக்குகின்றேன். மனிதன் செய்யவேண்டிய முயற்சிகளில் முக்கியமானப்பெருமுயற்சிகள் நான்குவகையாக முயலப்படும். அதாவது, 1. ஒவ்வொரு மனிதனும் தன்னிடத்திருந்து நீக்கவேண்டிய முயற்சி. 2. தன்னை யணுகாமல் தடுக்கவேண்டிய முயற்சி. 3. தன்னிடத்தினின்று மேலுமேலும் உதிப்பிக்கச் செய்யவேண்டிய முயற்சி. 4. தன்னிடத்துள்ளதைப் பாதுகாக்கவேண்டிய முயற்சி. இத்தகைய நான்குமுயற்சிகளையுந் தெளிந்தவன் சுகமற்றதீங்குகளை தன் சித்தத்தில் எழவிடாமல் அதேமுயற்சியிற் போராடி முழுவைரியத்துடன் தன் மனதைத் திடப்படுத்திக்கொள்ளுவான். தன் கண்

## சம்மா வாயாமா - நன்முயற்சி.

ளால் அழகிய வஸ்துக்களையேனுங் கண்டபோதிலும் இனிய சப்தங்களைச் செவியிற் கேட்டபோதிலும் பரிமளகந்தத்தை நாசியில் முகர்ந்தபோதிலும் ருசியுள்ள பதார்த்தங்களை நாவில் சுவைத்தபோதிலும் சுகநிலையில் தேகத்தைப் பரிசித்தபோதிலும் பலவகையான எண்ணங்கள் மனதிலெண்ணியபோதிலும் அதில் நிலைக்கத்தக்க இடங்கொடுக்கமாட்டான். மிதமீறிய உணர்ச்சியால் உதிக்குந் தீங்குகளையும் அவாக்களையும் திருப்த்தியில்லாதவைகளையும் தன் மனதிற் றங்கவிடாமல் நீக்கிக்கொண்டேவருவான்.

எவ்வகை யுணர்ச்சிக்கும் அவாவிற்கும் இடங்கொடுக்காமல் தனக்குள் அடக்கி ஆண்டு உணர்ச்சிகளின்பேரில் ஜாக்கிரதையாயிருப்பவன் தீங்குகளற்ற சுகநிலை காண்பான். இத்தகைய சுகநிலை காணவேண்டியவன் தன தைம்புல நுகர்ச்சிகளா லெழுந் தீங்குகள் யாவற்றையும் பேரவாவையும் தன துள்ளத்திலும் உணர்ச்சியிலுந் தங்கவிடாமல் நீக்கும் முயற்சியிலிருப்பான். இதையே நீக்கவேண்டிய சித்தமுயர்ச்சியென்னப்படும்.

தன துணர்ச்சியிலும் உள்ளத்திலு மெழுந் தீங்குகளையும் அவாக்களையும் உதிக்கவிடாமலுந் தோற்றவிடாமலுந் தடுக்கும் விழிப்பிலுஞ் ஜாக்கிரதையிலுமிருந்து அவைகளுடன் போராடி தன் மனதைத் திடப்படுத்திக்கொள்ளுவான். பேராசைக் கோபம் பொய்க் காட்சியா லுதிக்கும் எண்ணங்களைத் தடுத்து அவைகள் வேரூன்றிநிற்க இடங்கொடுக்கமாட்டான். அதை எக்காலும் எழவிடாமல் நசுக்கி நிர்மூலமாகும்படிப் பிரயாசைப்படுவான். தீங்குகளுக்கு மூலமாகுஞ் சொற்ப எண்ணம் உள்ளத்திற் றங்கிவிடுமாயின் உடனுக்குடன் கோபம், பேராசை, பொய்க்காட்சிகள் தோன்றி சுகமற்ற வெண்ணங்க ளுதித்துவிடும். ஆதலின் சுகமற்ற வெண்ணங்கள் சொற்பமேனும் உள்ளத்தில் தங்கவிடாமல் தடுத்துக்கொண்டுவருவான்.

தனது ஆழ்ந்த சிந்தனையால் உள்ளத்திலும், உணர்ச்சியிலும், இன்னின்ன துன்பத்திற் காதாரமாந் தீங்குக ளுதிக்கின்றனவென்றும் இன்னின்னவகை விழிப்பிலும் ஜாக்கிரதையிலும் அதை வேரூன்றவிடாமற் செய்யவேண்டுமென்றும் கண்டுணர்ந்து அதே விருப்பத்திலிருப்பான். அதாவது தன்னைப் பாழாக்கக்கூடிய வெண்ணங்கள் எவ்விடத் துதிக்கின்றனவென்றும் அவ்வகை யுதிக்கும் எண்ணங்களின் வித்துக்கள் எவையென்றும் ஆராய்ந்து அவைகளைப் பாழாக்கவுந் தடுக்கவு முயல்வான். அல்லது ஒரே வைராக்கியத்தினின்று தன் உள்ளத்தி லெழும் கோபம், பேராசை, பொய்க்காட்சியாம் எண்ணங்களைத் தடுத்துநிற்பதால் தீய வெண்ணங்கள் யாவும் நசிந்து மனமானது அலையற்ற கடல்போல் நிற்கும். இதையே தீச்செயல் தோற்றங்களைத் தடுக்கவேண்டிய சித்தமுயற்சி யென்னப்படும்.

இத்தகைய விழிப்புஞ் ஜாக்கிரதையு முடையவன் சிந்தனை, விவேகம், ஊக்கம், ஆனந்தம், ஆறுதல், மனநிறை, சமாதானம், சாந்தம் உண்டாக்கும் அறிவை விருத்திசெய்யக்கூடிய வாதாரங்களையும், ஊன்றியவைகளைப் பிரிக்கக்கூடிய வாதாரங்களையும், நிர்மூலப்படுத்தக்கூடிய வாதாரங்களையும், துறவுக்கு ஆளாக்கும் ஆதாரங்களையும் உதிக்கச்செய்கின்றான். அதினால் சருவசீவர்களையும் ஆதரிக்கக்கூடிய உதிப்பும், சருவசீவர்களுந் தன்னைப்போல சுகமடையவேண்டுமென்னும் உதிப்புஞ் சருவசீவர்களுஞ் சுகவாழ்க்கையிலிருக்கத் தான் காணவேண்டுமென்னும் உதிப்புஞ் சீவர்க்

ளுக்கு எக்காலுந் தருமங்களை ஊட்டவேண்டுமென்னும் உதிப்புந், தன்ம வார்த்தைகளை செவியிற் கேட்கவேண்டுமென்னும் உதிப்பும் உள்ளத்தில் வளரவேண்டிய முயற்சியையே உதிக்கச்செய்யவேண்டிய முயற்சிகளென்னப்படும்.

இத்தகைய சுகவழியாம் எண்ணங்களைப் பாதுகாத்து அவைகளை நாசமாகவிடாமல் நல்லூக்கத்தால் முன்னுக்குக் கொண்டுவந்து இடைவிடா விழிப்பினின்று தைரியத்துடன் மனதை நிலைக்கச் செய்கின்றான். இவ்வகை நல்லுணர்வை பாதுகாப்பவன் அதிதீவிர பக்குவ ஜாக்கிரதையி லிருக்கின்றான். சோம்பலற்ற சுறுசுறுப்பினின்று மத்தியபாதையில் நடப்பான். அதாவது தராசினை முள்ளானது சரிநிறைப்பெற்று மத்தியில் நிற்பதுபோல் வேண்டுதலும் வேண்டாதலுமாகிய மத்தியநிலையில் நிற்பான். அவனது மாமிஷம், நரம்பு, என்பு, தோல் முதலியவைகள் சுருங்கி மாறுபடினும் தனது நன்முயற்சிகள் மாறுபடாது விடாமுயற்சியிலும் ஆண்மெயிலும் இடைவிடா சாதனத்திலும் உள்ள நிலையைப் பாதுகாக்கவேண்டிய முயற்சிகளென்னப்படும். இவைகளே நன்முயற்சிகளாம்.

சம்மா ஸத்தி - நற்சிந்தனை.

ஓ! சகோதிரர்களே! இவ்விடம் நற்சிந்தனையை விளக்குகின்றேன். நற்சிந்தனையில் நான்குவகையுண்டு. அதாவது:—1. காயா சம்யக் ஸ்மிருதி. 2. வேதனா சமயக் ஸ்மிருதி. 3. சித்தா சம்யக் ஸ்மிருதி. 4. தம்ம சம்யக் ஸ்மிருதி (இதன் விவரம்) 1. தேகத்தை மலபாண்டமென்றும், அசுத்தமென்றும் சிந்தித்தல். 2. உணர்ச்சிகளிலிருந் துண்டாகுங் கேடுகளை சிந்தித்தல். 3. எண்ணங்களில நிலையில்லா செய்கைகளை சிந்தித்தல. 4. அகதாரங்கத்தோர் விகாரங்களை சுத்த அறிவுடனும புலன்கள் விழிப்பினின்றும், உலக அவாவினின்றும், துக்கத்தினின்றும், தருமசிந்தனையை சிந்தித்தல் இவ்விநான்கையே சத்தி பதானங்களென்றும் அல்லது முக்கிய தியானத்தின் நான்கு பாதைகளென்றுங் கூறப்படும்.

இவற்றுள் 1-வது. (காயா) ஸம்யக் ஸ்மிருதி தேகத்தைப்பற்றியச் செயலும், சிந்தையும் யாதெனில், தேகத்திலமைந்துள்ள நவத்துவாரங்களிலும் மயிர்க்கால் பேரலகளிலும்படிந்துள்ள தூசுகளை சுத்தநீரிற் கழுவி சுத்தவஸ்திரமணிந்து அரவமற்ற ஏகாந்த ஸ்தானத்திலேலும், வனங்களி லுள்ள விருட்சத்தின் அடியிலேலும் சுகசீலத்திலுட்கார்ந்து உலகதோற்றமாம் சருவசீவர்களின் சுகத்தை சிந்திக்கவேண்டும்.

அவ்வகை யன்பின் பெருக்க சிந்தனையால் ஊசியிற் கோர்த்துள்ள சரடு ஊசி செல்லுமிடங்களிற் றொடர்ந்துசெல்லுவதுபோல் மனதில் தோந்தித்த மூச்சானது மனதைத் தொடர்ந்து சிந்தனை லயிக்குமிடத்தில் மூச்சானது உள்ளுக்கடங்கியும் சிந்தனைபாவிநிற்குங்கால் மூச்சானது வெளிக்கோடியும் வரும். இவ்வகையாக மூச்சு உள்ளுக்கடங்குவதும், வெளிக்குப் பாவுவதும் தோற்றங்கள் விரிகிறதும் மறுபடியும் மடிகிறதுமாகியச் செயல்கள் யாவும் மனத்தின் செயலென்றே சிந்தித்தல் வேண்டும். இவ்வகை சத்தியசிந்தனை பெருக்கத்தால் மூச்சானது இவ்வளவுநேரந் தனக்குள் அடங்கியிருந்ததென்றும் இவ்வளவுநேரம் வெளிக்குச் சென்றதென் றுணருவான். இவ்வகை உணர்ச்சியால் மனமும் மூச்சும் மூக்கு முனையிற் சேர்வதைக் காண்பான். அவ்வகைச் சேர்க்கையைக் காணுங்கால் தன் தாயின் கருப்பையில் கட்டுண்ட ஒன்பதாமாதத்தில் தள்ளி விளை

யாடும்போது மூச்சோடிக்கொண்டிருந்த ரந்தனத்தைச் சுழிமுனையிற்காண்பான். அக்காட்சியால் மூச்சு ஒடுங்கு நிலையும் விரியு நிலையுந் திட்டமாயறிந்து முன் ஜெநநத்தின கன்மகாட்சிகளைக் காண்பான். முன் கன்மகாட்சியைக் கண்டவுடன் இனி தோற்றுங் கன்மங்களுக்கு இடங் கொடாமல் விழிப்பிலும் நற்சிந்தையிலும் நிலைப்பான்.

இவ்வகையால் நிலைத்தவன் தன் தேகத்தையும் எதிரி தேகத்தையும் நோக்குவான். அவ்வகை நோக்குவோன் தேகமானது பதவிதாது அபோதாது, தேஜோதாது, வாயோதாது வென்னும் நான்குவகை பூதச் சேர்க்கையினாலுவால் தோன்றியதென்றும் அதகோற்றத்தில் மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம் இவைகளதின் பிரிவென்றும்; சப்த, பரிச, ரூப, ரச, கந்த, எண்ணங்களாம் அதன் செயல்களென்றும் உணர்ந்து அவைகைக் கூர்ந்த உணர்ச்சியால் விக்ஞானமென்னும் அறிவினின்று அதே விக்ஞான அறிவுநிலையில் நாமஸ்கந்தத்தையும், ரூபஸ்கந்தத்தையும் அறிகின்றான்.

இதில் வாய், கண், செவி, மூக்கென்னுந் தோற்ற ஸ்கந்தங்களை ரூபமென்றும், வேதனை, ஸஞ்ஞா, ஸம்ஸ்காரம், விஞ்ஞானம், நுகர்ச்சி, குறிப்பு, பாவனை, அறிவு என்றுஞ் செயலின் ஸ்கந்தங்களை நாமமென்றுங் கூறப்படும்.

இத்தகைய நாம, ரூப மிரண்டையு முணர்ந்தவன் தன் தேகத்தையும், எதிரி தேகத்தையும் பஞ்சஸ்கந்த சேர்க்கையென்றே தெரிந்து கூறுவான்.

தன்தேகம் எதிரிதேகம் உண்டாகிய கன்மங்களையும் தன்தேகமடிவுக்கும், எதிரிதேக மடிவுக்கும் ஏதுவாகிய கன்மங்களையுஞ் சிந்தித்து தேகமென்னும் ரூபமும் பாழ், உயிரென்னும் நாமமும் பாழென்னும் இரண்டற்ற நிலையில் நிற்பான்.

நான் உட்கார்ந்தேன், நான் படுத்தேன், நான் நிற்கிறேன், நான் சாய்ந்தேனென்னும் ஒரு பொருள் தனியே யிருக்கவில்லை. நான் என்பது எப்படி உட்காரும், நிற்கும், படுக்கும் என விசாரித்து இது வீண் வார்த்தையென்றறிந்து தன்தேகத்தைப்பற்றியும் அன்னியர் தேகத்தைப் பற்றியுஞ் சிந்திப்பான்.

இந்த தேகம் உரோமத்தாற் சூழ்ந்து நகம், பல், சதை, என்பு, மூளை, குண்டிக்காய், ஈரல், நுரையீரல், மண்ணீரல், குடல், இறைக்குடல் மணிக்குடல், மலம், பித்தம், கபம், உதிரம், சீழ், உயிர் நீர், வியர்வை, சளி, மூத்திரம், கண்ணீர், காது முதலிய உறுப்புக்கள் சேர்ந்திருக்கின்றனவென்றும் இது காலத்திற்குக்காலந் துற்கந்தத்தைக் கொடுத்துக்கொண்டே வருமென்றும்; இவைகளில் ஒன்று கெடுமாயின் சகலமுங் கெடுமென்றுஞ் சிந்திப்பான்.

இவ்வகையாற் கெட்டழியுந் தேகம் மயானத்தில் இன்னுமாறுபட்டு நிறமுங் கெட்டு ஊதலிட்டிருப்பதைக்கண்டு தன் தேகமும் பிறர் தேகமும் இதுபோற கெடுமல்லவாவென்று சிந்திப்பான்.

இன்னோரிடத்திற் கெட்டுள்ள தேகத்தை நரிகளுங் கழுகுகளும் பிடுங்கித்தின்பதைக்கண்டு நம்முடைய தேகத்தையும பிறனுடைய தேகத்தையும் நரிகள் பிடுங்கித்தின்னுமல்லவாவென்று சிந்திப்பான்.

அவ்விடத்திற் கிடக்குந் துண்டெலும்புகளைப்போலுங் குப்பையெலும்புகளைப்போலுந் தன்னுடைய என்புகளும் பிறனுடைய என்புகளுஞ் சேர்க்கப்படுமல்லவாவென்று சிந்திப்பான்.

கால் என்புகள் ஒருபுறமும், கை என்புகள் ஒருபுறமும், தலை என்புகள் ஒருபுறமும் பலர் கால்களிலும் உதைப்பட்டு உருளுவதைக் கண்டு நம்முடைய என்புகளும் பிறனுடைய என்புகளும் மிதியும் உதையும்பட்டு உருளுமோவென்று சிந்திப்பான்.

இத்தகைய நுண்ணிய வறிவாலும் சத்திய தரிசனத்தாலும் தன் தேக மாறுதலையும், பிறர் தேகமாறுதலையுங்கண்டு அம்மாறுதலின் காரணங்களை ஆழ்ந்து சிந்திப்பான்.

அவ்வகையால் ஆழ்ந்து சிந்திப்பவனும், தேகத்தின் செயல்களை ஆராய்பவனும், தேகத்தில் வெறுப்படைந்த புண்ணியனும் தனது இடைவிடா விசாரிணையினால் பத்துவகை நற்குணங்களையடைகின்றான்.

1. வெறுப்பும் விருப்புமற்ற நிலையே இடமாகக்கொண்டு நிற்பன்.
2. பயத்தையும் ஆவலையும் வெல்லுவான். ஆவலுக்கும் பயத்திற்கும் இடங்கொடான்.
3. குளிர்ச்சியையும், உஷ்ணத்தையும், பசியையும், தாகத்தையும் நோக்காமல் நிற்பன்.
4. கொசுக்களாலும், பூச்சுகளாலும், பல ஜெந்துக்களாலும் உண்டாகுந் துன்பங்களைத் துன்பமாகக்கருதாமலும், மற்றஜெந்துக்களால் உண்டாகும் இன்பங்களை இன்பமாகக் கருதாமலு மிருப்பன்.

இத்தகைய சிந்தனை மிகுதியாலும், விசாரிணைப் பூர்த்தியாலும் காமவெகுளி, மயக்கங்களற்று சாந்தம், யீகை, அன்பு பெருகி சுழிமுனையில் சதாவிழிப்பில் இருக்குங்கால் மனதின் எண்ணத்திற்கு ஆதாரமாயிருந்த மூச்சானது மனத்தின் நல்லெண்ணமிகுதியால் அதனைப்பின்பற்றி சுழிமுனைத் திறந்து உள்ளடங்கியபோது அவனுக்குப் பலவிதமான தொனிகள் * செவியில் சப்திக்கும். அவ்வகைத் தொனியையும் ஓர் பொருளாகக் கருதாமல் நிற்பான்.

---

* மௌனதேசிகனம்.—அருமையென்ற மௌனத்தை மூட்டிமூட்டு, வடங்காத காரணமது வடங்கிப்போகும், இருமையென்ற விந்திரிய மாண்டுபோகு, மிருள்மலம்போம் நிரோதையில்லை மயக்கம் நீங்கும், வெருவுபல கோடிகன்மங் கணத்தினீக்கும், வெளியினுள்ளே வொளிமீதான்றும் நாதங்கேட்கும், உரிமையுடன் மௌனசித்தி யாகவாக, உருவமுனைக் கானந்தவுருவமாமே.

மச்சமுனியார்.—விழித்துமிகப் பார்த்திடவே பொறிதான் வீசும், முச்சந்தி வீதியிலே தீபந் தோன்றும், சுழுத்தியிலே போகாமலொருமனதாய் நின்றால், சுத்தமென்ற நாதவொலிக் காதிற் கேட்கும், இழுத்தென்று நீகூடத் தொடர்ந்தாயானால், எண்ணெண்ணுபிறப்பிறப்பு மெய்ம்பாரு, அழுத்திமனக் கேசரத்தி னின்னைநோக்கா, அப்பனை லலாடத்தில் து... யா ய.

ஞானக்கண்ணிலை.—கந்தமுத லைம்புலனையடக்கி நாப்பண், கருத் மை து சாம்பவிநோக் கதனைமேவி, சிந்தையுறத் தான்சரிக்கு மிடங்கடன்னில், செறிந்திடைய திருந்திணையா நிட்டைகூட, வக்தெழும்பு மணிசலதி சிலம்பு சங்கு, வண்டிசையாழ குழல்பேரி முழக்கங்காண, இந்தவகை சிவயோகத் திருப்பான்ஞானி, யினியவர்க்குப் பிறவியுமுண்டென்னலாமோ.

† ஔவைக்குறள்.—செல்லல்நிகழல் வருங்கால மூன்றினையுஞ், சொல்லு மௌனத் தொழில்.

5. அருகிலுந் தூரத்திலுமுள்ள சப்தங்களைப்போல் ஐம்பொறிக ளடங்கியவிடத்து நாதவொலிகள் தொனிக்கும்.

6. தன்னிற்றானே தோற்றிய நாதவொலி யடங்கியவுடன் வெளியிலுள்ளப் பொருட்கள் யாவுந் தனக்குள் தோன்றும்.

7. அவ்வகைத் தோற்றத்தால்† செல்காலம், நிகழ்காலம், வருங்காலமென்னும் முக்காலச் செயல்களையுங் கூறுவான். ஒவ்வொருவர் இதயத்தில் எண்ணும் எண்ணங்களையும் அறிந்து சொல்லுவான். ஆகாயாசங்களால் தனக்குள் தோன்றும் எண்ணங்கள் எவ்விடத்தில் அடங்கியதோ அதேயிடத்திற் சருவமுந் தோன்றும். அவ்வகைத் தோற்ற வியல்பால் எண்பத்தொன்பது சித்துக்களும் வாய்க்கும்.

8. முன்பிறப்பிற்கு ஆதாரமான கன்மங்களையும், முன் பிறப்பையுங் கண்டறிவான்.

9. ஊனக்கண் பார்வையற்று ஞானக்கண்ணின் பார்வையால் சருவதோற்றங்களும், ஒடுக்கங்களும் முன்வினையின் பயனென்றறிந்து சருவசீவர்களுக்கும் நீதிநெறிகளைப் புகட்டுவன்.

10. இத்தகைய ஞானக்கண் பெற்று சதா விழிப்பி லிருப்பவன் பிறப்பென்னுஞ் சமுத்திரத்தைக் கடப்பான்.

இவைகள் யாவும் தேகவிசாரிணையால் இதயத்தை சுத்தீகரித்தவிடத்தில் தோன்றுங் காட்சிகளாம்.

2-வது. வேதனா (சத்திபதானா) சம்யக் ஸ்மிருதி. அதாவது, நுகர்வுகளிலிருந்து உண்டாகுங் கேடுகளை விவரிக்கின்றேன்.

ஓ! சகோதிரர்களே! நுகர்வுகளை தியானிக்கத்தக்க மனிதன் பின்வருமாறு சிந்திப்பான்.

நுகர்வுகளென்னும் உணர்ச்சியை ஆராயும் விருப்புள்ளவன் நுகர்வுக ளின்னதென்றும், வெறுப்புள்ள நுகர்வுக ளின்னதென்றும், நடுநிலையுள்ள நுகர்வுக ளின்னதென்றும் சததியதருமத்தின்படித் தெளிவான்.

இலௌகீகத்திற்கடுத்த விருப்புள்ள நுகர்வுக ளின்னதென்றும் வெறுப்புள்ள நுகர்வுக ளின்னதென்றும் இலௌகீகத்திற் கடுத்த நடுநிலையுள்ள நுகர்வுக ளின்னதென்றும் சத்தியதன்மப்படி தெளிகின்றான்.

இவ்விதமாகத் தன்னிடத் துண்டாகும் நுகர்ச்சிகளாம் உணர்ச்சிகளைப்பற்றி சிந்திப்பான். அந்நியனிடத் துண்டாகும் நுகர்ச்சிகளென்னும் உணர்ச்சிகளைப்பற்றி சிந்திப்பான்.

இவ்விதமாகத் தன்னிடத்துண்டாகும் நுகர்ச்சிகள் எவ்வகையி லுதிக்கின்றனவென்றும், அன்னியனிடத் துண்டாகும் நுகர்ச்சிகள் எவ்வகையா லுதிக்கின்றனவென்றும், தனக்குள் மறையும் நுகர்ச்சிகளைப்பற்றியும் பிறனுக்குள் மறையும் நுகர்ச்சிகளைப்பற்றியும் நடுநிலையில் மறையும் நுகர்ச்சிகளைப்பற்றியும் சிந்திப்பான்.

நுகர்ச்சிகளின் உதிப்புகள் யாவையும் உற்று நோக்குவான்.

இவ்வகையில் உற்றுநோக்கும் உணர்ச்சிகள் உற்றுநோக்குமிடத்தி லுதிப்பதென்று முணர்வான்.

இத்தகைய நுகர்வின் நுண்ணறிவு தோன்றிய காரணம் யாதெனில்:—தன்னையுந் தன் செயலையும் விசாரித்துணர்ந்த சத்தியதன்மத்தின் பற்றற்ற நிலையேயாம்.

உலகில் நான் உணர்கின்றேன் என்ற பதத்தை சுத்த சிந்தனையிலிருந்து மொருவன் சாதாரண பேச்சுமுறையன்றென்றும் இஸ்திரமானதல்லவென்றும் உற்றுநோக்குமிடத்துத் தானே யுணர்பவனென்று தெளிகின்றான்.

இவ்வகை ஆழ்ந்த அறிவுடன் உணர்ச்சிகளைப்பற்றி சிந்திக்குஞ் சிந்தனையே நுகர்வாகும் வேதனா தியான மெனப்படும்.

3-வது. சித்த (சத்திபதான) சம்யக் ஸ்மிருதி. அதாவது, எண்ணங்களின் நிலையில்லா செய்கைகளைப்பற்றிய தியானத்தை விளக்குகின்றேன்.

அதாவது உதிக்கும் எண்ணத்தை நோக்குகின்றவன் எண்ணங்களின் தோற்றுதலை கிறகிக்கின்றான்.

1. பேராசையின் யெண்ணங்களையும், பேராசையற்ற வெண்ணங்களையும். 2. கோபத்தை யெழுப்பு மெண்ணங்களையும், கோபத்தினின்று மீண்ட எண்ணங்களையும். 3. பொய்க்காட்சிகளது எண்ணங்களையும், பொய்க்காட்சிகளினின்று மீண்ட யெண்ணங்களையும். 4. மனதை ஒன்றிலே செலுத்திய வெண்ணங்களையும், மனதைப் பலவகையில்சிதரவிட்ட எண்ணங்களையும். 5. தாழ்ந்த எண்ணங்களையும், மகத்துவமுள்ள எண்ணங்களையும். 6 நீச்ச எண்ணங்களையும், புகழத்தக்க எண்ணங்களையும். 7. மனங்குவியு மெண்ணங்களையும், மனத்தின் நிலையற்ற யெண்ணங்களையும். 8. சிக்கற்ற சுயக்கியான நேரான வெண்ணங்களையும், விலங்கி லகப்பட்ட யெண்ணங்களையும் ஆழ்ந்து சிந்திப்பவனாகின்றான்.

இவ்வகை யாழ்ந்த சிந்தனையில் தன்னிடத்துதிக்கும் எண்ணங்களையும், அன்னியரிடத்துதிக்கும் எண்ணங்களையும், எண்ணங்கள் உதிக்கத்தக்க பீடங்களையும், அவைகள் ஒடுங்கு மிடங்களையும் ஆராய்வான். எண்ணங்கள் தோற்றுதற்கும் மறைவதற்குமுள்ள காலவரைகளை சிந்திப்பான் தோற்றுதற்கும் மறைவதற்குமுள்ள யேதுக்களை நோக்குவான்.

இவ்வகை நோக்கத்தின் மிகுதியும் நுண்ணறிவும் உண்டாகும் ஏதுக்கள் யாதெனில், தன்னையுந் தன் செயலையு மாராயும் பற்றற்ற நிலையேயாம்.

இத்தகைய வாராய்ச்சியின் ஆழ்ந்த விழிப்பே எண்ணங்களின் தியான மெனப்படும்.

4-வது. காம்பீர தம்ம (சத்திபதான) சம்யக் ஸ்மிருதியை விளக்குகின்றேன். அதாவது, அந்தரங்கத் தோற்றங்களின் விகாரங்களைப்பற்றிய அறியுஞ் சிந்தனையென்னும் தியானமேயாம்.

இக்காம்பீர தன்மம் ஐந்துவகை உள்ளடக்கத்தை யுடையது.

1. பஞ்சநீவர்ணிய. 2. பஞ்சஸ்கந்த. 3. ஆயதன. 4. சத்த சம்போஜங்கய. 5. சதுர்சத்ய வென்பவைகளாம்.

1-வது. பஞ்சநீவர்ணியத்தில் 1. காமச்சந்த. 2. வியாபாத. 3. தீனமித்த. 4. உத்தச்சக்குக்கச்ச. 5. விஸிகிச்சா வென்னும் ஐந்து பிரிவுகளுண்டு.

1. இதிற் (காமச்சந்தா) யாதெனில் ஒருவன் காமாக்கினியில் வெதும்புங்கால் காமயிச்சைப் பெருக்கத்திலிருக்கின்றனென்றும், காமாக்கினி வெப்பங் குளிர்ந்தபோது காமவிச்சையில்லையென்றும் இக்காமாக்கினி மறுபடியும் எவ்விடமிருந்து எழுப்புகிறதென்றும் எவ்விடத்திலில்லாமல் அடங்குகிறதென்றும் அவ்வகை யெழும்புங் காமாக்கினியா லுண்டாகும் இன்பம் தன் தேகத்தில் ஜனிக்கின்றதா அந்நிய தேகத்தில் ஜனிக்கின்றதாவென் றுணர்ந்து காமத்தின் எரிவுக்குங் காம எரிவின் இன்பத்திற்குந் தன் தேகமே காரணமாதலின் இச்சிற்றின்பத்தின் விளைவால் தேகத்தைப் பிணிக்குள்ளாக்கி கேடுண்டாக்கிக்கொள்ளுவது தகாதென்றறிந்து காமாக்கினியை அவித்து அதனின்று தப்பித்து அவ்விச்சையில் விடுபட்டவனாகின்றான்.

2. (வியாபாத) வென்னுங் கோபாக்கினியானது தன்னையொருவன் மனனோகப் பேசியவிடத்திலும் தன் தேகத்தை நோக புடைத்தவிடத்திலும் தன் பொருளை யபகரித்தவிடத்திலும் பிறத்தலால் இக்கோபாக்கினியின் தோற்றத்திற்கு பேராவாவின் பீடமே நிலையென் றுணர்ந்து கோபத்தையும் அவாவையுஞ் சீர்தூக்கி யுணர்ந்து தன்னுடையது பிறனுடையதென்னும் அவாவின் மூலாக்கினியே கோபாக்கினியாயதால் அவாவை யடக்கிக் கோபத்தைத் தணிக்க முயலுகின்றான். அம்முயற்சியே அவாவை யறுத்து கோபாக்கினியை யவித்து அவ்வக்கினிக்குத் தப்பித்து கோபத்தினின்று விடுபட்டவனாகின்றான்.

3. (தீனமித்த) வென்னும் சோம்பலானது மிதமின்றி புசிக்கும் பொசிப்பினிடத்துஞ் சதா மதோன்மத்தத்திடத்து முதிப்பதென் றுணர்ந்து மிதாகாரம் புசித்து மதோன்மத்தம் போக்கி சோம்பலை நோக்குவான். அச்சோம்பலும் அசதியும் நீங்கியவிடத்து தனக்குள் ளெழுஞ் சுறுசுறுப்பையும் ஆனந்தத்தையு முணருவான். அன்றுமுதல் சோம்பலுக்கும் அசதிக்கும் மூலமாகும் மிதபுசிப்பையும் மதோன்மத்தத்தையு மகற்றி சோம்பலும் அசதியுந் தன்னை யணுகாம லகற்றி அதனினின்று விடுபட்டவனாவான்.

4. (உத்தச்சக்குக்குச்ச) வென்னும் பெருமகிழ்ச்சியும் அதனிறை வியாகூலமும் உண்டாவதற்கு மூலம் தனக்குள்ள பூநிதியும் தனநிதியும் பசுநிதியுங் குறைவில்லாமலிருக்குங்கால் பெருமகிழ்ச்சியடைவான். அவைகள் மாண்டவிடத்து மாளா வியாகூல மடைவான். இவ்வகை மகிழ்ச்சிக்கும் வியாகூலத்திற்கும் பொருள் சேர்க்கையின் பெருந் தோற்றமும் பொருளழிவின் சிறுந்தோற்றமுங் காரணமென் றுணர்ந்து திரண்ட திரவியஞ் சேரினும் பெருமகிழ்ச்சி யடையாமல் பெருந் திரவிய மழியினும் வியாகூலமடையாமல் உலகப் பொருட்கள் தோற்றுவதும் மடிவதும் உள்ள சுவாபமென் றுணர்ந்து மகிழ்ச்சிக்கும் வியாகூலத்திற்கும் மத்தியில் நின்று பெரு மகிழ்ச்சியையும் வியாகூலத்தையும் வெல்லுவான். தற்புகழ்ச்சியாம் மகிழ்ச்சியையும் வியாகூலத்தையும் வென்றவன் அவைகளினின்று சதா விடுபட்டவனாகின்றான்.

5. (விசிக்கிச்சா) வென்னும் சந்தேகமென்பது ஒருவன் மரணமடைந்தபின் சுகமுண்டென்னு மிடத்திலும், மற்றொருவன் மரணமடைவதற்குமுன் சுகமடைய வேண்டுமென்னு மிடத்தில் உதிப்பதை யுணர்வான்.

அச்சந்தேகத்தை மரணமடைந்தபின் சகலமு மடிந்து வினைபோகத்துக் கிடாய் மறுதேகத் தோற்றலைக் காண்பான். அக்காட்சியால் துற்கன்ம நற்கன்மச் செயல்களின் பலன்களை யுணர்ந்து சந்தேகமற தன்தேக நற்கன்ம பலன்களைப் பெருக்கி சதானந்தமும் நித்திய சுகமும் மரணத்தை ஜெயித்தவிடமாம் சந்தேகமற்ற சதா விழிப்பினிடத்தி லுள்ளதென்று முணர்ந்து சந்தேகத்தினின்று விலகி சதா விடுபட்டவனாகின்றான்.

இவ்வகையாக சந்தேகங்களை யகற்றி தன் தேக அந்தரங்கத் தோற்றங்களையும் அதன் களைகளையும் வேறாக் களைந்து தோற்றுங் களைகளை பூராது சிந்திப்பான்.

இவ்வகைச் சிந்தனை தியானம் எவ்விடத்துதித்ததென்னில் இடைவிடா நுட்ப விசாரிணையாலும் சத்திய தரிசனையாலுந் தன்னை யுணர்ந்து வெறுப்படைந்த புண்ணியத்தாலும் ஆழ்ந்த சிந்தனையாலும் உலகபந்தத்தில் சிக்குண்ணு ஜாக்கிரதையாலும் உண்டாகும் நல்விச்சையின் நடுநிலையாம் சுபயிச்சை விசாரணை தியானமென்னப்படும்.

இத்தகைய நல்விச்சை விசாரிணை தியானமாகிய பஞ்சஸ்கந்த தம்மேய வென்னும் ஐந்து மூலதத்துவங்களை விசாரிக்கின்றான்.

1. ரூபம் எவ்விதமாகத் தோன்றி எவ்விதமாகமறைகிறதென்றும், 2.. உணர்ச்சி எங்கிருந்து தோன்றி எங்கு மறைகிறதென்றும், 3. குறிப்பு எவ்விடத்தினின்று தோன்றி எவ்விடத்தில் மறைகிறதென்றும், 4. பாவனை எவ்வகை யாதரவால்தோன்றி எவ்வாதரவால் மறைகிறதென்றும், 5. அறிவு எவ்வகை சுகத்தால் தோன்றி எவ்வகை அசுகத்தால் மறைகிறதென்றும் உசாவுகின்றான்.

பஞ்சஸ்கந்த தோற்றமாகும் அறுவகை சம்பந்த விஷயமாகுங் கருமத்தொகுதியைப்பற்றியுங், கரும உற்பவங்களைப்பற்றியுஞ் சிந்திப்பான்.

அதாவது ஆயதன தம்மேயமென்னப்படும். விஷயசம்பந்த கருமத்தொகுதிகளுக்கு ஆதாரம் அறுவகைப் பீடங்களாகும்.

1. சக்கு. 2. சோத. 3. மாஹன. 4. ஜீவ்ஹ. 5. காய. 6. மனோ. இதுவே 1. கண். 2. செவி. 3. மூக்கு. 4. வாய். 5. மெய். 6. மனம்.

இதிற் றோன்றும் அறுவகைக் கருமத்தொகுதிகளின் தோற்றங்கள் யாதெனில் :—

1. சப்த. 2. பரிச. 3. ரூப. 4. ரஸ. 5. கந்த. 6. மனோ கருமங்களாகும்.

இவ்வறுவகைக் கருமத்தொகுதியாம் விஷயசம்பந்தமாகும் உள்ளுணர்ச்சியின் தோற்றங்களை யாராய்வான்.

அதாவது, அவன் கதி ஈதென்றுங் கண்ட ரூபங்கள் இஃதென்றும் அதினின்றெழும் பற்றுக்கள் இவையென்றும் அப்பற்றுக்களின் எழுச்சி எவ்விதமா யெழும்புகிறதென்றும் எவ்வகையால் மடிகிறதென்றும் எவ்விதத்தால் மேற்கொள்ளுகிறதென்றும் எவ்விதத்தால் அதனினின்று மீண்டு சதா விடுபட்டோமென்பதையும் அறிகின்றான்.

இவ்வகை விசாரிணையால் 1. கண்ணையும் பார்வையையும். 2. செவியையும் சப்தத்தையும். 3. மூக்கையுங் கந்தத்தையும். 4. வாயை

யும் உருசியையும். 5. மெய்யையும் உணர்ச்சியையும். 6. மனதையும் எண்ணங்களையும். அதனதன் கட்டுகளையும் ஒன்றைக்கொண்டு ஒன்று தாவியிருப்பதையும் அதனதன் பற்றுக்களையுந் தோற்றங்களையும் மறைவுகளையும் அழிவுகளையும் அவ்வகைத் தோற்றங்களுக்கும் பற்றுக்களுக்கும் இடங்கொடாது சதா விழிப்பில்நின்றுவிடும் பற்றற்ற நிலைகளை யறிகின்றான்.

அவ்வகைப் பற்றறுக்கும் ஆயுதங்களாகும் சத்தபோஜ்ஙய தம்மேயவென்னு அறிவைத்துலக்கும் அந்தரங்க எழுவகையான மூலங்களை யாராய்வான்.

அதாவது :—1. சதிசம்போஜங்காய. 2. தம்மவிசய சம்போஜங்காய. 3. வீரியசம்போஜங்காய. 4. பிரீதிசம்போஜங்காய. 5. பஸ்ஸதத்தி சம்போஜங்காய. 6. சமாதி சம்போஜங்காய. 7. உபேய சம்போஜங்காய வென்னப்படும்.

1. ஞாபகம் எப்போதுந் தன்னிலிருக்கின்றதென்றும், 2. நுட்ப விசாரிணை எப்போதுந் தன்னி லிருக்கின்றதென்றும், 3. முயற்சி எப்போதுந் தன்னி லிருக்கின்றதென்றும், 4. ஆனந்த மெப்போதுந் தன்னிலிருக்கின்றதென்றும், 5. சாந்தி எப்போதுந் தன்னி லிருக்கின்றதென்றும், 6. மனனம் எப்போதுந் தன்னிலிருக்கின்றதென்றும், 7. சமதிருஷ்டி யெப்போதுந் தன்னிலிருக்கின்றதென்றும், இவைகளின் விடா நோக்கங்களை அறிவின் விருத்தியென்றும் விவேக மிகுதியென்றுங் கண்டறிகிறான்.

இவ்வகைக் குணங்கள் தன்னிலுள்ளபோது இருப்பதென்றும் இல்லாதபோது இல்லையென்றுந் தெரிகின்றான். இவ்விதமாய் மனக்களிம் பகற்றும் மூலவேதுக்கள் எவ்விதமாக வுதிக்கின்றதென்றும் எவ்விதமாகப் பூரணபடுகிறதென்று மறிகின்றான். அப்பூரண நிலையாகும் நான்கு சத்தியத்தைப்பற்றி சிந்திப்பான்.

1. துக்கசத்ய, 2. சமுத்ய சத்ய, 3. நிரோத சத்ய, 4. மார்க்க சத்ய மென்னப்படும். •இவ்வகை நான்கு சத்தியவிசாரிணையால் 1. பஞ்சஸ்கந்தங்களை துக்கத்திற்கு மூலமென்றும், அதினாலுண்டாகும் 2. அவாக்களை துக்கத்தின் மூலகாரணமென்றும், 3. அவாவறுததலே துக்க நிவாரணமென்றும், 4. அவாக்களை யறுக்கும் மார்க்கங்களே பரிசுத்த அஷ்டாங்க மார்க்கங்களென்று மறிகின்றான்.

இவ்வகை யறிந்தவன் அந்தரங்கத்தில் தனக்குள்ள சத்திய தன்மங்களையும் அதினாற்றானடைந்துள்ள ஆறுதல்களையும் அன்னியன் அந்தரங்கத்துள்ள அசத்தியதன்மங்களையும் அதினாலவனடையும் அல்லல்களையுங் கண்டறிகின்றான். இவ்வகை யந்தரங்க சத்தியங்களை யறிதற்கு நுட்ப அறிவும் பற்றற்ற நிலையும் புண்ணிய சிந்தையும் நன்மனவாசமுமே காரணமென்றறிவான் இதய பரிசுத்தமடையும் அழிவிலாவாழ்க்கையை அடையவும் துக்கத்தினின்று விடுபடவும் அழுகையிலும், ஏக்கத்திலும், பற்கடிப்பிலும் நின்று நீங்கவும் நான்கு சத்தியதானங்களே ஆதாரமும் நிருவாணத்தின் பாதையுமென் றறிவான்.

ஓ! சகோதிரர்களே! ஓர் காட்டு யானையைப் படுகுழிவெட்டிப் பிடித்து நாளுக்குநாள் அதன் மதான்மத்தங்களையடக்கி காட்டில் ஏதேச்சையாய் உலாவித்திரியுங்கா லிருந்த கொடுஞ்செயல்களை யொடுக்கி ஊரிலுள்ள மக்களுடன் பழகிவருமளவுஞ் சதா விழிப்பிலும் நின்று வயப்படு

த்துவதுபோல், இதய பரிசுத்தத்தை நாடும் அன்பனொருவன் தன்னெண்ணத்தில் நான்கு சத்தியதானங்களை நோக்கி காம வெகுளி மயக்கங்களைப் போக்கி உலகப் பற்றுக்களை நீக்கி சதா விழிப்பால் தன்னைத்தானே காத்து தனை சுத்திகரிக்குஞ் சாதனத்தினின்று சத்தியதரிசனமாம் பரிசுத்த முத்தியென்னும் நிருவாணத்தை யடைவான்.

**சம்யா சமாதி நற்சிந்தனை.**

ஓ! சகோதிரர்களே! மனவமைதியாஞ் சாந்தத்தைப் பற்றி யிவ்விடம் விளக்குகின்றேன். அவையே, 1. காயானுபஸ்ஸன்னா. 2. வேதனானுபஸ்ஸன்னா 3. சித்தானுபஸ்ஸன்னா. 4. தம்மானுபஸ்ஸன்னாவென்னும் நான்குவித சத்தியதானங்களென்னப்படும். அதாவது, 1. அசுத்தத்காலய தேகத்தைப்பற்றி சிந்தித்தல். 2. வேதனா சகல உணர்ச்சிகளினின்றுண்டாகுங் கேடுகளைப்பற்றி சிந்தித்தல். 3. மனத்தினது எண்ணங்களின் ஓட்டங்களையும் மறதிகளையும் உதயங்களையும் சிந்தித்தல். 4. உலகத்தில்தோற்றும் பொருட்கள் யாவும் க்ஷணத்திற்குக்ஷணங் கெட்டுக்கொண்டேவருகிறதென்று சிந்தித்தல். சாநதத்தின் பெருக்கத்தையும், மனவமைதியையும், இதய சுத்தத்தையுங் கோறும் ஒவ்வொரு மனிதனும் மேறகூறியுள்ள நான்குவகை சத்தியதானங்களையே தியானிக்கக் கடவன்.

இத்தகைய சிந்தனையாம் மனவமைதிக்கும், இதய சுத்தத்திற்கும் வழிகள் யாதெனில்:—1. சம்வாப்பதானா. 2. பஹானப்பதானா. 3. பாவனாப்பதானா. 4. பிரக்கமாப்பதானாவென்னும் நான்கு தானங்களே மனவமைதிக்கும் இதய சுத்தத்திறகும் பாதைகளென்னப்படும்.

அதாவது, 1. தங்களுக்குள் கெட்ட வெண்ணங்களுண்டாகாமல் தடுக்கும் முயற்சியி லிருத்தல். 2. தங்களுக்குள் உள்ள கெட்ட எண்ணங்களை நீக்கவேண்டுமென்று சதா முயற்சி செய்தல். 3. தங்களுக்குள் முன்னில்லாத நல்லெண்ணங்களையும் நன்முயற்சிகளையும் இடைவிடாது விருத்திசெய்தல். 4. தங்களுக்குள் உண்டாயிருக்கும் நல்லெண்ணங்களையும் நன்முயற்சிகளையும் மேலுமேலும் விருத்தியடைய முயற்சித்தல். இந்நான்குமே மனவமைதிக்கும் இதய சுத்தத்திற்கும் நெருங்கிய பாதைகளாகும்.

இவைகள் இடைவிடா பழக்கத்திற்கும் விருத்திக்குங் கொண்டுவருவதே நற்றியானம், நற்சிந்தனை என்னப்படும். இத்தகைய நல்லறமாம் ஒழுக்கத்தினாலும், பரிசுத்த வாழ்க்கையினாலும், உணர்ச்சிகளைத் தன்னிடத்தில் வசப்படுத்திக்கொள்ளுவதினாலும் விவேகவிருத்தி யடைந்த மாணாக்கனுக்குத் தனித்தவிடத்திற் செல்லவேண்டிய நோக்கம் பிறக்கும்.

அதினாற் காடுகளிலேனும், மாத்தினடியிலேனும், மலைக்குகைகளிலேனும், அடர்ந்த தோப்புகளிலேனுஞ் சலனமற்று அடங்கிஒடுங்குமிடந் தேடுவான். இவ்வகைத் தேடி யோரிடந் தங்கி பிச்சை பாத்திரத்தாலேனும் தானத்தாலேனுங் கிடைக்கும் அன்னத்தை ஒருவேளை புசித்து சம்பளம்போட் டுட்கார்ந்து சிரநிமிர்ந்து நீ தானமென்னுஞ் சுழிமுனையாம் * உள்விழி பார்வையால் மனதை யமைதியடையச் செய்வான்.

---

* ஞானவாசிட்டம். — மனமணிபேதச் சேற்றின் மறைந்தொருவருக்குந் தோன்றா, கனமுறுவிவேகநீராற்கழுவினாற் சித்திகாட்டும், வினவுறுவிவேகவன்பான்மெய்ம்மையமதியாற்கண்டு, கினமுறுபொறியை வென்று நீர்வரும் பிறவிதீர்வாய்.

1. இத்தகைய சாதனமுடையோன் முன்பே காம யிச்சையைத் தவிர்த்திருப்பவனாதலின் காம அவாவினின்று விலகி பரிசுத்த யிதயமுடையவனாவான்.

2. இச்சாதனத்தால் முன்பே கோபத்தைத் தவிர்த்தவனாதலின் குரூரச்சிந்தையை யகற்றி பரிசுத்த யிதயமுள்ளவனாவான்.

3. இச்சாதனத்தால் முன்பே பிராந்தியினின்று நீங்கியிருப்பவனாதலின் சதா விழிப்பிலும் ஜாக்கிரதையிலும் விருத்தி யறிவிலுமநின்று பிராந்தியிற் பற்றற நீங்கி ஒளியி லன்புகூர்ந்து பரிசுத்தயிதயமுள்ளவனாக விளங்குவான்.

4. இச்சாதனத்தால் அமைதியற்ற வியாகூலத்தை முன்பே தவிர்த்திருப்பவனாதலின் மனம் மாறாமலுஞ் சாந்தம் பேராமலும் வியாகூலத்தினின்று விலகி நித்யானந்தனாகி பரிசுத்த யிதயமுள்ளவனாக, விளங்குவான்.

5. இச்சாதனத்தால் மனமாறுதல்களை முன்பே தவிர்த்திருப்பவனாதலின் நன்மெயாம் உண்மெயில் முழு நம்பிக்கை யுள்ளவனாகி மனமாறுதல்களை யகற்றி உண்மெயில் அன்பை வளர்த்தி பரிசுத்த இதயமுள்ளவனாக விளங்குவான். ஆகிய இவ்வைந்து தடைகளை முன்பே களைந்தெறிந்துவிட்டதினால் மனதின் சுய நிலையை யடையப் பிரயத்தினப்படுவான்.

அதாவது, மயக்கத்தினின்று விடுபட்டவனாகியும் உணர்ச்சிகளாலாய எண்ணங்களுக்கு அதீதப்பட்டவனாகியும் துர்நடதைகளுக்கு அப்புறப்பட்டவனாகியு மிருப்பதுடன் தன்னை யிவைகளினின்று விலக்கிக்கொண்டு மனனத்துடனும் ஆராய்ச்சியுடனுங்கூடி மனவமைதியாம் முதல் தியானமாகும் பிரீதி, சுகா, சித்த, ஏககதா என்னுஞ் சந்தோஷமயும், ஏக சிந்தனை இவைகளின் உட்பிரவேசிப்பான்.

இம்முதல் தியானத்தில், 1. காமம். 2. கோபம். 3. பிராந்தி. 4. அமைதியற்ற வியாகூலம். 5. மனமலைவு. இவ்வைந்துமொழிந்து.

1. மனனம். 2. ஆராய்ச்சி. 3. சந்தோஷம். 4. ஆனந்தம். 5. ஏக சிந்தை. ஆகிய வைந்தும் உதிக்கின்றன.

இரண்டாந் தியானத்தில், மனனத்தையும் ஆராய்ச்சியையுந் தவிர்த்து சாந்தமுடையவனாகியும் ஆனந்தமுடையவனாகியு மிருப்பான்.

அவைக ளடக்கப்பட்டிருக்குஞ் சாந்தியும் ஏக சிந்தனையும் உதிக்கும். இதை பிரீதி, சுகா, ஏககதா வென்னப்படும் இரண்டாந் தியானத்தி லிருப்பான்.

மூன்றாந் தியானத்தில் மேற்கண்ட சந்தோஷத்தி னின்றுக்கொண்டு நித்தியானந்தமுடையவனாகியும், சதா விழிப்புள்ளவனாகியும், விவேகவிருத்தி யுள்ளவனாகியும் மனமணியின் சுயப்பிரகாச பேரின்பசுகத்தைத் தானே யனுபவிக்கும் மூன்றாந்தியானத்தி லிருப்பான்.

நான்காவது தியானத்தில் அவனது சுகதுக்கங்களை விலக்கி பற்றற்று மனநிறைவிற் சென்று துக்கமுஞ் சுகமுமற்றிருக்கின்ற மனநிறை அல்லது உபேட்சை சித்த ஏககதா வென்னும் பரிசுத்த நிலையாம் நான்காந் தியானத்திலிருப்பான்.

ஓ! சகோதிரர்களே! முன்பு கூறியுள்ள நான்குவகை தியானங்களில் பூர்த்தியான நிலை யடைந்தவுடன் ஐந்து வகை பாவனையில் நிலைப்பன்.

1. மைத்ரீபாவனை.

அதாவது, உலகிற் றோன்றியுள்ள சருவ சீவராசிகளும் ஆனந்தத்தில் வாழ்கவேண்டுமென்று பாவிப்பான். சீவராசிகள் யாவும் பேராசை, துக்கம், வியாதி, துராசையினின்று மீளவேண்டுமென்று பாவிப்பான். சருவ மநுட சீவர்களும் பிறவி யென்னும் நரகவாதனையிற் சுழன்று திரியாமல் சுகநிலை யடையவேண்டுமென்று பாவிப்பான்.

2. கருணாபாவனை.

ஏழைகளும், பிணியாளரும் செல்வம் நிறைந்து சுகதேகிகளாக வாழவேண்டுமென்று பாவிப்பான்.

3. முதிதபாவனை.

ஒவ்வோர் மநுடசீவர்களும் தங்கடங்கள் நல்வினைகளைப் பெருக்கி நற்பயனை யடையவேண்டுமென்று பாவிப்பான்.

4. அசுபபாவனை.

சரீரமானது பலவகைக் குற்றங்களால் ஆக்கப்பட்டதென்றுஞ் சாணக்குவியலில் தோன்றி வளருகின்ற புழுக்களைப்போல் கருப்பையில் உண்டாகிறதென்றும், ஒன்பது துவாரங்களின் வழியே ஒப்பத்தகாத கசிவு ஓயாமல் சொறிகிறதென்றும் ஊற்றை சாளத்தைப்போல் வெறுக்கத்தக்க நாற்றத்தை அது வெளிப்படுத்துகிறதென்றுஞ் சரீரத்தின் கால அளவு மின்னலைப்போன்றதும் நுரையைப்போன்றதும் நீரிலிட்ட உப்பைப்போன்றதும் காய்ந்தப் புல்லைப்பற்றிய நெருப்பைப்போன்றதும் கடலின் அலையைப்போன்றதும் புல் நுனியின்மீதுள்ளப் பனித்துளியைப்போன்றதுமாகிய நிலையற்ற தேகமென்று ஒவ்வோர் மநுட சீவர்களும் ஆழ்ந்து ஆயுளைப்பற்றி அஞ்சவேண்டுமென்று பாவிப்பான்.

5. உபேட்சபாவனை.

சகல உயிர்களையுஞ் சமமாகப் பாவித்தலும் வேண்டுதல் வேண்டாமெ யென்னும் வெறுப்பு விருப்பின்றி யிருத்தல் வேண்டுமென்றும் பாவிப்பான்.

நான் என்பதும் வீணெண்ணம். நானல்லவென்பதும் வீணெண்ணம். நான் இருக்கின்றேனென்பதும் வீணெண்ணம். நான் இல்லையென்பதும் வீணெண்ணம். நான் ரூபமுள்ளவனென்பதும் வீணெண்ணம். நான் ரூபமில்லாதவனென்பதும் வீணெண்ணம்.

ஓ! சகோதிரர்களே! வீணெண்ணங்கள் விரிவதே பிணி. வீணெண்ணங்கள் விரிவதே துக்கம். வீணெண்ணங்கள் விரிவதேபிராந்தி. வீணெண்ணங்கள் விரிவதினின்று குறுகி வீணெண்ணங்களி லோடாமல் மீண்டவ னெவனோ அவனையே ஞானவரம்பிட்ட மவுனியென்று கூறத்தகும்.

இம்மவுனி மறுபடியும் பிறக்கவுமாட்டான், தோன்றவுமாட்டான் இறக்கவுமாட்டான். ஏனெனில் வீணெண்ணங்களும், வீணவாக்களும், வீண் வார்த்தைகளும், வீண் செயல்களுமற்று அதனினின்று எப்போது மீண்டானோ அப்போதே வீணெண்ணங்களுக்கும், வீணவாக்களுக்கும்,

வீண் வார்த்தைகளுக்கும், வீண்செயல்களுக்கும் ஏதுக்களில்லாமல் சருகு புழுப்போல் அடங்கிவிடுகின்றான்.

அதாவது சருகு புழுக்களானது சிறு புழுக்களா யிருக்குமளவுந் தவிழ்ந்து இலைகளைப்புசித்து வளர்ந்து முதிர்ந்தகாலத்தில் தான் பிடித்துத் திரிந்த இலையால் தன்னை மூடிக்கொண்டு தன்னுவின் பசையாற் சுழன்று தன்னுரு மாறி கோவைக்காய்கள்போல் சிலநாள் அவ்விலையின் காம்பிற் றொங்கிகொண்டிருந்து வெடித்து சருகு பட்சிகளாய் வெளிற் பறந்தோடுவ தியல்பாம். அதுபோல் மனிதனும் பேராசை, கோபம், காமம், பொய்க்காட்சி, வீணெண்ணம் இவைகளினின்று விடுபட்டு சாந்தம், யீகை, அன்பு மூன்றும் பெருகியவிடத்து இதயசுத்த முண்டாகி கலை வளர்ந்து பூரணமடைந்து தோற்றங்களிலுண்டாகும் பற்றுக்களற்று பிறவியினின்று மீண்டு நித்திரையென்பதற்று சதா விழிப்புள்ளவனாய் இரவுபகலற்ற பரிபூரண மௌனநிலை யடைகின்றான்.

அவ்வகை மௌனபாக்கியந் திரண்டவுடன் முன்பு அநித்தியத்தினின்றவன் நித்தியனாகின்றான். ஆத்துமாவினின்றவன் அனாத்துமனாகின்றான். ஜநநங்கடோறும் பொய்யனாக நின்றவன் உண்மெய்யனாகின்றான். அப்பொய்யற்ற மெய்யே நிருவாணமென்னப்படும்.

இதுவே அதீதப்பட்ட ஞானம். இதுவே துக்கம் நீங்கிய இடம். இதுவே பிறப்பிறப்பற்ற நிலை. இதுவே சத்திய பீடம். இதுவே உள்ளத்துறவு. இதுவே பரமசாந்தி. இதுவே சுகவாரி. இதுவே பரமானந்தம். இதுவே பரிபூரணம். இதுவே சருவ வுலகங்களையுந் தோற்ற வைக்கும் பளிங்கு. இதுவே சருவ வுள்ளங்களையும் அறியத்தக்க பளிங்கு. இதுவே சாந்தம் நிறைந்த பிரமம். இதுவே அன்பு நிறைந்த சிவம். இதுவே யீகை நிறைந்த வீசன். இதுவே சுகமுத்தி. இதுவே பரமோக்ஷம். இதுவே நிருவாணமுமாம்.

இத்தகைய மெய்கண்ட நிருவாணநிலை யடைந்தவனே புத்தனாவான். இவ்வகைப் புத்தனானோன் சருவசீவர்களின் யீடேற்றங் கருதி ஒவ்வொரு சீவப்பிராணிகளின்மீதும் அன்புபாராட்டி அஹிம்சா தருமத்தை நாட்டி புற்பூண்டுகளிலிருந்து உயர்ந்து புழுக்கீடாதிகளாகத் தோற்றுவதற்கு இடையூறுகள் நேரிடாமலும், புழுக்கீடாதிகளிலிருந்து உயர்ந்து மட்சம் பட்சிகளாகத் தோற்றுவதற்கு இடையூறுகள் நேரிடாமலும், மட்சம் பட்சிகளிலிருந்து உயர்ந்து மிருகாதிகளாகத் தோற்றுவதற்கு இடையூறுகள் நேரிடாமலும், மிருகாதிகளினின் றுயர்ந்து மக்களென்னும் மநுக்களாகத் தோற்றுவதற்கு இடையூறுகள் நேரிடாமலும், மநுக்களிலிருந் துயர்ந்து * தேவர்களாகத் தோற்றுவதற்கு இடையூறுகள் நேரிடாமலுந் தடுத்து சத்தியதன்மமென்னும் மெய்யறமாம் சுகவழியைக் காட்டி துக்கநிவர்த்தியாம் பிறப்பறச் செய்வான்.

---

* விவேகசிந்தாமணி.—மெய் யதைச் சொல்வாராகில் விளங்கிடு மேலுநன்மெய், வையகமதனைக்கொள்வார் மனிதரிற் றேவராவார், பொய்யதைச் சொல்வாராகிற் போசன மற்பமாகும், நொய்யவரிவர்களென்றுநோக்கிடா ரறிவுள்ளோரே.

சீவகசிந்தாமணி.—ஊன் சுவைத் துடம்புவீக்கி நரகத்தி லுரைத னன்றோ, யூன்றினு துடம்புவாட்டி தேவரா யுரைதனன்றோ, யூன்றியிவ் விரண்டினுள்ளு மூறுதிநீ யுரைதி யென்ன, வூன்றினுதொழிந்துபுத்தே ளாவதே யுறுதியென்றான்.

திரிக்குறள.—தன்னுயிர் தானறப் பெற்றானையேனைய, மன்னுயி ரெல்லாந்தொழும்

கொல்லான்புலாலை மறுத்தானைக் கைகூப்பி, யெல்லா வுயிருந் தொழும்.

ஓ! சகோதிரர்களே! நிருவாணம் பெற்றவனுக்கும் நித்தியனுக்கு இத்தகைய சுத்தகுண முண்டாகி சருவ சீவப்பிராணிகளுக் குண்டாகுந் துக்கங்களை நிவர்த்திக்கவேண்டிய எண்ணம் பிறப்பதுடன் துன்பங்களினின்றுவிடுபட்டு மேற்பிறவியடையவேண்டியநீதிநெறிகளையும் புகட்டுவது காரணம் யாதெனில், தான் அடைந்த சாந்தத்தை மற்றவர்களு மடைய வேண்டுமென்றும், தான் பெற்ற சுகத்தை மற்றவர்களுஞ் சுகிக்கவேண்டியதென்றும், தானடைந்த மனவமைதியை மற்றவர்களு மடையவேண்டுமென்றும், தனக்குள் கண்ட சுயம்பிரகாசத்தை மற்றவர்களுந் தங்களுக்குள் காணவேண்டியதென்றும், தன்னிற்றானே பற்றறுத்து கண்ட காட்சியால் புளியம்பழம் வேறு ஓடு வேறுபோல் தேகம் வேறு ஒளி வேறாய் தானே சுயம்பாதலும், தனக்குள் † சகலமுந் தோற்றுதலுஞ், சுயம்பிரகாச தூய உடம்பினனாதலும், இயற்கையாகிய உணர்வில் நிற்றலும், பாசபந்தங்களினின்று நீங்கு மியல்பிலும், அன்பின் மிகுதியிலும், சதா ஆறுதலிலும், பேரின்பத்திலும் நின்று ‡ எண்குணத்தனாகி சகல துக்கங்களுஞ் சாராதுநிற்பதற்கேயாம். அதாவது தண்மெயாம்சாந்தபெருக்கத்தால் தேகதேயு திரண்டு குளிர்ந்துள்ளமெயால் கற்பாறையைத் தீபிறக்கக் காய்த்து இவனை யதன்மீது கிடத்தினபோதிலுங் குளிர்ந்த பாறையிற் படுத்திருப்பதுபோற் காண்பான். பாசபந்தங்களினின்று நீங்கி புளியம்பழத்தைப் போலும் ஓட்டைப்போலு முள்ளவனாதலின் இவன் தேகத்தின்மீது பலர்கூடி § அம்பு கும்பலை யெய்தபோதிலும் யாதொரு வுபத்திரவமின்றி ஆனந்தத்தி லிருப்பன்.

இவன் பெருக்கிக்கொண்ட அன்பின் மிகுதியால் மற்றவர்களின் கொடுஞ்சினமும், குரூரச்செயலும் இவன் அருகில்நெருங்காது. இனிய மொழியால் நீதிநெறிகளாம் அழியாச் செல்வத்தை அன்னியர் செவிகளிலோதி ஆதரிப்பவனாதலின் அவிவேகிகளால் இவன் செவியில் ஈயத்தைக் காய்த்துவிட்டபோதிலும் அதன் துன்பமின்றி சுகந்த தைலத்தை செவி

---

† சூளாமணி.—காதலிற் பிழையாராய்க் கள்ளனென்றேன் கடந்தகற்றி, யிதலேடில்லிருந்து மிளம்பிடியார்முதலாயா,ரோதினமுன்சேவரா யயர்ந்தவாக்கு ளுயர்ந்துளாராய், சோதியும்பே ரெண்குணமுந் துப்புரவுந் துன்னுவரே.

திரிக்குறள் புத்தர் வாழ்த்து.—கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான், றாளை வணங்காத்தலை.

‡ சூளாமணி.—இமையாத செங்கண்ண ரிரவறியார் பகலறியா, ரமையாத பிறப்பறியா ரழலறியார் பணியறியார், சுமையாத மணிமாலை சுடர்ந்திலங்கு மெடுமுடியா, ரிமையாத தல்லுலகி னகைமணிப்பூ ணமரரே.

சீவகசிந்தாமணி.—சோலையினரும்பித் திங்கட் சுடரொளி பூத்ததேபோல், மாலையுங் கலனுமின்று வடகமுந் துகிலுநான்று, காலையு மிரவுமில்லா கற்பக மரத்தினீழற், பாலையாழ் மழலை வேறாய்ப் பழமணிக் கொம்பி னின்றான்.

அவ்வை ஞானக்குறள்.—செல்லல் நிகழல் வருங்கால மூன்றினையுஞ், சொல்லு மவுனத் தொழில்.

சீவகசிந்தாமணி.—உலகுணர் கடவுளை, யுருகெழு திறலினை, நிலவிரி கதிரணி நிகரறு நெறியினை, நிலவிரிகதிரணி நிகரறு நெறியினை, னலர்கொழு மணமலரடியிணை தொழுதும்.

மணிமேகலை.—முற்று முணர்ந்த மூதறிவாளன்.

§ ஞானவாசிட்டம்.—சரமலர்கள் பெய்தல் மலர் மழையை யொக்கும், சழற்பள்ளி பனிநீரிற் சயனமொக்கும், சிரமறிதல் சுகமூறு நித்திரையை யொக்கும், தெகமறிவு தூக்கலவைச் செரிப்பூச்சொக்கும், நிரவறியகாராச மறுமம் பாய்தல், நெடுங்கோடை சிவிரியினன் னீரையொக்கும், விரகறிய விடயமெனும் விடைவிடேஜ, விவேக மிகுந் தவர்க்கலால் விலக்கொணாதே.

யில் விடுவதுபோ லிருப்பன். தனக்குண்டாகுஞ் சகலபற்றுக்களையு மறுத்தெரிந்ததுமன்றி மற்றவர்கள் பற்றுக்களையு மறுக்கும். உபாயங்களை யூட்டி சுகமடையச் செய்வதால் அவிவேகிகளால் இவன் தேகமாமிஷத்தைக் கத்திகொண்டு கழித்தபோதிலும் சந்தனசாந்தணிவதுபோல் சுகித்திருப்பன். சகல உயிர்களையுந் தன்னுயிர்போற் காற்பதுடன் சதா விழிப்பாம் ஆனந்த நித்திரையினின்று ஏனையோர்களுக்கும் அவ்வுயிர்களைக் காக்கும் அஹிம்சா தருமத்தை யூட்டி ஆதரிப்பவனாதலின் அவிவேகிகளால் இவன் சிரசை யறுத்தபோதிலும் யாதொரு துன்பமுமின்றி சுகநித்திறையி லிருப்பதுபோ லிருப்பன். ஆறாவது மநுகுலத் தோற்றத்திற்கு மாறுபட்ட சிரேஷ்ட செயலைப் பெற்றுள்ளபடியால் இவன் மநுரூபியாகத்தோற்றியபோதிலும் தேய்வு ஒளிவமைந்த தேவனென்னும் ஏழாவது தோற்றமாக உயர்ந்து உயர்ந்தோர் மாட்டே யுல கென்னும் ஒப்புவமெயுற்றிருப்பன்.

மநுகுலத்தோனே தனது நன்முயற்சியால் தேவனென்னும் ஏழாவதுதோற்ற மடைவன்.

## சங்கங்களின் ஸ்தானம்.

இத்தகைய அஷ்டாங்கமார்க்கத்தால் மனவமைதிப் பெற்று துக்கமற்ற அறஹத்துக்களும் தங்கள் சிஷியர்களுக்கு இதே மார்க்கத்தைப் போதிப்பரென்பது சத்தியம். அச்சிஷியர்களும் போதிநிலையாம் ததாகத மடைந்து அவர்கள் சிஷியர்களுக்கும் போதிக்கும் பரிசுத்த சாந்தியுமொன்று, மார்க்கமுமொன்று, அடையு முத்தியும் ஒன்றேயாகும்.

ஓ! சகோதிரர்களே! சாந்தமும், அமைதியும், அன்பும், கருணையுமான ததாகதருடைய மார்க்கத்தின்பலனை யாதென்று கூறுவோமாயின் ததாகதருடைய நிகரில்லா தருமத்தைக் கண்ட சிஷியனை காடுகளழைக்கும், தனித்த யிடங்க ளழைக்கும். ஆதலின் சத்தியதன்ம விசாரிணை உங்களைக் கூப்பிட்டழைக்குங்கால் தாமதியாது புறப்படுங்கள். பரிசுத்த தியானத்தில் நில்லுங்கள். நின்றவிடத்தில் ததாகத ரருளிய ஞானமாம் மௌன மனவமைதிப்பெற்று ததாகதர் நிலையை யடையுங்கள். அப்போது சஞ்சலத்தி லாழமாட்டீர்கள். சத்திய தன்மத்தையே ஆசானாகக்கொள்ளுங்கள். சகல தோற்றங்களும் அழியத்தக்கவைகளாதலின் ஜாக்கிரதையுடன் சுகவழியாம் அஷ்டாங்க மார்க்கத்தில் நடந்து வீடடையுங்கள் வீடடையுங்கோளென்றார்.

இவ்வகையாக புத்தபிரான் நான்கு வாய்மெகளின் விவரங்களையும் அஷ்டாங்கமார்க்கத் தெளிவையும் அதன் பலனையும் இதே தேகத்தி லறியவேண்டிய சுபேச்சையையும் ஊட்டி சுகமடையச்செய்த பெருநன்றிக்கேற்ற பிரிதிபல னளிக்கப்போதா வாரணாசி வாசிகள்யாவரும் ஒன்றுகூடி அவாறு யீகையின் செயலாம் தன்மத்தை முன்னிட்டு வாரணாசி * காசிவிசுவநாதா, காசிவிசுவேசா, காசியப்பனே எங்க ளிதயங்களில் சதா குடிகொண்டிருந்த விருளை யகற்றிய பகவனே பகவனே யென்று வணங்கிக்கொண்டார்கள்.

---

* சீவகசிந்தாமணி.—குருகுலஞ் சீவககுமரன் கோத்திர, மருகலில் காசிப னடிகள் வாழியென், றெரிமணி முடிநில முறுத்தி யேத்தினான், புரிமணி வீணைகள் புலம்பவென்பவே.

காசிக் கலம்பகம்.—கலைமதியின் கீற்றணிந்த காசியவிசேசர், சிலைமதனைக் கண்ணழலாற் செற்றனர்கா ணம்மானே.

காசி விசுவநாதர் வாரணாசியில் சாதுசங்கங்களை நாட்டி சிஷியர்கள் யாவரையும் வரவழைத்து நீங்களொவ்வொருவருந் தனித்திருப்பீர்களாயின் நீங்களநுசரிப்பதாகத் தீர்மானித்துக்கொண்ட சத்தியதருமத்தை உங்கள் பலயீனத்தால் பழயப்படி வழுவடையச் செய்துக்கொள்ளுவீர்கள். ஆதலின் நீங்களொவ்வொருவருந் தனித்திராது ஒவ்வோர்கூட்டங்களாகவுமிருந்து ஒவ்வொருவருக்கும் உள்ள தரும சங்கைகளை ஒருவருக்கொருவர் விளக்குஞ் சங்கங்களாகுங்கோளென் றாக்கியாபித்தார்.

தரும சங்கைகளை விளக்கி ஒருவருக்கொருவர் தெளிந்துக்கொள்ளவேண்டிய சங்கத்தோர் சகோதிரர்களைப்போல அன்பில் ஒன்றாகவும் சுத்தத்தில் ஒன்றாகவும், முயற்சியில் ஒன்றாகவுங் கூடி வாழுங்கள்.

உலகிலுள்ள சீவராசிகள் யாவுந் தரும ராட்சியத்தின் குடைக்கீழ் வாழும்படி அகிம்சா தருமத்தை யூட்டுங்கள். சத்தியதர்மத்தை நான்கு திசைகளிலுஞ் சென்று பிரசங்கியுங்கள்.

இதுதான் பரிசுத்த சகோதிரக்கூட்டம். இதுதான் புத்தசங்கம். இதுதான் சகல சீவர்களின் அடைக்கல ஸ்தானமென புத்த சங்கங்களை ஸ்தாபித்தார்.

இத்தகைய வாரணாசி சங்கஸ்தாபனத்துள் கவுண்டியனென்பவன் காசி விஸ்வேசன் போதனைகளைக் சவனமுறக்கேட்டு கருத்தில் பதிவுசெய்வதைக் கண்ட கடவுள் நித்தியமாகவே கௌண்டண்யன் சத்தியதன்மத்தை யுணர்ந்தா னென்றார்.

அன்றுமுதல் சத்தியதன்மத்தை யுணர்ந்த கௌண்டிய னென்றழைக்கப்பட்டான்.

அவ்வகைப் போற்றப்பெற்ற கௌண்டியன் காசிநாதனை வணங்கி ஒப்பிலா அப்பனே, தன்மசேனனே, எனையனே பகவனால் யான் சங்கத்தின் கட்டளைப் பெறவேண்டுமென்றான். அவ னன்பின் மிகுதியையும், ஒழுக்கத்தின் அவாவையு முணர்ந்த நாதன் தனது மாணாக்கர்களை நோக்கி சுகவழியாகும் சத்தியதன்மம் உங்களுக்குப் போதிக்கப்பட் டிருக்கின்றது.

நீங்க ளதன்மேறை நடந்து துக்கநிவர்த்தி யாகும்படி பரிசுத்தமாக வாழக்கடவீர்களென்றார். அதன்பின் கௌண்டன்யனும் மற்றுமுள்ளோருஞ் சேர்ந்து திரிரத்தினங்களாகும் மூன்று அழியா நிதிகளைச் சேர்த்துக்கொண்டார்கள். அதாவது,

**தாமரைப்புட்பத்தில் வீற்றிருந்த ததாகதரே முதல்நிதியாகும் பதுமநிதி.**

புத்தரை விசுவாசிப்போம், புத்தரே பகவன், புத்தரே யருகன், நம தறிவை விளக்குங் குருநாதன், ஓதாமலுணர்ந்த முனிவன், சகலமுந் தெரிந்த வறிவன், அவரே ஜெகந்நாதன். அவரே ஜெகத்குரு, சருவசீவர்களுக்கும் அன்பன், சருவ சீவராசிகளுக்கும் போதகன், உலகத்தோர்முதற் கண்ட தெய்வம் அவரே, ஆதியாங் கடவுளு மவரே, உலக சீர்திருத்தக்காரருள் முதன்மெயானவரு மவரே ஆதலின் ஆதிபகவனாகும் புத்தரை வாழ்த்துவோம்.

---

* மணிமேகலை.—புத்த தருமசங்கமென்னு, முத்திர மணியை மும்மெயில் வணங்கி.

### இரண்டாவது தன்மநிதி.

காசிவிசுவேசராகும் புத்தரால் போதித்த சத்தியதன்மத்தை விசுவாசிப்போம். பகவனால் சத்தியதன்மம் நன்கு பிரசங்கிக்கப்பட்டது. காலத்துக்கும், இடத்துக்கும் அதீதப்பட்டது. சொன்னதைச் சொல்லலாகுங் கிள்ளைபோ லிராமல் விசாரித்துத் தெளியவேண்டுமென்னுங் கற்பாறையின்பேரில் ஸ்தாபிக்கப்பட்டது. குழந்தைகளுக்கும் பெரியோர்களுக்கும் பொதுவாயுள்ளது. வியாதியுள்ளோனும் சுகதேகியு முணரக்கூடியது. சிறியோர்களும் பெரியோர்களு மறியக்கூடியது. கற்றவர்களுங் கல்லாதவர்களுந் தெரியக்கூடியது. விசாரிணைக்கொண்ட சகல மனுக்களையும் மெய்ஞ்ஞான சுகத்துக்குக் கொண்டுபோகப்பட்டது. அறிவிற் சிறந்தோரால் நன்குமதிக்கப்பட்டது. சருவ துக்கங்களையும் நிவர்த்திக்கக்கூடியது, யாதொரு துன்பமுமின்றி சுகவழியே சென்று வீடடையக்கூடியது. வேண்டுதல் வேண்டாமை யென்னும் மத்தியபாதையை யுடையதுமாகிய மெய்யறமாம் புத்ததன்மத்தை வாழ்த்துவோம்.

### மூன்றவது சங்கநிதி.*

ஆதிபகவனால் ஸ்தாபித்த புத்தசங்கத்தை விசுவாசிப்போம். புத்த சங்கத்தோர் சத்தியதன்மத்தைவிளக்குகின்றவர்கள் நன்னடக்கையை யாவருக்குந் தெரியச்செய்கின்றவர்கள் சகலரையும் சத்தியதன்மத்தின்படி நடக்கும்படியாகப் போதிக்கின்றவர்கள் தாங்களும் அந்த சத்திய தருமத்தின்படி நடந்துக்காட்டுகின்றவர்கள் அவாக்களை யறுக்கும் ஆண்மையுடையவர்கள் அரசர்முதல் குடிகள்வரையும் சமதிருஷ்டியுள்ளவர்கள் நானென்னும் அகங்காரத்தை வெல்லும் ஆயுதத்தைக்கொண்டவர்கள் நீதியையும் நெறியையும் தாகமாகக் கொண்டவர்கள் ஒழுக்கத்தை புசிப்பாகவுண்டவர்கள் புத்தசங்கத்தோர் விருப்பும் வெறுப்புமற்றவர்கள் சகலராலும் போற்றி வணங்குதற்குப் பாத்திரமுடையவர்கள். ஆதலின் புத்த சங்கத்தை வாழ்த்துவோம்.

### சங்க நிபந்தனை.

எண்குணத்தான் வாரணாசியிலுள்ள சங்கத்தோர் யாவரையும் வரவழைத்து ஓ! சகோதிரர்களே! உங்கள் கூட்டத்தார் † ஐந்துவகைப்பெயரால் அழைக்கப்படுவார்கள். அதாவது:—மகட பாஷையில் (சமணரென்றும்) சகட பாஷையில் (சிரமணரென்றும்) திராவிட பாஷையில் (பறுமக்

---

* மணிமேகலை.-புத்ததன்ம சங்க மென்னு முத்திர மணியை மும்மையில் வணங்கி.

† சீவகசிந்தாமணி.-உறுதிமுன் செய்ததின்றி யொழுகினே னென்று நெஞ்சின், மறுகனீயற்றோடார்வம் விட்டிடு மாணவச்சத், திறுகலீயிறைவன் சொன்னவைம்பத வமிர்தமுண்டாந், பெறுதிநற்கதியையென்று பெருநவை யகற்றினானே.

அருங்கலைச்செப்பு. — சங்க நிபந்தனைப் பத்து. சுத்த வால வறிவை வளர்த்தல் உத்தமக்களுணர். உதிரசுகத்தி னுறத்தை யறுத்தல் விதரண மக்க ளறம். தெள்ளவுணர்ந்தோர் தெந்நூலீதல் உள்வீழி மக்கள்நிலை. மெஞ்ஞானத்தின் மிகுநிலையாற்றல் விஞ்ஞைமக்கட்டிரள். அந்தணபூத வறவோனுதல் ஐந்திர மக்கட்சுகம். தூயவாடை சிறுமகற்கீதல் ஆயதுற விலர்க்காம். பொன்னிற வாடைத் தறவோர்க்கீதல் நன்னுடற் போர்வையதாம். முற்பகலுண்டியுண்டு விழித்தல் நற்பகலிரவறு மெய். மணப் பெருக்க மாரிகாலந் தானக் கூட்டரவாம். ஒருவருக்கொருவ ருள்ளக் குற்றந்திரு வுளமகற்றித்தெளி.

களென்றும்) வழங்கும் சற்சங்கத்தோருள் உத்த மக்களென்றும், விதரண மக்களென்றும், உள்ளிழி மக்களென்றும், விஞ்ஞை மக்களென்றும், இந்திர மக்களென்றும் ஐவகையோருண்டு.

அவர்களுந் தங்கள் துற்சங்கங்களாகும் பொய்யை மெய்யென வழங்குங் கூட்டத்தை விடுத்து, கள்ளை யருந்தி மதிமயங்கிநிற்குங் கயவர் கூட்டத்தை விடுத்து, அன்னியர் பொருளை யபகரிக்குங் கள்ளர் கூட்டத்தை விடுத்து சருவ சீவர்களையுங் கொன்று புலால் புசிக்கும் புலையர் கூட்டத்தை விடுத்து காமிய இச்சையைப் பெருக்கி அன்னியர் இஸ்திரீகளையும் அக்குடும்பத்தையுங் கெடுக்கும் அற்பர் கூட்டங்களையும்விடுத்து ததாகதர் சற்சங்கஞ்சேர விரும்புவார்களாயின் ;

ஐந்து வயதுள்ள சிறுவர்களையுஞ் சிறுமிகளையும் வெள்ளை யாடை யுடுத்தி வியாரங்களில் விடுத்து கல்வி விருத்திச்செய்து தெளிவடைந்து மநுகுல ஒழுக்கமுஞ் சீரும் உணர்ந்து சிறுவர்களுக்கு பதினாறு வயதுஞ் சிறுமிகளுக்குப் பத்துவயதும் முடிந்தவுடன் அவரவர்கள் குடும்பங்களிற் சேர்த்து பஞ்சசீல ஒழுக்கத்திற் பழகும்படி யாக்கியாபித்தல் வேண்டும். இவர்களை 1-வது. உத்தமக்க ளாவர். அச்சிறுவர்களுஞ் சிறுமிகளும் குடும்ப துன்பத்திற் சேராமல் சற்சங்கத்தைச் சார்ந்து சுகமடைய விரும்புவார்களாயின் புருஷர்களுக்கு வேறு வியாரமும், பெண்களுக்கு வேறு வியாரமு மமைத்து சிறுவர்களுக்கு இருபது வயதளவுஞ் சிறுமிகளுக்குப் பதினாறு வயதளவும் உள்ள ஒழுக்கங்களையும் நெறிகளையும் ஆராய்ந்து திரிகரண வமைதி காணுமாயின் சற்சங்கத்திற் சேர்த்து மனமாசு துற்குணத்திலும் துற்செயலிலும் விடுத்து தேகத்தைப் பெருக்கி மாளாப்பிறவிக் காளாகாமல் பொன்போன்ற சுயம்பிரகாச வமைதியி னின்று பிறவியறுக்கு மடையாள சிறுமஞ்சளுஞ் சிறுசிவப்புங்கலந்த துவராடை யளித்து தேகமுழுவதும் மறைக்கச்செய்து * சிரமுடியகற்றி நான் அரசபுத்திரனென்னு மமதையும் குரு புத்திரனென்னுங் கர்வமும் பிரபு புத்திரனென்னும் பெருமையுங்கொள்ளாது இராகத் துவேஷ மோகங்க ளற்று தன்னடக்கமும் அமைதியு முண்டாவதற்கு பிச்சாபாத்திர மீய்ந்து வீதிகளிலுள்ள வீடுகடோறுஞ் சென்று வாயற்படியினின்று உத்த மக்கள் வந்திருப்பது குடும்பிகளுக்குத் தெரியவும் அவர்களும் பஞ்ச மந்திரங்களை மறவாமல் அநுட்டித்துவரவும் பஞ்சசீல ஜாக்கிரதா பஞ்சசீல ஜாக்கிரதா பஞ்சசீல ஜாக்கிரதாவென்று மூன்று சத்தமிட்டு பேசாமலிருக்கவேண்டியது.

இச்சங்கதிகளைக் குடும்பிகளுக்கு மறிக்கைச்செய்து உத்தமக்கள் ஜாக்கிர சத்தங் கேட்டவுடனே அன்னமளித்து அநுப்பிவிடும்படி உத்திரவு செய்யவேண்டியது † உத்தமக்கள்பிச்சாபாத்திரத்திற் கொண்டுவந்த அன்னத்தை ஐம்மக்களும் புசித்து மிகுதியை ஏழைகளுக்கும், மற்று சீவராசிகளுக்கும் பரிமாறிவிடவேண்டியது.

---

* ஷை நூல்.-அரசபுத்திரர் சங்கஞ்சேருங்கால் சிரமயிர் களைதல். திருந்திய கீழ்த்திரைநோக்கிசெல்வனே யிருந்ததோரிடிக்குரச் சிங்கம் பொங்கிமேற், சுரிந்த தன்னுளைமயிர் துறப்பதொத்தன, னெரிங்கெழுமிளஞ்சுட ரிலங்குமார்பினன்.

† ஷை நூல்.—அகலேந்தி, அறமோதி, பிச்சையன்ன மேற்றல். அம்பொற்கலத்து வடபாலமர்ந் துண்ணுவரிவை யந்தோ, வெம்பிப்பசிநலிய வெவ்வினையின் வேரூயோ ரகல்கையேந்திக், கொம்பிற் கொளவொசிந்து பிச்சையெனக் கூறிநிற்பாட் கண்டு, நம்பன்மின் செல்வ நமரங்கா ளல்லறமே நினைமின்கண்டீர்.

• எவ்வகைப் பதார்த்தங்களேனும் அன்னமேனுங் கொஞ்சமும் அதிகமு மில்லாமல் முற்பகல் உதயாதி முதல் பதினைந்து நாழிகைக் குள்ளாகப புசித்துத் தீறல் வேண்டும்.

பிற்பகல்முதல் இரவுமுழுவதும் ஜலபானமன்றி மற்றக் கடினவஸ்துகளைப் புசிக்கலாகாது. [illegible] மழைகாலங்களில் வியாரங்களை விட்டு யாத்திரை போகலாகாது. குடும்பிகளை * அட்டமி, பௌர்ணமி, அமாவாசை இம்மூன்று நாளும் வியாரத்துள் வரவழைத்து பஞ்சசீலம் நிலைக்கச் செய்யவேண்டியது. இவ்வகை சுஷ்கச் செய்யவேண்டிய காரணம் யாதென்பீரேல் அதிக புசிப்பை விரும்பியகாலத்தி லுண்டாய மமதையும், முற்றும் புசிப்பை யகற்றியிருந்தகாலத்தி லுண்டாய வமைதியையும் ததாகத ருணர்ந்தவராதலின் அதிகமுங் கொஞ்சமு மில்லா மிதாகாரத்தில் நிலைக்கச் செய்தார். அத்தகைய மிதாகாரத்தை அதிகமுங் கொஞ்சமு மில்லாமல் முற்பகல் முழுவதும் புசித்து பிற்பகலு மிரவும் யாதொரு கடின வஸ்துக்களும் புசியாது ஜலபானமட்டிலும் அருந்தவேண்டிய காரணம் யாதென்பீரேல் மிகு புசிப்பால் மந்தான்மத்த முண்டாம் அதி நித்திரைகொண்டு காமவிடனுசிக்கி அயர்ந்துபோவார்கள். ஆதலின் இரவு புசிப்பை தவிர்த்து நல்விசாரிணையிலும் சுகத்தியானத்திலும் விழித்திருப்பார்களாயின் இரவுபகலற்ற விடத்தில் தூங்காமற் றூங்குவார்கள். இவர்களையே 2-வது விதரண மக்களென்னப்படும்.

இவர்கள் அதிதீவர விதரணக்குறைவால் தூங்காமற்றூங்கும் நிலை தவறி நோக்கி நோக்கி நழுவியும், விழித்து விழித்து பேருறக்கங்கொள்வார்களாயின் தன்னை மறந்து பிறவிக்காளாவார்களென்றுணரும் அறஹத்துக்கள் விதரணமக்கள் அதிதீவர நோக்கற் றிருப்பதற்கிரங்கி உபநயனமாம் உள்விழியைத் திறந்து ஊனக்கண் பார்வையைத் தவிர்த்து ஞானக்கண் பார்வையிலிருக்கி உபநயனம்பெற்றவனென் றுலகோ ரறிந்து வேண்டிய வுதவிபுரிந்துவருதற்கு மதாணி † பூணூலென்னும் ஓர் அடையாளந் தரித்து கடைத்தேறச் செய்யவேண்டும். இவர்களையே 3-வது உள்விழிமாக்க ளென்னப்படும்.

‡ இத்தகைய உள்விழிப்பார்வையால் சதாவிழிப்பாம் ஞான நித்திரையில் தசநாடிகளுந் தசவாயுக்களுமடங்குங்கால் தசநாதங்களாம்சுரமண்டல தொனிக ளெழும்பும். அத்தொனியைநோக்கி நிற்பார்களாயின் நித்திரைக் கிழுத்து மாளாப் பிறவிக் காளாகும் அத்தொனியில் அவாக்கொள்ளாது [illegible] உட்பார்வையி லிருப்பார்களா

* பிங்கலநிகண்டு.-[illegible] வரிசையிற் பூணுநூற் பூணந்த வி[illegible]. காப்புக்கு முன்னெடுக்குங் கடவுள்தான்மாலேயாகும், பூப்புனை மலரின்செல்வி புனைபவனுதலானும், காப்பவனுதலானுங் கடவுளா முதல்வனுகி வாய்ப்பதாம தாணி பூநூல் வரிசையிற்புனைதலானும்

† சீவகசிந்தாமணி.-அட்டமீ, அமாவாசி, பூரணவாசி, ஓடுக்கம். ஓவாவிரண்டுவ்வு மட்டமியும் பட்டினிவிட்டொழுக்கங்காத்த, ருவாததவனென்றூர் தண்மதிபோன் முக்குடைக்கீழ் தாதைபாதம், பூவேபுனைசாந்துஞ் சுண்ணம் விளக்கிவற் [illegible]னைதனுரு, மேவா விலைபிறவும் பூசனையன் றீண்டியநூல் கரைகண்டோமே

‡ மேடி நிகண்டு.-வித்தையர் சாரணரோபோற் [illegible] யகை. நீரினிற்பூவில் வானில் நினைந்திட மொதுங்குகின்ற சாரண ரெண்மராவர் சமணரிற் சித்திபெற்றோர்.

சீவகசிந்தாமணி.—நலத்திரு மடமகணயந்த தாமரை, நிலத்திருந் திருசுடர் நிமிர்ந்து செல்வபோ, நலப்பருந் தவத்தினு லோகரு சாரணர், செலத்திரு விசும்பொளி சிறந்த தென்பவே.

பின் எண்பத்தொன்பது சித்தும் இயல்பிற் றோன்றுஞ் சாரணர்களாகும் இவர்களையே 4-வது விஞ்ஞைமக்க ளென்னப்படும்.

இவ்விஞ்ஞையாம் சித்துக்களை விரும்பி வீண்செயற்களிற் றங்களை ஏனைய மனுக்கள் புகழவேண்டிய மகிழ்ச்சியிலிருப்பார்களாயின் மனுக்களின் துற்கன்ம பீடிதரோகங்கட் சார்ந்து இவர்கள் தேகசுகத்தைக்கெடுப்பதுடன் நற்கன்மதான சுகங்களுங் கெட்டு சித்துக்களின் டம்பமே மறுபிறவிக் காளாக்கிவிடும்.

ஆதலின் விஞ்ஞைமக்கள் இயல்பினு லுண்டாகுஞ் சித்துக்கள் நீங்கலாக ஏனையோர் மகிழ்ச்சியைநோக்கி டம்ப சித்துக்க ளாடாது சுத்தவிதயமாம் மனக்களங்குகளையகற்றி கண்டவிடம் மனம்போகாமலும், முகர்ந்தவிடம் மனம்போகாமலும், கேட்டவிடம் மனம்போகாமலும், உருசித்தவிடம் மனம்போகாமலும், பரிசித்தவிடம் மனம் போகாமலும் தண்மெயாம் குளிர்ந்த நிலையில் பொறிவாயி லைந்தினையு மவித்து சருவசீவர்களைத் தங்களுயிர்கள்போலும் தங்களா லாதரித்து சீர்பெறவேண்டியசீவர்களென்றுங் கருதி உண்மெயுணர்ந்து இறப்பும் பிறப்புமற்று மெய்யறத்தி நின்று அறஹத்துக்களாய் விளங்கியிருக்கும் இவர்களை 5-வது ஐந்திர மக்களென்று கூறப்படும்.

சங்கத்தோருள் ஐவகை சாதனரும் மிக்க ஜாக்கிரதையால் சதா விழிப்பினின்று மக்களென்னும் ஆறாவது தோற்றங் கடந்து தேவர்களென்னும் ஏழாவது தோற்றமுண்டாயினும் ஜாக்கிரதா நிலையற் றிருப்பரேல் அங்குந் தீய நிலை தோன்றும். ஆதலின் மிக்க ஜாக்கிரதையோர் விழிப்பே மேன்மெய்யாம் சுயம்பிரகாச ரூபத்தைப் பெறுமென்றோதி சங்கத்தோர் ஐவகைச் சாதன கட்டளைகளைப் பூர்த்திசெய்தார்.

* ஐந்திர மக்கள் ஐம்பொறிகார்த்து ஏழாவது தேவதோற்றம் பெறினும் ஜாக்கிரதையி லிருக்கவேண்டுமென்பதாம்.

---

*சீவகசிந்தாமணி.—ஒழுக்கத்தினின்று ஐம்பொறிகாத்தலே வீட்டின்பந்தரும்.— ஒன்றாய வூக்கவேர் பூட்டி யாக்கைக்கெறுவுழுது, நன்றாய நல்வரகுச் செந்நெல் வித்தி யொழுக்க நீர், குன்றாமற் றாங்கொடுத் தைம்பொறியின் வேலிகாத்தோம்பின், வென்றார் தம் வீட்டின்பம் விளைக்கும் விண்ணோ ருலகின்றே.

நாயனார் திரிக்குறள்.—எழுபிறப்புந்தீயவை தீண்ட பழிபிறங்காப், பண்புடை மக்கட் பெறின்.

## எட்டாவது

# சங்கங்களின் ஸ்தாபன காதை.



காசி விசுவநாதன் வாரணாசியில் தன்ம சங்கங்களை நாட்டி சங்க நிபந்தனைகளையும் ஊட்டி திரிவேத வாக்கியங்களாகும் திரிபீடங்களையும் அதன் உபநிட்சயார்த்தங்களாகும் உபநிடதங்களையும் சங்கத்தோ ரிதயங்களிற் பதியச்செய்து சதானந்த நிலையை விளக்கிவருங்கால் அத்தேசவாசியாம் ஓர் சிறந்த வியாபாரியின் புத்திரன் யட்சனென்பவனிருந்தான். அவனோ அவன் தந்தையால் சேகரித்த பெருந்திரவிய சம்பத்திருந்தும் தனக்கோர் மனவமைதியும் ஆறுதலு மில்லாமல் பொருளை சேகரிக்கும் பேராசையால் பலவகை விரோதங்களும் மனசஞ்சலங்களும் பெருகுவதையுணர்ந்து ஓர்நாள் நள்ளிரவி லெழுந்து வீட்டைவிட்டு காசி விசுவேசனாம் பகவன் தங்கியிருக்கு மிடத்திற்குச் சென்றான்.

செல்வச் சிறுவன் தன்னை நாடி தூரத்தில் வருவதைக் கண்ணுற்றார். அவனும் பகவன் அருகிற் சென்று வணங்கி ஐயனே, யான் பெருத்த திரவியசம்பத்துடையோன் மைந்தனாயிருந்தும் சகிக்கமுடியா பெருந்துக்கத்தி லாழ்ந்து தவிக்கின்றேன். இஃது யாது உபத்திரவமென் றலறினான்.

அதைக்கேட்ட பகவன் யட்சனைநோக்கி குழந்தாய்! உனக்குவேண்டிய திரவியசம்பத் திருந்தும் மாளா துக்கந் தோன்றிய காரணம் யாதென்றார். அதைக்கேட்ட சிறுவன் மெய்யனை வணங்கி பெரியோய்! எனது தந்தை திரவியத்தை சேகரிக்கவும் அதை பாதுகாக்கவும் விருத்தி செய்யவுமுள்ள காலத்தில் இரவும் பகலும் பெருமூச்சிறைந்து புரண்டிருப்பதைக் கண்டிருக்கின்றேன். ஆயினும் அதன்காரணம் எனக்கு விளங்காமலிருந்தது.

என் தந்தையார் சேகரித்த திரவியங்களையும் அதன் பாதுகாப்பையும் விருத்தியையும் என்னிடம் ஒப்படைத்துவிட்டதுமுதல் அவர் பெருமூச்சும் புரட்டலும் நின்று சுகநித்திரையிலிருக்கின்றார். யானோ திரவிய சேகரிப்பாலும் அதன் பாதுகாப்பாலும் விரயத்தினாலும் மாளா துக்கதிலும் பெருமூச்சிலும் புரட்டலிலும் நின்றலறி உம்மை வந்தடைந்தேனென்றான்.

அதைக்கேட்ட பகவன் யட்சனைநோக்கி சிறுவனே! இவ்விடத்தில் யாதொரு துக்கமுமில்லை, இவ்விடத்தில் யாதொரு உபத்திரவமும் இல்லை. என்னை நாடிவந்த உனக்கு சத்தியதன்மமாம் அழியா திரவியத்தைக் கொடுக்கின்றேன். அதை சிதலழிக்காது கள்ளர்கள் அபகரிக்கமாட்டார்கள். அதன் சேகரிப்பால் உன் பெருமூச்சடங்கி புரட்டல் நின்று துக்கத்திலும் உபத்திரவத்திலும் நிலைக்காமல் மீட்குமென்றார்.

ததாகதர் திருமொழியைக் கேட்ட யட்சன் மனோதிருப்தியடைந்தான். துக்கமுமில்லை விசாரமுமில்லையென்ற பகவனுடைய வார்த்தைகள் அச்சிறுவன் மனக்கவலையைப் போக்கியது. உள்ளத்தில் ஆறுதலடையும்படிச் செய்தது. அவ்வானந்தத்தால் அருகனென்றுணர்ந்து வருகிலுட்கார்ந்தான்.

பகவன் சிறுவனைநோக்கிக் குழந்தாய்! உன் தேகம் வளர்ந்து சுகதேஜசிலிருப்பதும் உன் தாதை தேகம் சுஷ்கி நரைதிரைகொண்டிருப்பதைக் கண்டையோ காணவில்லையாவென் றுசாவினார்.

அதைக் கேட்ட யட்சன் பெரியோய் எனது தாதை கண் பஞ்சடைந்து தேகந் தளர்ந்து சருமஞ் சுருங்கி முதுகும் வளைந்திருப்பதைக் கண்டேனென்றான்.

குழந்தாய்! அதே தோற்றத்தை உன் தேகமும் அடையுமா வடையாதா வென்றார்.

அதைக் கேட்ட யட்சன் இன்னுந் திகைத்து ஐயனே! என் தேகத்தையும், என் தந்தை தேகத்தையும் என் தாதை தேகத்தையும் நோக்கிப் பார்க்குங்கால் ஓர் புட்பமானது மொக்கிட்டு மலர்ந்து மணம் வீசி காய்ந்து மடிவதுபோல் என் தேகமும் மடியும்போற் காணுகின்றேனென்றான்.

மலரின் மணமானது சகலருக்குஞ் சுகந்தத்தை வீசி ஆனந்தமுறச் செய்வதைக் கண்டாய். அதுபோல் உன் தேகத்தில்வீசும் சுகமணம் யாதேனுமுண்டோ வென்றார்.

ஐயனே என் தேகத்தில் மலமூத்திராதிகளின் துற்கந்தங்களையும் வாய் கொப்புழ் இவைகளின் துற்கந்தங்களையும் முகருகிறேனன்றி நற்கந்தம் ஒருநாளுங் கண்டிலே னென்றான்.

தன்னிற்றானே தோன்றி வளர்ந்த புற்பூண்டுகளிற்றோன்றும் புஷ்பங்களின் மணம் சகல துன்மணங்களையும் போக்கி நன்மணம் வீசுங்கால் சிரேஷ்டமுற்ற மநுக்களாம் தாய்தந்தையர்சேர்ந்து ஜெநித்த உனது தேகத்தில் மணமில்லாமற் போயதென்னோ வென்றார்.

ஐயனே! அவற்றை யான் இதுவரையுங் கண்டதுமில்லை கேட்டதுமில்லை முகர்ந்ததுமில்லை யென்றான்.

குழந்தாய்! புற்பூண்டுகளில் தோற்றுவது புஷ்பமணமும் பிண்டங்களில் தோற்றுவது பிரம மணமுமாம். அப்பிரம மணத்தை முகர்ந்தவன் துக்கத்தினின்று விடுபடுவான். பிணியினின் றகலுவான். ஆறுதலில் நிலைப்பானென்றார்.

அதைக்கேட்ட யட்சனெழுந்து அருகனை சரணாகதி யடைந்து ஐயனே! இவ்வாரணாசியிலுள்ள ஒரு மநுக்களிடத்தேனும் அம்மணத்தைக் காணேன். எல்லாமுணர்ந்த உம்மிடத்தே யம்மணமிருக்கக் கண்டேன், என் மனக்கூற்றுக்கள் யாவையும் விண்டேன். சதா துக்கத்தை யகற்றி யானந்தங்கொண்டேன். உமது அளவுபடா சத்தியதன்ம வமுதத்தை யுண்டேனென்று கூறி உலகத்தின்மீது கொண்டுள்ள விருப்பைத் தவிர்த்து மெய்யுணர்வுற்று பரிசுத்த ஞானமாங் குளிர்ந்த நிலையினின்று தன் தேகத்திலில்லா மணம் அணைந்துள்ள பட்டாடைகளிலும் இரத்தினாபரணங்களிலும் உண்டோவென்று நோக்கினான்.

அவ்வாடைகளிலும் ஆபரணங்களிலும் சேர்க்கைமண முள்ளதேயன்றி இயர்க்கைமண மில்லாததைக் கண்டான். டம்பமென்று விண்டான். நாணத்தைக் கொண்டான்.

இத்தகைய நாணங்கொண்ட யட்சன் பகவனைநோக்கி ஐயன்மீர் தமதுதேகத்தில் சிறப்புற்ற ஆடைகளில்லாமலும், விலையுயர்ந்த ஆபரணங்களில்லாமலு மிருந்தபோதினும் தாமரைப் புட்பம் மலர்ந்திருப்பதுபோல் உமது முகம் மலர்ந்திருப்பதும், புட்ப தேஜசு விளங்குவதுபோல் உமது விழியினால் தோன்றும் அன்பின் மிகுதியும், புட்பத்தின் வாசம் வீசுவதுபோல் உமது நாவினின்றெழும் அமுத வாக்கும் என்னைக் கவர்ந்து முன்னிருந்த பயத்தையும் அளவுபடா துக்கத்தையும் போக்கி என்னை ஆறுதலில் நிலைக்கச்செய்ததென்று கூறி நீதியாகும் ஆடையையும், நெறியாகும் ஆபரணங்களையும் விட்டு பொன்சுமக்கும் பூதமானேனென்றெண்ணி யேக்கமுற்றான்.

அவனுக்குள்ள ஞாணத்தை யுணர்ந்த காசி விசுவேசன் சிறுவனை நோக்கிக் குழந்தாய்! ஒருவனுடையதேகம் ஆபரணாதிகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தபோதினும் அவன் ஐம்புலன்கள் அடக்கப்பட்டிருக்கலாம். வெளித் தோற்றமானது அவனுடைய மனதையாயினும் அவன் செயலையாயினும் பாதிக்காது ஒரு சிரமணன் துவராடை யணிந்துக்கொண்டாலும் அவன் மனம் சமுசாரப் பற்றுக்களில் மூழ்கியிருக்கும்.

ஒருவன் ஆடையாபரணங்களைத் தவிர்த்து காட்டுக்குச் சென்று உலக யின்பத்தைத் தாவுவானாயின் அவன் உலகப் பற்றுடையவனேயாவான். மற்றொருவன் ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தபோதினும் அவன் உலக யின்பங்களைத் தாவாமலிருப்பானாயின் அவனே உலகப் பற்றுக்களை ஒழித்தவனாவான்.

உலகிலுள்ளோர் நானென்னும் அகங்காரத்தை யொழிப்பார்களாயின் இல்வாழ்பவர்களுக்குந் துறவிகளுக்கும் யாதொரு வித்தியாசமு மில்லையென்று கூறி சங்கத்தினின்று சாதிக்குஞ் சாதனங்களின் தெளிவையும் இல்லத்தினின்று சாதிக்கும் சாதனங்களின் வழுவையும் விளக்கியபோது யட்சன் சங்கத்தைச் சார்ந்தே சாதனம் பெறவேண்டுமென் றவாக்கொண்டான்.

அதனை யுணர்ந்த பகவன் யட்சனுக்குச் சங்க நிபந்தனைகளை யூட்டி சிரமுடிகழித்து காஷாயமீய்ந்து காவோடளித்து திரிமணிகளில் நிலைக்கச்செய்தார்.

அதன்பின் யட்சனுக்கு மெய்யறத்தை மேலுமேலும் விளக்கிவருங்கால் யட்சனுடைய பிதா வெளியில் வந்து நின்று ஐயனே! எனது மைந்தன் இவ்விடம் வந்ததுண்டோ வென்றான்.

அதை வினவிய பகவன் யட்சன் பிதாவை நோக்கி தாம் உள்ளேவாரும் உமது மைந்தனைப் பாருமென்று கூறினார். யட்சன்பிதா உள்ளே சென்று தமது மைந்தன் அருகிலுட்கார்ந்தும இவனே தனது மைந்தனென். றறியக்கூடாமலிருந்தான்.

ஆதிபகவனவ்வேளையில் மெய்யறத்தின் மார்க்கத்தையும் மெய்ப்பொருளின் விளக்கத்தையும் மெய்யின்ப சுகத்தையும் போதித்துவருவதைக் கேட்டுணர்ந்த யட்சனுடைய பிதா பின்வருமாறு சொல்லத்தொடங்கினான்.

ஐயனே, உமது மெய்யறப் பாதை மாட்சிபெற்றது. உமது மெய்ப்பொருள் விளக்கம் உலக மறியாதது. உமது மெய்யின்பப் பேறுதான் தானே யுணர்வதென்னும் முயற்சியில் நிலைத்தது. இவ்வரும் பெருந்தானத்தை யுலகோர்க் கீயும் யீசனும் புத்தரே எமதாசான். ஒழுங்கற்றிருக்கும் நீதிகளை ஒழுங்கடையச்செய்கின்றார். மறைந்திருக்கும் நீதிகளை வெளிப்படுத்துகின்றார். திசை தப்பி நடப்போருக்கு வழி காட்டுகின்றார். அஞ்ஞானிகளாங் குருடர்களுக்கு மெஞ்ஞானத்தின் விழியை யளிக்கின்றார். இருளிலிருக்கும் அறிவினர்களுக்கு வெளிச்சமாம் அறிவின் விருத்தி செய்கின்றார். ஆதலின் புத்தரிடம் யானடைக்கலம். அவர் தெரியச்செய்த சத்தியதருமத்தில் யான் அடைக்கலம். அம்மெய்யறத்தை தெரிந்துய்த்த சத்திய சங்கத்தில் அடைக்கலம். அடைக்கலம் புகுந்த வென்னை இன்றுமுதல் யான் உலகிற் றோன்றும் வரையில் என்னை யோர் சிஷியனாக வேற்றுக்கொள்ளவேண்டுமென் றடிபணிந்தான்.

இல்லற வாழ்க்கையிலிருந்து புத்த சங்கத்துள் சேர்ந்தவர்களுள் முதலானவன் யட்சனின் பிதா ஒருவனேயாம்.

இங்ஙனம் புத்தசங்கஞ்சார்ந்து காஷாயம் பெற்றுக்கொண்ட வர்த்தகன் தன்னைப்போல் தன்மகனுங் காஷாயந்தரித்து முகமலர்ந்திருப்பதைக்கண்டு குதூகலித்து மைந்தனைநோக்கி குழந்தாய்! உனது தாய் உன்னைக்காணாது வருந்தி பிரலாபித்திருக்கின்றாள் நீ வீடுசென்று உன் தாயாருக்குத் தேறுதற் சொல்லுமென்றான்.

இதைக்கேட்ட யட்சன் பகவனைப் பார்க்கவும் பகவன் வர்த்தகனை நோக்கி இப்போது தெளிந்த மனதுடனிருக்கும் யட்சன் மாதாவுடன் சென்று உலகப்பற்றை யடைந்து கலங்கிய மனத்தனாகுவானாயின் யாது செய்வீரென்றார்.

யட்சன்பிதா வதற்கு மாறுத்திரமாக மைந்தன் உம்மிடந் தங்கியிருத்தல் நலமெனக் கருதுவானாயின் தங்கியிருக்கட்டும். அவன் உலகப்பற்றை யொழித்த புநிதனாகுவானென்றான்.

அக்கால் பகவன் ஒடுக்கத்தா லமையுஞ் சுகத்தையும் விரிவாலுண்டாகுங் கேட்டையும் விளக்கி நீதியையும், நெறியையும், வாய்மெயையும் போதித்து அவ்விருவரையும் ஆற்றலடையச் செய்புங்கால் அவர்கள் குதூகலித்து பகவனை வணங்கி மாதவனே! தாமும் யட்சனும் மனைக்குவந்து புசிப்பெடுத்துக்கொண்டு எனதில்லாளுக்கும நல்லறத்தை நவிலவேண்டுமென்று விண்ணப்பித்தான்.

அவனன்பின் மிகுதியை யுணர்ந்த குருநாதன் எழுந்து காஷாயத்தால் உடல்முழுவதும் மூடிக்கொண்டு பிச்சாபாத்திரங் கையிலேந்தி யட்சன் வீட்டிற்குச் சென்றார்.

இவர்கள் வரவை யறிந்த யட்சனுடைய தாயும் அவன் மனைவியும் எதிர்நோக்கிவந்து பகவனை வணங்கி ஆசனமளித்து உட்காரச்செய்து வர்த்தகன் உத்திரவின்படி அன்னமளித்து அவர் புசித்து தீர்ந்தவுடன் மற்றுமுள்ள யாவரும் புசித்து அருகனைச்சுற்றி வணக்கவழியி லுட்கார்ந்து ஐயனே! உமது அளவுபடா சத்தியதன்மத்தை எங்களுக்கும் அளிக்கலாகாதோ வென்று விண்ணப்பித்தார்கள்.

அதைக்கேட்ட விமலன் யட்சன் மாதாவைநோக்கி அம்மா! உம்முடைய கணவனும், மைந்தனுங் காஷாயம் பெற்றுக்கொண்டதுபோல் நீங்களும் பெற்றுக்கொள்ள விருப்பங்கொண்டீர்களோ வென்றார்.

ஆம் ஐயனே என் றடிபணிந்தார்கள்.

அவ்வகை யடிபணிந்தோர் உள்ளங்களை யுணர்ந்த வள்ளல் அவர்களைநோக்கி அம்மே! உங்கள் கோறிக்கை யீடேறும். ஆயினும் ஆண்மெய்யிற்கும், பெண் மெய்யிற்கும் உள்ள பேதாபேதங்களை முதலாவது விளக்குகின்றேன். அதாவது :—

ஆண் மெய்யென்பது சகலரையும் ஆண்டு இரட்சிக்கும் புருஷனென்னப்படுவான். பெண் மெய்யென்பது சகலராலும் இச்சிக்கக்கூடிய இஸ்திரீ யென்னப்படுவாள். இவ்விருவருள் ஆண் மெய் வீரிய வான்ம வடிவமென்றும் பெண் மெய் பேதை யான்மவடிவமென்றுங் கூறப்படும்.

பேதை யான்ம தோற்றமுள்ள நீங்கள் சகலராலும் இச்சிக்கக்கூடிய வடிவுள்ளவர்களாதலின் நீங்க ளொவ்வொருவரும் நாணம், அச்சம், மடம், பயிர்ப்பென்னும் நான்கு கற்பின் தன்மத்தில் நிலைக்கவேண்டும். இந்நான்குவகைக் கற்பின் தன்மத்தையே நல்லாடைகளாகவும், நல்லாபரணங்களாகவும், நன்மணமாகவும், நல்லுணவாகவு மெண்ணி கற்பின் நான்குபாத தன்மத்தில் நடக்கவேண்டும்.

பெண்மெயுற்றோர் :

1-வது. *(நாணமென்னுங் கற்பின் தன்மம்) அன்னியபுருஷர் யாரைக்கண்டபோதிலும் நாணமுற்று தலை கவிழ்தலும், தனது முகத்தையும், தேகத்தையும் அன்னிய புருஷர்கள் கண்டார்களேயென்று வெட்கமடைதல்வேண்டும்.

2-வது. (அச்சமாங் கற்பின் தன்மம்.) தனது கணவனும் மைந்தர்களும் இல்லத்தி லில்லாதபோது அச்சவாழ்க்கையில் இல்லறம் நடாத்துதலும், தனியே வெளியிற் போகுங்கால ஓர் சிறுவனையேனுங் கையாதாரவுகொண்டு செல்லலும், அன்னியபுருஷர் முகங்களைநோக்குதற்கு பயப்படுதலும், தன் கணவனே தன்னை யாண்டிரட்சிக்கும் ஆண்டவனாதலின் அவனுக்கு வேண்டிய பதார்த்தத்தைவட்டித்தலும், வேணபுசிபபை யளித்தலும், ஆன நித்திரை படுத்தலுமாகிய செயல்களில் அவன் மனங் கோணாது திருப்தியுறுமளவும் அச்சத்தில் நின்று ஆனந்திக்கவேண்டும்.

3-வது. (பயிர்ப்பென்னுங் கற்பின் தன்மம்.) அன்னிய புருஷரைக் காணுமிடத்து வெறுப்படைதலும், தனக்குக் கிடைத்துள்ள ஆடைகளில் திருப்தியுற்று அன்னியர் சிரேஷ்டவாடைகளில் வெறுப்படைதலும், தனக்குள்ள வாபரணங்களில் போதுமென்று திருப்தியுற்று அன்னியர் சிரேஷ்ட வாபரணங்களில் வெறுப்படைதலும், தன் கணவனால் கிடைத்துவரும் புசிப்பில் போதுமான திருப்தியுற்று அன்னி

---

* அருங்கலச்செப்பு.

கற்பின் நான்கு தன்மபாதப பத்து.— பகவனுரைத்தப் பெண்ணறநான்கி, லக முத நாணத்துறை அச்சம் பயிரப்பு மடமாற் கற்பி, னிச்சை முதலென் றறி. அன்னிய புருட ரங்கங்காண, லுன்னிய நாணநிலை. தனித்து நிற்றல் தனிவழிச்சேர, லினித்த வச்சத்திறை. புருடன் தன்னைப் போற்றி பயற்றல், அருள்சேரச்சத்தவம். பெண்மை யொடுக்கிப் பேதைமை யாற்றல், உண்மெய் பயிர்ப்பின் வழி. கணவன் வாக்கைக் கடவா தொழுகல், மணமெய் யொடுக்க நிலை. யீருடலொத்து வொருமன வாழ்க்கை, பேருடலொடுக்க பலன். சுற்றங் கடிந்து கொழுனனோ டொழுகல், உற்றவொடுக்க நிலை. ஒக்க விரத மைந்தரங் காக்கல், தக்க கீர்த்தி வழி.

யர் சிரேஷ்ட புசிப்பில் வெறுப்படைதலுமாகிய செயலுற்று தனக்குக் கிடைத்தவரையில் திருப்த்தியடைதல் வேண்டும்.

4-வது. (மடமென்னுங் கற்பின் தன்மம்), தனது கணவன்வாக்குக்கு மீறாது நடத்தல் முதலொடுக்கம். பெரியோர்களிடம் அடங்கி வார்த்தை பேசுதல் இரண்டாமொடுக்கம். கணவனுக் கெதிர்மொழி பேசாதிருத்தல் மூன்றாமொடுக்கம். கணவனிடம் எக்காலு மிருதுவான வார்த்தை பேசுதல் நான்காமொடுக்கம். அன்னிய புருஷர்கள் தன்னைப் பார்க்காம லொடுக்கிக்கொள்ளுதல் ஐந்தாமொடுக்கம். அன்னியர் மெச்சும் ஆடையாபரணங்களை யகற்றி தன்கணவன் கண்குளிரும் அலங்கிருதத்தில் நிற்றல் ஆறாமொடுக்கம். தங்கணவன் தேகமும் தன்தேகமும் வேறாகத் தோன்றினும் அன்பும் மனமும் ஒன்றாய் ஒத்துவாழ்தல் ஏழாமொடுக்கம். கணவனுக்குப் பின் புசித்தலும், கணவனுடன் புசித்தலும் எட்டாமொடுக்கம். கணவனுக்குப்பின் சயனித்தலும், உடன் சயனித்தலும் ஒன்பதாமொடுக்கம். பஞ்சசீலத்தின் ஒழுக்க விரதங் காத்தல் பத்தாமொடுக்கம் என்னப்படும்.

இத்தகையக்கற்பின் † நான்கு தன்மவேலிக்குள் அடங்கிநிற்பீர்களாயின் உலகில உங்களைப்போன்ற இஸ்திரீகள் யாவரும் உங்கள் பொய்யா விரதத்திறகுப் போற்றிசெய்வார்கள். கொல்லா விரதத்தைக் கொண்டாடுவார்கள். களவா விரதத்தில் கண்களிப்பார்கள். மயங்காவிரதத்தில் மகிழ்ச்சியடைவார்கள். அன்னியர் முகம்பாரா விரதத்தில் ஆனந்தமடைவார்கள்.

இத்துடன் கணவன்சொற் கடவா காட்சியையும், மிருதுவார்த்தைகளின் மீட்சியையும், சமயோசிதமாகத் தனது கற்பைக் காத்துக்கொள்ளும் சூட்சியையும், மனமொன்றாகக் கணவனுடன் ஒத்துவாழு மாட்சியையுங் காண்பாரேல் உலகத்திற் றோன்றியுள்ள இஸ்திரீகளில் இவர்களே உத்தமிகளென்றும், இவர்களே சுகசீவிகளென்றும், இவர்களே பெண்மணிகளிற் கண்மணிகளென்றும் போற்றி ஜெயபோற்றி செய்வார்கள்.

நீங்களும் உங்களுக்குள்ள கற்பின் விரதகாப்பிலும் சீலகாப்பிலுந் தலைவனுந் தலைவியும் மனமொத்து வாழும் ஒருமையிலும் முத்தி மோட்சமென்னும் நிர்வாணசுக மடைவீர்களென்றார்.

அருகன் அருள்மொழியைக்கேட்ட மங்கை மடந்தை பேதை பெதும்பையென்னும் இஸ்திரீகள் யாவரும் பரமானந்தமுற்று, ஐயனே! என்றுமழியா மெய்யனே! உமது சத்தியதன்மம் மாட்சி பெற்றது. உமது தீகையோ அளவுபடாதது. உமதுருவோ ஓரன்பாயது. உமது மிருதுவாகிய வாக்கோ ஓரமுதாயது. உமது சாந்தமோ எம்போலியர்க்கு நிழலாயது. பரிசுத்தமாய புத்தரே! எம்முடைய ஆசான் ஒழுங்கற்றிருக்கும் நீதியை ஒழுங்கடையச்செய்கின்றார். மறைந்திருக்கும் ஒழுக்கங்களை வெளிப்படுத்துகின்றார். திசைதப்பிப்போன மிதப்பர்களுக்கு வழி

---

† நிகழ்காலத் திரங்கல்.—எண்குணத் தானேனது மேதநாற் கற்புநிலை, பெண்மை யருந்ததிபாற் பெற்ற ததிசயமே. பெற்றவர்பாற் பெற்றார் பேறுநாற் கற்புநிலை, உற்றவொளிவடமீ னேம்ப லதிசயமே. ஓம்புங்கடவு ளுற்றக் கணவனென்றே, தேம்பாற் பணிமெய்ச் செய்ய லதிசயமே.

காட்டுகின்றார். அஞ்ஞான இருளிலிருக்கும் அறிவீனர்களுக்கு மெய்ஞ்ஞான வெளிச்சத்தைக் காட்டுகின்றார்.

இத்தகைய அருளறமூட்டும் அருகனும் புத்தரிட மடைக்கலம். அவர் தெரியச்செய்த சத்தியதன்மத்தி லடைக்கலம். அவர் ஸ்தாபித்த சத்திய சங்கத்தி லடைக்கலமென்று வணங்கி யாங்கள் ஜீவித்திருக்கும்வரையில்தங்கள் சிஷ்யர்களாக அங்கீகரிக்கவேண்டுமென்று வணங்கிக்கொண்டார்கள்.

இல்லறத்தைச்சேர்ந்த இஸ்திரீகளில் அவலோகிதராகும் புத்தபிரானிடங் கற்பி னறங்கேட்டு பிக்குணி சங்கத்திற் சேர்ந்தவர்களில் ஆதியாகச் சிரமயிர் கழித்து காஷாயம் பெற்றுக்கொண்டவர்கள் யட்சனுடையத் தாயும் அவன் மனைவியுமேயாம்.

வாரணாசியில் மிக்க தனவந்தர்குடும்பங்களில் யட்சனுடைய சிநேகிதர்களாகும் விபலன், சுவாகு, புண்ணிய சித்தன், கவாம்பி என்னும் நால்வ ரிருந்தார்கள்.

அவர்கள் நால்வரும் யட்சனுடைய சங்கதிகளைக் கேள்வியுற்று மிக்க வானந்தமுடையவர்களாய் நமது யட்சன் விவேக விருத்தியிலும் வியாபார விருத்தியிலுந் தேர்ந்தவன். மீதன்றி சாந்தத்திலும் பகுத்தறிவிலு மிகுத்தவன்.

இத்தகைய குணநிறைந்த யட்சன் சிரமயிர் கழித்து காஷாயம்பெற்று பிச்சா பாத்திரங் கையி லேந்திக்கொண்டு புத்த சங்கத்திற் சேர்ந்துவிட்டானென்றால் அஃது சாமான்ய சங்கமாயிராது, சிரேஷ்ட சங்கமாகவே யிருத்தல்வேண்டுமென்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு யட்சனிடஞ் சென்றார்கள்:

யட்சனும் பகவனை வணங்கி எங்களையனே! இந் நால்வரும் எனதன்பு மிகுத்த நேயர்கள். இவர்களுக்குத் தங்களளவுபடா தன்மத்தைப் போதித்து புனிதர்களாக விளங்கச்செய்யவேண்டுமென்று வருந்தினான்.

அவனன்பையும், அவனது நேயர்கள் நால்வரின் விசாரணை மிகுத்த அவாவையு முணர்ந்த அருகன் அவர்களை யருகி லுட்காரும்படிச் செய்து சிறுவர்களே! உங்கள் தாய்தந்தையர் போதுமான முதலளித்து வியாபாரத்தைப் பெருக்குங்கோளென்று உத்திரவளித்திருக்க நீங்கள் அவைகளை விடுத்து என்னை வந் தடுத்தக் காரணம் யாதென்று வுசாவினார்.

அதைக்கேட்ட சிறுவர்கள் தருமனை வணங்கி மெய்யனே! எங்கள் தந்தை யளித்துள்ள முதலை கள்ளர்களும் வஞ்சகரும் வழிப்போக்கரும் அபகரித்துக்கொள்ளுவதை யறிந்திருக்கின்றோம்.

ஆனால் தாங்க ளளிக்கும் சத்திய தன்ம முதலைக் கள்ளர்கள் அபகரிக்கவாவது, வஞ்சினர்கள் பொஞ்சிக்கவாவது, வழிப்போக்க ரெடுக்கவாவது முடியாதென்று கேழ்விப்பட்டு அந்த சத்தியதன்ம முதலைப் பெறவேண்டி தங்களை சரணடைந்தோம். தாங்களும் அருள்சுரந்து சத்தியதன்ம அமுதாகும் முதலை யூட்டி யாதரிக்கவேண்டுமென்றார்கள்.

இவர்களது அதி தீவிரத்தையும் அன்பின் பிருதியையுங் கண்ட அருகன் சிறுவர்களைநோக்கி நீங்கள் நால்வரும் ஒவ்வோர் மனைவியையடைந்து மக்களை யீன்று உலகவிருத்தி செய்து சுகமடையவேண்டியதிருக்க என்னை நாடி யாதுசுகம்பெற வந்தீர்களென்றார்.

ஒப்பிலா வப்பனே! உலகத்திற் றோன்றியுள்ள சருவசீவர்களும் பொருளைச் சேர்ப்பதும் அதன் போக்கால் வருந்துவதும் பெண்களைச் சேர்ப்பதும் அதன் மாறுதலால் வருந்துவதும் பிள்ளைகளைப் பெறுவதும் அதன் பிணியி னுபத்திரவங்களால் வருந்துவதுமாகியச் செயல்களைக் கேட்டுமிருக்கின்றோம், கண்டுமிருக்கின்றோம். ஆதலின் அவர்களைப்போல் சதா துக்கநிலை சாராமல் தங்களைப்போல் சதா சுகநிலைப்பெற வந்தோம் என்றார்கள்.

அதையுணர்ந்த வருகன் புந்நகைக்கொண்டு சிறுவர்களை நோக்கி உலகசீவர்கட்படும் சதா துக்கத்தை உங்கள் கண்களால் பார்ப்பதுமன்றி கேட்டுமிருக்கின்றீர்கள்.

ஆயினும் ததாகதர் சதானந்தத்திலிருப்பதை யெவ்வகையா லறிந்துக்கொண்டீர்க ளென்றார்.

சிறுவர்கள் ஜினனைவணங்கி சினேந்திரா! யீதுவேண்டும் வேண்டாமென்னும் புசிப்பினாலும் இவ்வுடைவேண்டும் வேண்டாமென்னும் போர்வையினாலும் இவ்விடம் வேண்டும் வேண்டாமென்னும் நிலையினாலும் உமது முகத்தில் எக்காலுங் காணும் ஆனந்த தேஜசினாலும் நாளுக்குநாள் போதனைசக்தியால் மிகுத்துவரும் இனிதான வாக்கினாலும் இரவும்பகலும் நித்திரையற்று சதா விழிப்பிற் சுகித்திருக்குஞ்சுகத்தினாலும் நீவிரெக்காலும் சதானந்தத்தில் சுகித்திருக்கின்றீரென்று கண்டோமென்றார்கள்.

அதைக்கேட்ட பகவன் சிறுவர்களைநோக்கி அத்தகைய சதானந்தத்தை விரும்பு மெவ்வொருவனும் புத்ததரும சங்கத்தைச் சார்ந்து அறநூல் விசாரிணைப் புரிந்து அன்பைப் பெருக்கிக்கொள்ள வேண்டுமென்றார்.

அதற்கு சிறுவர்கள் பகவனைநோக்கி ஐயனே! தாங்க ளளித்துள்ள வறநூலால் ஒழுக்கங்களைப் பெருக்கிக்கொண்டபோதிலும் எங்களுக்குள் அன்பை எவ்வகையாற் பெருக்கிக்கொள்ளுவோமென்றார்கள்.

பகவன் நால்வர்களையும்நோக்கி சிறுவர்களே! நீங்கள் நால்வருங் குடும்பத்திலுள்ள குழந்தைகள் முதல் பெரியோர்களீறாக அன்புபாராட்டி வந்தீர்களா இல்லையா. யட்சனைத் தேடிவந்தது அன்பு பாராட்டியா இல்லையா வென்றார்.

சிறியோர்கள் மேலோனை வணங்கி சிநேகித அன்பின் மிகுதியாலவனைத் தேடிவந்தோமென்றார்கள். சிறுவர்களே! சிநேகிதமென்பது யாதெனில்:—ஒருவனை நேசித்தபோது அவனுக்குள்ள இடுக்கங்களைத் தனக்கு வந்த இடுக்கங்களைப்போற் கருதி தீர்த்தலும், அவனுக் குள்ள பசியின் உபத்திரவங்களை தன் உபத்திரவம்போற் கருதி யாற்றலும், தன் மனையில் யாதொரு கோபச்செயலி லிருந்தபோதினும் அவனைக் கண்டவுடன் சினமகற்றி இதம் பாராட்டுதலுமாகியச் செயல்களையே அன்பென்றும் சிநேகிதமென்றுங் கூறப்படும்.

இத்தகைய குணநிலையை மகடபாஷையிற் சிவமென்றும், சகடபாஷையில் இதமென்றும், திராவிட பாஷையில் அன்பென்றும் வழங்கப்பெறும். அன்பின் மிகுதியால் சருவசீவர்களின் குற்றங்களையும் பொறுத்து ஆதரிக்குங் குணநிலைக்கு மகடபாஷையில் பிரமமென்றும், சகடபாஷையில் சாந்தமென்றும், திராவிட பாஷையில் தண்மெயென்றுங் கூறப்ப

டும். அன்பின் மிகுதியால் சருவசீவப்பிராணிகளுக்கும் புசிப்பூட்டி நல்வழி காட்டுங் குணநிலைக்கு மகட பாஷையில் ஈசனென்றும், சகடபாஷையில் தன்மமென்றும், திராவிட பாஷையில் யீகையென்றுங் கூறப்படுமென்று விளக்கினார்.

இதைக்கேட்ட சிறுவர்கள் பகவனை வணங்கி தேவரீர் தாம் கூறிவந்த பிரமமென்னுந் தண்மெயும், சிவமென்னும் அன்பும், ஈசனென்னும் யீகையும் சருவ மக்களிடத்தில் உண்டோவென்றார்கள். சிறுவர்களின் புன்மொழிக் கேட்ட பகவன் ஆனந்தித்து சாந்தம், யீகை, அன்பு என்னும் முச்செயல்களும் சருவமக்களிடமட்டிலு முள்ளதல்ல. உலகத்திற்றோன்றியுள்ள சருவசீவராசிகளிடத்திலும் நிறைந்திருக்கின்றது. அன்பென்னும் ஓர் செயல் சருவசீவராசிகளிடத்தும்நிறைந்துள்ளபடியால் பட்சிகள் தன்குஞ்சுகளையும், மிருகங்கள் தன்குட்டிகளையும் வேளைக்குவேளை புசிப்பூட்டி பாதுகாத்து விருத்திசெய்துவருகின்றது. சருவசீவராசிகளிடத்தும் அன்பென்னுஞ்செயல் அகன்றிருக்குமாயின் பட்சிகளின் குஞ்சுகள் பாதுகாப்பற்றுப்போம். மிருகங்களின் குட்டிகள் மாண்டு மறைந்துபோம். மக்களின் மகவும் மயாணபூமிக் கிறையாவர்.

அங்ஙன மகலாது சருவசீவராசிகளுக்குள்ளுஞ் சிவமென்னும் அன்பும், பிரமமென்னுஞ் சாந்தமும், ஈசனென்னும் யீகையும் நிறைந்துள்ளபடியால் அதனதன் கூட்டத்தை பாதுகாத்து ஒன்றுகூடி விருத்திசெய்துவருகின்றது. ஆனால் பட்சிகள் அதனதன் குஞ்சுகளைமட்டிலும் பாதுகாத்து விருத்திசெய்யும். மிருகங்கள் அதனதன் குட்டிகளைமட்டிலும் பாதுகாத்து விருத்திசெய்யும். மக்களென்னும் மநுக்களோ பட்சிகளைப் போலுந் தலைகுனிந்து தன்னினத்தி லன்புசெலுத்துவதுபோ லிராது தலை நிமிர்ந்து சருவசீவர்களிடத்தும் அன்புபாராட்டி ஆதரிக்கவேண்டியவர்களா யிருக்கின்றார்கள்.

இவ்வகைத் தலை நிமிர்ந்து மக்களாகத் தோன்றினோர் சருவசீவர்களின்மீதும் அன்பு பாராட்டாது தன்மனைவி மகவுமீதுமட்டும் அன்பு பாராட்டுவரேல் தலைநிமிர்ந்த மக்களென்று கருதாது தலைநிமிர்த்த நரகரென்று கூறுவர். நீங்கள் நால்வரோ தலைகுனிந்த வானரரினின்று நிமிர்ந்து நரரென்னுந் தோற்றமுண்டாகி விவேகமிகுதியால் மக்களென்னும் பெயர் பெற்றுள்ளபடியால் விசாரிணையினின்று உங்களுக்குள்ள அன்பையும், சாந்தத்தையும், யீகையையும் பெருக்கிக்கொள்ளுவீர்களாயின் இரவு பகலற்ற தேவர்களென்னும் ஏழாவதுதோற்ற முண்டாகி சதா சுகமும் நித்தியானந்தமும் பெற்று வாழ்வீர்கள். அங்ஙனமின்றி இராகத் துவேஷ மோகங்களென்னுங் காம வெகுளி மயக்கங்களைப் பெருக்கிக்கொண்டு நரகர் நிலைகளை யடைவீரேல், சதா துக்கத்தில் மூழ்கி மாறுப்பிறவியிற் சுழன்று திரிகுவீர்களென்றார்.

சிறுவர்கள் நால்வரு மெழுந்துநின்று பகவனைநோக்கி போதிசத்துவா! புண்ணியநாதா! பொய்தீரொழுக்கா! தாமோதிய அருள்வாக்கியங்களில் அன்பு, யீகை, சாந்தம் இம்மூன்றும் நிறைந்தநிலையிற் சுகமுண்டென் றுணர்ந்தோம். காமம், வெகுளி, மயக்கம் இம்மூன்றும் நிறைந்த நிலையில் துக்கம் உண்டென் றுணர்ந்தோம். ஆயினும் இத்தேகம் உள்ளளவும் அத்துக்கத்தை யநுபவிப்பது நிட்சயமாகும். இத்தேகம் மறைந்தபின் இம்மெய்யிற் செய்த தீவினைகளை மறுமெய்யில் அநுபவிப்பதற்கு மாறுப்பிறவியிற் சுழன்று திரிவதென்பதில் மனங் காரணமா தேகங்கார

ணமா வென்பது விளங்காததினால் அதை விளக்கி யாதரிக்கவேண்டுமென்றடிபணிந்தார்கள்.

கருணாகரக்கடவுள் நால்வரையும்நோக்கி சிறுவர்களே! தேகமில்லாமல் மனமும், மனமில்லாமல் புருஷனென்னும் ஆன்மாவு மிருப்பதைக் கண்டீர்களோ வென்றார்.

சிறுவர்கள் செல்வனை வணங்கி மெய்யனே! தேகமில்லாவிடத்து மனதை யறியோம். மனமும் தேகமும் பொருந்திய செயலில்லாவிடத்து புருஷனென்னும் ஆன்மாவையு மறியோமென்றார்கள்.

அநாத்மனாகும் அறிவன் நால்வரைநோக்கி சிறுவர்களே! சருவ தோற்றங்களும் அநித்தியம், சருவ ஆன்மாக்களும் அநாத்மம் என்பதே மோட்சமென்னும் நிருவாணத்திற் கேதுவாகும் சருவ தோற்றங்களும் நித்தியம், சருவ ஆன்மாக்களும் நித்தியமென்பதே நரகமென்னும் பிறவிக் கேதுவாகும். எழு நரகமென்னும் எழுபிறவிகளுக்கு ஏதுக்கள் யாதென்பீரேல் காம, வெகுளி, மயக்கங்களா லுண்டாகும் பற்றுக்களேயாம். அக்காம வெகுளி மயக்கங்களின் செயல்கள் அவனவனுக்குள் தங்கி மாறுபிறவியிற் சுழன்று மீண்டு மச்செயலைப் * பற்றுவதை அவனவன் தூக்கத்திலும் விழிப்பிலும் உண்டாயதைக் காணலாம்.

ஒருச்செயலை செய்திருந்தவன் தூங்கி விழித்தவுடன் விட்டச் செயலை தொடர்ந்து செய்யத்தேடுவான். அதுபோல் மரணமடைந்தானென்பதும் தூங்கினானென்பதும் ஒருபொருளாதலின் விட்ட பற்றைத் தொடர்ந்து பற்றலுக்கு தேகத்திற் றோய்ந்த மனமும், மனதிற் றோய்ந்த பற்றுதலும் பிறவிக்கு ஏதுவாதலின் பற்றுதலுக் கீடாய் மனம் விரிந்து தேகந்தோன்றி விட்ட பற்றைத் தொடர்ந்துசெய்வது உள்ளத்தியல்பாம்.

என பகவன் போதித்துவருங்கால் நால்வருமெழுந்து காசிநாதனை வணங்கி கருணையெங்கடலே! கற்பகத்தருவே! கமலநாயகனே! அவாவின் மிகுதியால் தாவிநிற்கும் பற்றுக்களே பிறவிக்கு மூலமென்றும், மறுமெய்யைத் தோற்றவைக்கும் வித்தென்றும் விளங்கினோமாயினும் நித்தியானந்தமென்றும் சதா சுகமென்றுங் கூறும் அநுபவநிலையில் தேகம் உள்ளவரையிலும் அச்சுகத்தை யநுபவிப்பதா தேகமற்றபோது மச்சுகத்தை யநுபவிப்பதா அதனைத் தேற விளக்கவேண்டுமென்றார்கள். சங்க தருமனென்னுங் கணநாயகன் நால்வரையும்நோக்கி சிறுவர்களே! (ஆரோக்கிய) பரமலாபா, (சந்துட்டி) பரமானந்தா, (விசுவாச) பரம ஞாதி, (நிப்பானங்) பரமாங் சுகம் என்பவற்றுள் ஒரு மனிதன் நோயற்ற வாழ்க்கையிலிருப்பானாயின் அவனை என்னென்று கருதுவீர்கள். ஒருவன் எக்காலும் சந்தோஷத்திலிருப்பானாயின் அவனை என்னென்று கருதுவீர்கள். ஒருவன் தன்குடும்பத்தில் யாதாமொரு கவலையுமில்லாமல் வாழ்வானாயின் அவனை என்னென்றுகருதுவீர்கள். ஒருவன் தன்னதென்னும் பற்றற்று நானென்னு மகம்பாவமற்று இஃது வேண்டும் வேண்டாமென்னும் விருப்

---

* நாயனார் திரிக்குறள்.—பற்றற்றக் கண்ணே பிறப்பறுக்கு, மற்று நிலையாமெய்க் காட்டிவிடும்

இடைக்காட்டு சித்தர்.—பற்றே பிறப்புண்டாக்குந் தாண்டவக்கோனே, அதை பற்றாதறுத்துவிடு தாண்டவக்கோனே.

மணிமேகலை. — சீலந்தாங்கி தானந்தலைநின்று, மேலென வகுத்த ஒருமூன்று திறத்துத், தேவரு மக்களும் பிரமருமாகி, மேவிய மகிழ்ச்சி வினைப்பய னுகர்வர்.

புவெறுப்பற்று தூங்கல் விழிப்பென்னும் இரவுபகலற்று சுழிப்த்தி, ஜாக்கிரமென்னும் அசதியற்று இன்று நாளை யென்னும் மறதியற்று பாலன் விருத்தனென்னும் பருவமற்று சதா விழிப்பிலும், சதானந்தத்திலும், சதா போதத்திலும், சதா நீதியிலும், சதா சாந்தத்திலும், சதா யீகையிலும், சதா வன்பிலு மிருப்பானாயின் அவனை என்னென்று கருதுவீர்களென்றார்.

அதனை வினவிய சிறுவர்கள் ஆனந்தமுங் குதூகலமுங் கொண்டு ஆதிதேவனை வணங்கி ஓதாம லுணர்ந்த தூயனே! ஒப்பிலா மெய்யனே! ஒரு மனிதன் உலகத்தில் வியாதியில்லாமல் வாழ்வதரிது. அவ்வகை வியாதியில்லாமல் வாழ்வானாயின் அழியும் லாபத்தைத் திரளாக வடைபவனைப்பார்க்கினும் அவனே அழியா லாபத்தை யடைந்தவனாவன்.

ஒரு மனிதன் எப்போதும் சந்தோஷமா யிருப்பதரிது. அவ்வகை சந்தோஷத்தி லிருப்பானாயின் அவனே அழியா ஆனந்த முடையவனாவன்.

ஒரு மனிதன் குடும்பத்தில் எக்காலும் விசுவாசம்வைப்ப தரிது. அக்குடும்பத்தோருந் தானும் ஒருவருக்கொருவர் விசுவாசமுற்று வாழ்வார்களாயின் அவனே அக்குடும்பத்திற் சிரேஷ்டனும் ஞாதியுடையவனுமாவன். ஒருமனிதன் தன்னதென்னும் பற்றறுத்த லரிது. நானென்னும் அகம்பாவமற்ற லரிது. வேண்டும் வேண்டாமென்னும் விருப்பு வெறுப்பற்ற லரிது. தூங்கலற்ற லரிது. சதா விழிப்பி லிருத்த லரிது. சுழுப்த்தி யென்னும் சோம்ப லறுத்த லரிது, துற்செய லணுகாமல் ஜாக்கிரதையில் நிற்ற லரிது. மறவாநிலைப்பெற்று நிற்ற லரிது. பால விருத்த மற்று எக்காலுங் குமரனைக் காண்ட லரிது. சதானந்தத்தி லிருப்ப தரிது. சதாபோதத்தி லிருப்ப தரிது. சதா நீதியி லிருப்ப தரிது. சதா சாந்தத்தி லிருப்ப தரிது. சதா யீகையி லிருப்பது மரிது. சதாவன்பி லிருப்பது மரிது.

இத்தகையச் செயல்களையுங் குணங்களையும் யாவரிடத்துங் கண்டறியோம். ஆயினும் உலகத்தில் சிரேஷ்டமென்னும் பரமலாபத்தைக்கண்டடைந்தவர் தாங்களென்றே காண்கின்றோம். உலகத்தில் சிரேஷ்ட வானந்தமாகும் பரமானந்தத்தைக் கண்டடைந்தவர் தாங்களென்றே யறிகின்றோம்.

ஓர் குடும்பத் தலைவருள் சிரேஷ்ட நீதியதிபதியைவிட உலகத்திற்குத் தலைவராய் நீதிபோதராய் விளங்குபவர் தாங்களென்றே காண்கின்றோம். ஆதலின் சதா யீகை யமைந்த ஆதியீசரும் நீரே, சதானந்தமுற்ற ஆதிபரனும் நீரே, சதா வன்புமிகுத்த ஆதிசிவனும் நீரே, சதா சாந்தமிகுத்த சுபப் பிரமமும் நீரே, சதா நன்மெய் பெற்ற ஆதியங் கடவுளும் நீரே யாதலின் எங்கள் அநித்திய நிதிகளை மாற்றி நித்தியமாம் பதுமநிதியாகும் உம்மெய்யும், தன்மநிதியாகும் அறத்தையும், சங்கநிதியாகும் கூட்டத்தையும் நாடினோம்.

எங்களையுந் தங்கள் சங்கத்திற் சேர்த்து தங்கள் அளவுபடா சத்தியதன்மத்தைப் போதித்து தேகமுள்ளபோதே சதானந்தத்தை சாதித்து நிருவாண சுகத்தை யடையும் வழிக்கு ஆளாக்கவேண்டுமென்றார்கள்.

அவ்வாக்கியங்களைக் கேட்ட பகவன் புன்நகைக்கொண்டு சிறுவர்களே! உங்களை யாளாக்குவதற்குத் ததாகதன் ஆக்குவோனல்லன். நீங்

களை யுங்கட் போஷிப்பினாலும், ஒழுக்கத்தினாலும் ஆளாகி உங்களுக்குள்ள காம வெகுளி மயக்கங்கள் எவ்வளவு நீங்கியது எவ்வளவு உள்ளதென உங்களுக்குள் நீங்களே யறிந்து தீங்கான எண்ணங்களை யகற்றிக்கொண்டேவரவும், நல்ல எண்ணங்களை விருத்திசெய்துக்கொண்டேவரவும், சீவர்களின்மீதுள்ள அன்பைப் பெருக்கிக்கொண்டேவரவும், சீவ ஹிம்சைகளை யகற்றிக்கொண்டேவரவும், தன்ம சிந்தையைப் பெருக்கிக்கொண்டேவரவும், உலோபசிந்தையை யகற்றிக்கொண்டேவரவும், உள்ள மயக்கங்களை சேராமல் அகற்றிக்கொண்டேவரவும், மயக்கத்தை யுண்டுசெய்யும் வஸ்துக்களை எக்காலுஞ் சேரவிடாமல் அகற்றிக்கொண்டேவரவுமாகிய விழிப்பிலிருந்து மனக் களங்கங்களை யகற்றி சுத்தயிதயமுண்டாகினோமாவென்று உங்களை நீங்களே யறிந்து உண்மெய்யை யுணர்ந்துக்கொள்ளுவீர்களாயின் உங்க ளிடைவிடா விசாரிணையும், திடமுயற்சியுமே உங்களை யீடேற்றி தேகந் தோன்றினும் அழியினும் சத்தியதன்மமாம் உண்மெய் என்றுமழியாது சதானந்தத்திலும் நித்திய சுகத்திலு மிருப்பீர்க ளென்றார்.

நால்வரும் சிரமுடி யகற்றி காஷாயம் பெற்று பிச்சாபாத்திரங் கையிலேந்தி சங்கத்திற் சேர்ந்தவுடன் காசி விசுவேசன் வாரணாசியை விட்டு நீங்கி மற்றுந் தேசங்களில் தன்ம சங்கங்களை நாட்டவேண்டுமென்று செல்லுங்கால் யட்சனுடன் நால்வரும் பின்சென்று சங்க அறனை சிலதூரந்தொடர்ந்து ஓரிடத்தினின்று தேவரீர் நாங்கள் முன்ஜெநநத்தில் என்னஜெநநமாக விருந்திருப்போமென் றெவ்வகையி லறிந்துக்கொள்ளக்கூடு மென்றார்கள்.

சங்கறர் ஐவர்களையும்நோக்கி சிறுவர்களே! நாமனைவரும் நேற்று வாசஞ்செய்திருந்த வியாரமாகிய கட்டிடந் தெரிகிறதாவென்றார். தேவரீர் நாம் சில தோப்புகளையும் வனங்களையுங்கடந்து வந்துவிட்டபடியால் அக்கட்டிடந் தோன்றவில்லை யென்றார்கள். சிறுவர்களே! நாமிப்போது வாசஞ்செய்ததும் தற்காலம் விட்டுவந்ததுமாகியக் கட்டிடம் சொற்ப நேரத்திலுந் தூரத்திலும் மறைந்து தெரியாமற்போமாயின், நான்குபூதங்களாலமைந்த தேகமானது ஒன்று குறைந்தும், ஒன்று நிறைந்தும் நசிந்து அந்தந்த பூதங்களுடன் கலந்தும் பற்றியப் பற்றுக்கள்மட்டுந் தனித்துரைந்தும் நூதன பூதத்தாற் பரந்தும் மறுஜெநந தோற்ற முண்டாயபோது பாலதானச் செயலால் முன் ஜெநந விட்டகுறை யீதென்று மற்றோர்விவேகிக ளறிவான்றி பற்றியச் செயலை விட்டவ னறியு முணர்ச்சிக ளற்றுப்போம்.

அதினால் வாலவயது பதினாறு கடந்து குமரபருவ மடைந்துள்ள விச்செநநத்தில் மரணத்தில் மறைந்தும், மாதுரு கருப்பத்தில்மறைந்தும், பாலதானத்தில் மறைந்தும் நிற்கும் முன்ஜெநநத்தைத் திரும்பிப்பார்ப்பதானால் அனந்தச்சுழலும் அரியப் படலங்களு மறைந்திருக்கின்றது. அப்படலங்களாம் இராகத் துவேஷ மோகத்திரைகளை நீக்கி இதைய சுத்தமாம் சுழுப்த்தியற்ற சுப்ரப்பளிங்கினின்று பார்ப்பீர்களானால் முன்ஜெநந தோற்றமும் அதின் கன்மபற்றுக்களாஞ் செயலும் கன்மப் பற்றுக்களை யுருவெடுத்தாலும் முன்செய்வினையின் பகுதியும் தெள்ளற விளங்கும். அங்ஙனமின்றி ஓர் மயிரையெடுத்து இரவில் பார்ப்பவனுக்குத் தெரியாததுபோல் காம, வெகுளி, மயக்கமாம் அஞ்ஞான விருளிலிருந்து முன்ஜெநநத்தை நோக்குதல் தன் வினைப்பயனால் விட்டகுறை தொடர்ச்சி தனைக்குளிருந்தும் அஃது விளங்குவ தரிதேயாம்.

ஆதலின் நீங்க ளெல்லொருவரும் முன்ஜெநநம் யாது பின்ஜெநநம் ஏதென்றுசாவி வீண்காலங்கழிக்காது * காமத்தாலுண்டாகும் கேடுகளை நோக்குதலும், அவைகளை நாளுக்குநாள் நீக்குதலும், கோபத்தாலுண்டாகும் கேடுகளை நோக்குதலும், அவைகளை நாளுக்குநாள் நீக்குதலும் மயக்கத்தாலுண்டாகும் கேடுகளை விழித்து நோக்குதலும் அவற்றை நாளுக்குநாள் நீக்குதலுமாகிய நற்கடைபிடியினின்று இதயத்தை சுத்திசெய்தலென்னும் மனக்களங்கங்களை யகற்றிவிடுவீர்களாயின் செல்காலத்தோற்றம் நிகழ்காலத் தோற்றம் வருங்காலத் தோற்றம் யாவும் உங்களுக்குளுணர்ந்து உதயசூரியன்போற் பிரகாசிப்பீர்களென்றோதி அறிவு பெருகுகவென வாழ்த்தியிவர்களையும் வாரணாசி வியாரத்திற் கனுப்பிவிட்டு ஓர் ஆரணத்தின் மத்தியில் நுழைந்துவிட்டார்.

---

## ஒன்பதாவது

## மானைக்காத்து மழுவேந்திய காதை.

—:o:—

ஆரணமத்தியில் நுழைந்த அவலோகிதர் செல்லும் வழியில் ஓர் புலியானது மானைப் பற்றிக்கொள்ள அது பதறுவதைக் கண்ட கருணாகரன் அருகிற் சென்று † மானை விடுவித்து தன்னுடலைப் புலிக்கு தத்தஞ் செய்தார்.

புலி யுடனுடன் *பொய்யாமொழிபோ லுடல் பொருந்தியவுடன் அப்புலிக்குங் கருணைதோன்றி இருவரையும் விட்டுப்போய்விட்டது.

கருணாகரக்கடவுள் மானுடலில் வடியும் உதிரத்தைத் துடைத்தும், காயங்களை பொருத்தியும்விட்டு நடக்குங்கால் அம்மான் கன்று மாதவனைப் பின்தொடர்ந்தே சென்றது. அவரும் அதன் அன்பையும் பயத்தையு மறிந்து யாதொன்றும் பேசாமற் சென்றார்.

---

* வீரசோழியம். — அருள்வீற்றிருந்த திருநிழற்போதி, முழுதுணர்ந்தவனிற்பரவுதுந்தொழுதக, ஒருமனமெய்தி யிருவினைப் பிணிவிட, முப்பகைகடந்து நால்வகைபொருளுணர்ந், தோங்குநீருலகிடையாவரு, நீங்காவின்ப மொடுநீடுவாழ்கெனவே

†. வீரசோழியம். — கற்புடை மாரனைக் காய்சினந்தவிர்த்தனை, பொற்புடைநாகர் தம் துயரம்போக்கினை, மீனுருவாகி மெய்ம்மையிற் படிந்தனை, மானுருகார்த்து வான்குணம் பயற்றினை.

உலகுமிக மனந்தளர்வுற், றுயர்நெறி யோர் நெறியமுங்கப், புலசைப்ப பெருஞ்சினத்து, புலிக்குடம்பு கொடுத்தனையே.

நீதியல்புலியது பசிகெடுவகையினை. திருவுருவருளிய திறமுறுபெருமையை.

அருங்கலச்செப்பு. — மன்னுயிர் காக்கத் தன்னுயிரளித்தல், விண்ணுயர் வேந்தன் திறம்.

நிகழ்காலத்திரங்கல். — மெலிந்திளைத்த மான்கன்றை வேதியனார் காத்து, புலிக்குடம்பளித்தாண்ட யோத மதியமே.

மான் கன்று மாதவன் செல்லுங்கால் செல்லுதலும், அவர்நிற்குங்கால் மேயுதலுமாகியச் செயலுற்று அவர் பிச்சாபாத்திரமேந்தி அன்னத்திற்கு செல்லுங்கால் கூடவே நடத்தலும், அவர் யோகசயன முறுங்கால் கூடவே சயனித்தலும், அவரெழுந்திருக்குங்கால் கூடவே யெழுதலுமாகப் பின்சென்றது.

இறைவனுங் கானகங்களைக் கடந்து கராடர் நாடடைந்து ஓர் மரத்தடியி லுட்கார்ந்து மக்களுக்கு தன்மோபதேசஞ் செய்ய வாரம்பித்தார். மான் கன்றும் அவாருகில் உட்கார்ந்துகொண்டது. அவ்விடம் இரும்பூதிக்கொண்டிருந்தக் கன்னான் பகவனை நோக்கிப் பெரியோய்! சருவத்தையும் விட்டு வெளியேறியத் தாங்கள் இம்மான் கன்றை விடாதக் காரணம் என்னை யென்றான்.

அதை வினவிய பகவன் கன்னானை நோக்கி மக்களுக்கு மிருகசீவர்கள்மீது அன்பில்லாவிடினும் மிருகசீவனாகிய விதற்கு மக்கள்மீ தன்புபொருந்தி தொடர்ந்து நிற்கின்றதென்றார். கன்னான் பகவனை நோக்கி மிருகராசிகளிடத்தும் அன்புண்டோ வென்றான். பகவன் கன்னானை நோக்கி சருவசீவர்களிடத்தும் அன்பில்லாமற்போமாயின் ஒவ்வோர் சீவராசிகளும் சீவிப்ப தரிதென் றறியாயோ வென்றார்.

கருணாகரக் கடவுள் வாக்கையும் அவர் செயலையு மறியாத கன்னான் உலைதுலையில் மழுகக் காய்ந்திருந்த இரும்பு குண்டை இறைவன்முன்னுருட்டி யிதனிலும் அன்புண்டோவென்று பரிகசித்தான்.

அருகக்கடவுளோ அவனறியாமெய்க் கிரங்கி அக்காய்ந் துருகு *மழுவை தன் கரத்திலேந்தி கன்னானை நோக்கியபோது அத்தபுலானது ததாகதர் கரத்திற்றாவாது மேனோக்கி வீசிற்று. அதைக் கண்ணுற்ற கன்னான் அச்சுவாலை மேனோக்கி வீசுவதையும் அதன் றன்டவத்தையுமுணர்ந்து திகைத்து நின்றான்.

இறைவனோ, தன் † காத்தேந்தியமழுவை யெறிந்துவிடாது இன்னு மேலேற்றி கன்னானை நோக்கி அன்பனே! உன்னிடத்துள்ள காமாக்கினியின் சுடுகையை உணராமலும், கோபாக்கினியின் சுடுகையை உணராமலும், பசியாக்கினியின் சுடுகையை உணராமலும் இம்மழுவின் சுடுகையைமட்டு முணர்ந்து மகிழ்ச்சிகொண்டதென்னோ வென்றார்.

கன்னான் திகைத்து கருணாகர னடியில் வீழ்ந்து ஐயனே, காமாக்கினி, பசியாக்கினி யிவைகளின் சுடுகைகளையறியாது இவ்வுலையிற் காய்ந்த மழுவின் சுடுகையைமட்டு மறிந்தவனாதலின் தங்கள் தண்மெய் நோக்கின்றி தரிதலையானேன் பிழை பொருத்து புண்ணியபலனைப் பகரல்வேண்டுமென்றான்.

---

* வீரசோழியம்.—புதலத்தி லெவ்வுயிர்க்கும் பொதுவாய திருமேனி, மாதவனீயென்பதற் கோர் மறுதலையாக் காட்டதோ, சழலடைந்த வலக்கணத்துக் காயலைவா யுருமழுவா, மழுவெழுந்த காத்தொடுமற் றன்றருளை யேற்றினையே.

திருமூலர் திரமந்திரம்.—உருகிய மழுவை யுள்ளங்கையேந்தி, யருளொடு வாய்மெ யாற்றலருளி, கருவி லமைந்த காட்சி யமைப்பை, திருவயிலுள்ள செயலி தென்றனே.

† காசிக்கலம்பகம்.-கண்ணிருக்குந் திருநுதலுங் கனலிருக்குந் திருகரமுங் கலந்தோருள்ளத், தண்ணிருக்கு மின்னமுதும் பிறைமுடியு முடைவாளு மகற்றிகானில், வெண்ணிறைந்த கணதோடு மணந்தவனத் திருப்பாரை யெங்கே காண்பேன், பண்ணிருந்த மறைபுகழ்முக் கண்ணனை யண்ணல ரமரர் பரனைத் தானே.

கருணாகரர் கன்னனைநோக்கி அன்பரே! உலையிற் காய்ந்த மழுவு உம்மெச்சுடுமென்றறிந்த நீவிர்மற்றவரைசுட்டு உபத்திரவமடையட்டுமென்றெண்ணலாமோ வென்றார். கன்னன் கமலநாயகனை வணங்கி ஐயனே! இம்மழுவைத் தமது கரத்தி லெடுக்கமாட்டீரென் றுரைத்தேனன்றி உம்மெ யுபத்திரவத்தி லாழ்த்தக் கருதினேனில்லை. ஆதலின் என துன்மதத்தச்செயலை க்ஷமித்து ரட்சிப்பதுடன் எனக்குள் உள்ள அக்கினியை விவரிக்கவேண்டுமென்று வருந்தினன்.

பகவன் கன்னனைநோக்கி அன்பரே! உமக்குள்ளெழும் பசியாக்கினியின் வெப்பத்தை யறிந்திருப்பீர். அவ்வெப்பத்தைத் தணிக்கும் புசிப்பை உட்கொண்டவுடன் தணிந்து ஆயாசம் நீங்கும். அன்னம் புசிப்பின் றிருப்பீராயின் அவ்வக்கினி கிழிழிந்து மலமூத்திராதிகளைக் கயர்ந்து தேகமுழுவதும் பரந்து சிற்சில வியாதிகளை யுற்பத்திசெய்து மாளாவுபத்திரவத்தை யுண்டுசெய்யும். கோபாக்கினியானது உம்மிடத் தெழுந்து பரந்து எதிரிக்கும் அவ்வக்கினியையெழுப்பிப் போர்புரிந்து பற்பலவிடங்களிற் காயங்க ளுண்டாய் உபாதைப்படுத்துவதுடன் அதிகாரிகளிடத்துந் துன்பத்தை யநுபவிக்கச்செய்யும்.

காமாக்கினியானது உம்மிடத் தெழும்புவதையும் அடங்குவதையும் அநுபவத்தி லறிந்துவருகின்றீர். அவ்வக்கினியைதவிற்காது மேலுமேலும் பெருக்கிக்கொள்ளுவதால் காமாக்கினியின் பெயரற்று மேகாக்கினியென்றும் பெயர்பெற்று சப்த தாதுக்களுங் கொதிப்புற்று பற்பலவியாதிகளால் துன்பத்தை யநுபவிக்கச்செய்யும். ஆதலின் உம்மிடத்துண்டாகும் மூவக்கினியின் கொதிப்பையும் அதினாலுண்டாகும் ஊன்களின் உருக்கையும், உபாதைகளின் பெருக்கையுங் கண்டுணராது உமக்கு அப்புறப்பட்ட மழுவின் கொதிப்பைமட்டிலும் அறிந்திருப்பதால் யாதுபயன்.

* உம்மிடத்தெழும் மூவக்கினியின் கொதிப்பை யடக்குவதினால் சகல மதிப்பு முண்டாய் சீவகாருண்யனென்னும் பெயர்பெற்று மக்கள் நிலைகடந்து தேவர் பிரமரென்னுஞ் சுகநிலைபெற்றுவாழ்வீர். அங்ஙனமின்றி இப்பேதை ஜெந்துவாகிய மானைக்கண்டவுடன் உமது காருண்யத்தைக்காட்டாது துவேஷமுறுவதால் உம்மிடத்துண்டாகும் இராகத்துவேஷ மோகோற்பவமாம், காம வெகுளி மயக்கங்கள் கொதித்தேறி பிணி, மூப்பு, சாக்காடுண்டாகி மாறாப் பிறவியிற் சுழன்று தீரா துக்கத்திற் காளாக்கும். இத்தகைய துக்கத்தை நீக்கிக்கொள்ளவேண்டிய நீவிர் சீவராசிகளுக்குண்டாகுந் துன்பங்களை உமக்குண்டாய துன்பம்போற்கருதி அவைகளை யாதரித்துவருவீராயின் மேற் பிறவியை நோக்கிவாழும் ஒவ்வோர் சீவப்பிராணிகளும் பெருகி பலுகி சுகமடையும் வாழ்க்கையைத் தாங்களு மறிந்து அன்பின் பெருக்கத்தா லுண்டாகுங் கருணையின் பலனையாராய்ந்து கதிபெருகுவீரென்றார்.

கன்னன் கலைநாயகனை வணங்கி ஐயனே, இங்கு காய்ந்த மழுவாயுருகிய விரும்பு பட்டவிடமெங்குஞ் சுடுவதாயிருக்க தமது கரத்தைசுடாததின் காரணமென்னோ விளக்கல் வேண்டுமென்றான்.

---

* **சீவகசிந்தாமணி.**—தன்னுயிர் தான்பரிந் தோமபுமாறு போல், மன்னுயிர் வைகலு மோம்பி வாழுமே, வின்னுயிர்க் கிறைவனு மின்ப மூர்த்தியாய், பொன்னுயிராய்பிறந் துயர்ந்து போகுமே.

நெருப்புயிர்க் காக்கிநோய் செய்யினிச்சமூ, முருப்புயி ரிருவினை யுதைப்ப வீழ்ந்தபின், புரிப்புரிக் கொண்டுபோய்ப் பொதிந்துக் கட்டிட, விருப்புயிராகிவெந்தெரியுள் வீழுமே.

காமமூவேந்தி கன்றனைநோக்கி அன்பரே, நீர் தண்மெய் யுடைவீராயின் சகலமுந் தண்ணுறும். நீர் சுடுமெய் யடைவீராயின் சகலமும் உடம் மெச் சுடுமென்றார்.

தண்மெய் யென்பதும் சுடுமெய் யென்பதும் விளங்கவில்லையே என்றான்.

அன்பரே ! உமக்குள் சாந்தமென்னுங் குளிர்ந்த நிலை கோடலே தண்மெயென்றும், காமங் கோபமென்னுங் கொடுநிலைக் கோடலே சுடுமெ யென்றுங் கூறப்படும்.

வாக்கால் ஒருவரை மனநோகப்பேசுதலும் சுடுமெய்க்காதாரமாம். தேகத்தால் மற்றோரை நோக வடித்தலுஞ் சுடுமெய்க் காதாரமாம். மற்றோரைக் கெடுக்க வஞ்சநெஞ்சங்கொள்ளுவதுஞ் சுடுமெய்க்காதாரமாம்.

மிருதுவான வாக்கும், அன்பான மொழியும், பிரயோசனமான வார்த்தைகளும் நாவினாற் கூறுதல் தண்மெய்க் காதாரமாம்.

மற்றோர் தேகத்திற்குண்டான தீங்கை தன் தேகத்தால் காத்தலுந் தன் தேகத்தை வருத்தி சம்பாதித்து மற்ற தேகங்களைப் போஷித்தலும் தண்மெய்க் காதாரமாம்.

மற்றோர் செய்த தீங்குகளை நினையாமலும் அதை மனதிற் றங்க விடாமற் செய்தலும், மற்றொருவர் செய்த நன்றியை நினைத்தலும், அந் நன்றியை என்று மறவாமலிருத்தலுந் தண்மெய்க் காதாரமாம்.

இத்தகையத் தண்மெ யடைதற்கு தென்புலமே தோற்றமாகும். அதாவது நாவினால் அறுசுவைகளை யறிதலும், மூக்கினால் நற்கந்தந் துற் கந்தங்களை யறிதலும், செவியினால் சப்தங்களைக் கேட்டலும், கண்களால் உருவங்களைப் பார்த்தலும், தேகத்தால் பரிசித்தலென்னும் உணர்ச்சி நுகர்தலுமாகியப் புலன்களும் எண்ணங்களுந் தென்பட உசாவுவனேல் தென்புலத்தானவன்.

அத்தென்புல நுகர்ச்சியால் கண் பார்த்தவிடத்தை மன மிச்சித்தலும், நாவு ருசித்த பதார்த்தத்தை மன மிசசித்தலும், நாசி முகர்ந்த வஸ்துவை மன மிச்சித்தலும், செவி கேட்ட சப்தத்தை மன மிச்சித்தலும், தேகஞ் சுகித்த விடத்தை மன மிச்சித்தலுமாகியச் செயல்கள் மனங்கோறிய வஸ்துக்கள் கிடைத்தவிடத்து சந்தோஷமுங் கிடைக்காதவிடத்து துக்கமும் பற்கடிப்பு முண்டாய் காம வெகுளி மயக்கங் கொதிப்பேறி தன்னை யடுத்தோர்களையுங் கெடுத்து தானுங் கெட்டு மாளா துக்கத்திற் சுழன்று திரிவான்.

மனம் இச்சித்தலாகும் பற்றுக்களற்று சருவ சீவர்களின் மீதும் அன்புற்று சத்தியதானத்தில நிலைபெற்று நிற்குஞ் சாதனத்தால் சாந்தம், அன்பு, யீகை இரண்டு தண்மெயுண்டாய் அந்தணனாகுவன்.

அந்தணநிலை யடைந்து சந்ததசுக முண்டாகி தேவர் பிரமனென்னும் ஏழாவது தோற்றம் பெற்று எங்கு முலாவுவர்.

இன்னிலைபெற முயற்சிக்கும் தென்புலத்தாருக்கும் தேவர்களாகும் ஏழாவது தோற்ற அறஹத்துக்களுக்கும் அன்னமிட்டுவருவது அனந்த தானமாகும்.

இத்தானத்தை நாடியும் அவர்களே வரமாட்டார்கள். நீங்களே யுங்கள் அன்னபதார்த்தங்களை பதினைந்து நாழிகைக்குள் முடித்து வெளி

வந்து (அறஹத்தோ அறஹத்தோ அறஹத்தோ) வென்று மூன்று சப் தமிட்டு பார்ப்பீர்களானால் ஒரு சங்கத்தை விட்டு மறு சங்கங்களுக்குச் செல்லுந் * தென்புலத்தாரும், அறஹத்துக்களாம் தேவர்களும் வருவார்கள். அவர்களுக் கன்னமிட்டு நீங்களும் புசித்து ஆனந்தமடையுங்கள்.

* இத்தகைய தென்புலத்தார்க் கன்ன மீய்ந்து அவர்கள் சத்தியதன் மத்தைக் கேட்பீர்களாயின் நீங்களும் ஐம்புலனடக்க மதி சீக்கிரம்பெற்று அறஹத்துக்க ளாவீர்களென்று முடித்தார்.

கன்னுனும் அங்குள்ள சில விவேகிகளுங் கணநாதனை நோக்கி அற நிறைக்கடலே, அன்பி னுடலே! தம தரிய கமலபாதத்திலும், சத்திய தன்மத்திலும், அனந்த சங்கத்திலும் அடைக்கலம் புகுந்தோம். எங்க ளையுந் தங்க ளரிய சங்கத்தவர்களாக சேர்த்து சாணுகதித் தரல்வேண்டு மென்று கைகூப்பினர்கள்.

கணநாயகன் அவர்கள் சாணுகதிக்கிரங்கி காாடர் நாட்டினுள்ளக் கனவான்களைக்கொண்டு புருஷர்களுக்கோர் † வியாரமும், இஸ்திரீகளுக் கோர் வியாரமுங் கட்டுவித்து அவ்விடஞ் சிலநாள் தங்கி புருஷர்களுக்கு நான்கு வாய்மெயாஞ் சத்தியதன்மங்களையும், இஸ்திரீகளுக்கு நான்கு கற்பு நிலையாஞ் சத்தியதன்மங்களையும் ஊட்டி துக்க நிவர்த்தியாம் வழி யைக்காட்டி சகல பாசபந்தங்களையும ஒட்டி சருவவியாரங்களிலும் வெண் ணிறமாந் தன்மக் ‡ கொடியை நாட்டி புத்ததன்மத்தோர்சேர்ந்து வாழுஞ் § சேரிகளை சுகம்பெறச் செய்துவந்தார்.

---

* திரி வெண்பா.—தென்புலத்தார்தெய்வம் விருந்தொக்க லென்னுமிவ, ரின்புறத்தா னுண்ட லினிதாமே - அன்பிற், தக்கவரையன்றி தனித்துண்ணு ருவிமீன், கொக்கருந்தென்றே குறி.

திரிக்குறள்.—தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங், கைம்புலத் தா றோம்பறலே.

† நிகழ்காலத்திரங்கல்.—காாடர்நாடங் கு கன்னன் மழுவால், வீராடர் பொன் வியாரம் விளித்த ததிசயமே:

‡ வீரசோழியம்.—ஆவியனைத்துங்க, ச, த, ந, ப, மவ்வரியும் வவ்வி, லேவிய வெட்டும் யவ்வாறு ஞ்நான்கு மெல்லா வுலகு, மேவிய வெண்குடைச் செம்பியன் வீர ராஜேந்திரன்றன், காவியல் செந்தமிழ்ச் சொல்லின் மொழி முத லன்னு தலே.

§ சீவகசிந்தாமணி.—தேனுலாமது ச்செய்கோதை தேமபுகை கமழவூட்டி, வானுவாச் சுடர்கண்மூடி மாநக ரிரவுசெய்ய, பானிலாச் சொரிந்த நல்லா ரணிகலம் பகலைச்செய்ய, வேனிலான் விழைந்த (சேரி) மேனுல களையதொன்றே.

வேரியின் மெழுக்கார்ந்த மென்பூநிலத், தாரியாகலஞ் சாந்தனித்தபின், வாரி கித்திலம் வைப்பபொற்பூவொடு, சேரிதோறிது செல்வத் தியற்கையே.



## பத்தாவது

# சதுரகிரிக் காதை.



அறவாழி யந்தணன் கராடர் நாட்டில் தன்ம சங்கத்தை நாட்டிவிட்டு சதுரகிரியென்றும், இரத்தினதீவகமென்றும் வழங்கும் ஓர் மலையின்மீ தேறியபோது அடிவாரத்தில் வாசஞ்செய்திருந்தக் குடிகளயாவரும் பின்தொடர்ந்து உச்சியிற் சென்று ஐயனைச் சூழ்ந்து நின்றார்கள்.

அறவாழியான் சகலரையும் நோக்கி அன்பர்களே! உங்களையொத்த மநுக்கள் முதல் புழுக்கீடாம் எறும்புகளீறாக வுள்ள சீவர்களை ஒருவருக்கொருவர் அன்பு பாராட்டி ஆதரித்து வருகின்றீர்களா, அன்றேல் தங்களுடைய போஷிப்பையுஞ் சுகத்தையும பார்த்துக்கொண்டு மற்ற சீவர்களை வதைத்துவருகின்றீர்களாவென்றார்.

தேவரீர் தாங்களிவ்விடம் வந்தவுடன் இக்கரடி புலி சிம்மம் யாவும் உம்மைச் சூழ்ந்து ஆனந்தமாகப் பார்த்திருக்கின்றது. இத்தகைய கரடியும் புலியும சிம்மமும எங்களைத் தனியாகக்காணுமாயின் அடித்துக் கொன்றுவிடுவது நிட்சயம். இவ்வகைக் கொரோஜெந்துக்கள்மீது யாங்களெவ்வகையில் அன்பு செலுத்தி ஆதரிப்போமென்றார்கள்.

அதைக்கேட்ட பகவன் கூட்டத்தாரை நோக்கி அன்பர்களே! ததாகதன் உங்களையொத்த மனிதனாயிருக்க இம்மிருக சீவன்கள் எம்மீது அன்பு பாராட்டி அருகில வீற்றிருப்பதும் உங்களைக் கண்டவுடன் கொல்லுவதுமாகியக் காரணம் யாதென்றார்.

ஐயனே! இதினந்தரங்கம யாங்களறியோமே என்றார்கள்.

அருங்கலையோன் அக்குடிகளை நோக்கி அவ்விடமிருந்த ஓர் நீர்ப்பாம்பையும் விஷப்பாம்பையுங் காண்பித்து அவைகளைப் பிடித்துவாருங்கோளென்றார்.

சிலர் அவைகளைப் பின்சென்று பிடிக்க வாரம்பித்தபோது நீர்ப்பாம்புமட்டிலு மெங்கும் ஓடாமல அவ்விடமே தங்கிநின்று கையில்பிடிப்பட்டது. விஷப்பாம்போ இவர்களைக் கண்டவுடன் ஓடி வொளித்துக் கொண்டது.

வேறுசிலரை நோக்கி அவ்விடமிருந்த ஓர் பல்லியையுந் தேளையுங் காண்பித்து அவவிரண்டையும் பிடித்துவாருங்கோளென்றார்.

அவற்றை சிலர் தொடர்ந்து பிடிக்க வாரம்பித்தபோது பல்லியானது எங்கு மோடாமல் தங்கள் கைகளில் பிடிப்பட்டுக்கொண்டது.

தேளோவெனில், இவர்கள் அருகில் நெருங்கியவுடன் ஓடி வொளித்துக்கொண்டது.

இவைகளைக் கண்ட இறைவன் குடிகளை நோக்கி அன்பர்களே! ஒரு பாம்பு வோடி வொளித்துக்கொள்ளவும் மற்றொன்று உங்கள் கையில்

பிடிப்படவும் தேளானது உங்களைக் கண்டவுடன் ஓடிவொளிக்கவும் பல்லி யானது வோடாது உங்கள் கையில்பிடிபடவும் நேர்ந்த காரணங்கள் யா தென்று வினவினார்.

தேவரீர் அதன் காரணமும் யாங்க ளறியோமென்றார்கள்.

குமாரதேவன் குடிகளைநோக்கி அன்பர்களே! சீவர்களை இம்சிக் கக்கூடிய நஞ்சென்னும் விஷமானது எந்த ஜெந்துவினிடமிருக்கின்றதோ அந்த ஜெந்துவானது நம்மிடங் கொடிய விஷமுள்ளபடியால் நம்மைக் கண்டோர் கொன்றுவிடுவார்க ளென்று பயந்து வொளிப்பது இயல் பாகும்.

சீவர்களை இம்சிக்கக் கூடாத விஷமற்ற ஜெந்துக்கள் தன்னிட த்து யாதொரு நஞ்சுமில்லாமையால் நம்மை யாருங் கொல்லமாட்டார்க ளென் றெண்ணி அஞ்சாமல் நிற்பது அதனியல்பாகு மென்றார்.

அவற்றை வினவியக் குடிகள் அருகக்கடவுளை வணங்கி எமதை யனே! தோற்றியுள்ள ஜெந்துக்களில் சிலது விஷமுள்ளதாயுஞ் சிலது விஷமற்றதாயுந் தோற்றுங் காரணம் யாதென்று வினவினார்கள்.

அன்பர்களே! காரணத்திற்குத்தக்கக் காரியமென்னும் ஏதுக்குத் தக்கச் செயல்களு முண்டாகும்.

அதாவது அக்கினியின் வெப்பமும் புழுக்கமும் உண்டாகு மிடங் களில் விஷமுள்ள ஜெந்துக்கள் தோற்றுவ தியல்பாம்.

வாயுவுங் குளிர்ச்சியும் நிறைந்த இடங்களில் விஷமற்ற ஜெந்துக் கள் தோற்றுவ தியல்பாம்.

இவ் விரண்டிற்கும் பூதபேதங்களே காரணமாகும். அதுபோல் உங்களுக்குள்ள காமாக்கினி கோபாக்கினியின் பெருக்கத்தால் விஷ மீறி மற்றவர்களை வஞ்சித்துந் துன்பப்படுத்தியும்வருகின்றீர்கள். அத்தகைய விஷத்தை நீங்கள் உள்ளடக்கி யுள்ளவர்களாதலின் மற்ற சீவர்களுக்கும் அதிகாரிகளுக்கும் ஒளிந்துவருகின்றீர்கள்.

உங்களுக்குள்ள மோகத்துவேஷ அக்கினி யவிந்து கொடு விஷம் நீங்கி சாந்தம் அன்பென்னுங் குளிர்ந்த நிலை பெருகி அமுதுண்ட கருணை முகங் காணும் அக்காலத்தில சருவ சீவன்களும் உங்கள்மீ தன்புபொரு ந்தி உங்களைவலை எதிர்நோக்கும். அதினால நீங்களுஞ் சுகமடைவீர்க ளென்றார்.

அக்கால் மலையின் உச்சி நிறம்பப் பெருங்கூட்டங்கட் சேர்ந்து அருளாழியான் அமுதவாக்கை நோக்கிநின்ற யாவரும் அவரடி பணிந்து தங்கள் சீர்பாதமே யடைக்கலம், சத்திய தன்மமே யடைக்கல மென் றார்கள்.

அவற்றை வினவிய அண்ணல் கூட்டத்தோரை நோக்கி அன்பர் களே! சீர்பாதமே தன்மபாதம். தன்மபாதமே சீர்பாதமாதலின் ததா கதரோதுந் தன்மபாதத்தை ஒவ்வொருவ ரிதயத்திலும் பதித்து விஷத் தைநீக்கி அமுதை நிறப்புங்களென்று தன்மபாதத்தை விளக்கலானார்.

## துவிதவாக்கியவர்க்கம்.

நம்முடைய எண்ணங்களே நாமா யிருக்கின்றோம், நம்முடைய எண்ணங்களே நமக்காதாரம், நம்முடைய எண்ணங்களால நாம் அமைந்தி

ருக்கின்றோம். ஒருவன் கெட்ட எண்ணங்களை எண்ணுவானாயின், கெட்ட செய்கைகளைச் செய்வானாயின் வண்டியை இழுக்கும் எருதின் காலை சக்கரமானது பின்பற்றித் தொடர்வதுபோல துக்கமானது தொடர்ந்தே நிற்கும்.

நம்முடைய எண்ணங்களே நாமா யிருக்கின்றோம், நம்முடைய எண்ணங்களே நமக்காதாரம், நம்முடைய எண்ணங்களால் நாம் அமைந்திருக்கின்றோம். ஒருவன் நல்ல எண்ணங்களை எண்ணுவானாயின் நல்ல செய்கைகளைச் செய்வானாயின் அவனது நிழலானது பின்பற்றித் தொடர்வதுபோல் சுகமானது தொடர்ந்தே நிற்கும்.

அவன் என்னை அவமதித்தான், அவன் என்னை அடித்தான், அவன் என்னைத் தோற்கடித்தான், அவன் என்னைவஞ்சித்தான் என்று எழும் எண்ணங்களுக்கு ஒருவன் இடங்கொடுப்பானேல் பகை அவனைவிட்டு அகலாது.

அவன் என்னை அவமதித்தான், அவன் என்னை அடித்தான், அவன் என்னைத் தோற்கடித்தான், அவன் என்னைவஞ்சித்தான் என்று எழும் எண்ணங்களுக்கு ஒருவன் இடங்கொடா திருப்பனேல் பகை அவனைவிட்டகலும், ஏனெனில் பகை பகையால் எக்காலத்தும் விலகுவதில்லை. பகை அன்பால் விலகும்.

எவனொருவன் ஐம்புல நுகர்ச்சி தென்படா பெருந் திண்டியிலும், சோம்பலிலும், விவேகக் குறைவிலு மிருந்து சிற்றின்பத்திற் கண்ணூந்து நிற்பவன் காற்றால் மோதுண்டு விழும் மரத்தைப்போல் மாரனால் கீழ்ப்பட்டு மடிவான்.

எவனொருவன் சுருசுப்பிலும், ஜாக்கிரதையிலும், விடாமுயற்சியிலும் நின்று புலன்கள் தென்படு நுகர்ச்சியினின்று தென்புலத்தானாகின்றானோ அவனைக் காற்றானது மலையை அசைக்காததுபோல மாரனுடைய மாறுபடுச் செய்கைகளால் அவனை மயக்கலாகாது.

சீலங்களைக் கவனியாதும், பாவத்தை யொழிக்காதும், சத்தியதரிசனமாம் நான்குவாய்மெய்களை அறியாதும் ஒருவன் இருப்பனேல் அவன் காஷாயமாம் சீவரத்தை தறிக்கத்தகுந்தவனல்லன்.

சீலங்களைப் பெற்று பாபத்தை யொழித்து நீதியில்நின்று சத்தியதரிசனமாம் நான்கு வாய்மெய்களை அறியும் சக்தியுள்ள ஒருவன் இருப்பனேல் அவன் காஷாயமாம் சீவரத்தை தறிக்க உத்தமனாவான்.

எவனொருவன் சத்தியத்தை அசத்தியமாகவும், அசத்தியத்தை சத்தியமாகவும் கருதுகின்றானோ அவனுக்கு சத்தியம் விளங்காது வீண் அவாவையே பின்பற்றி விரோதியாக நிற்பான்.

எவனொருவன் சத்தியத்தை சத்தியமாகவும், அசத்தியத்தை அசத்தியமாகவும் கருதுகின்றானோ அவனுக்கு சத்தியம் விளங்கி பற்றற்ற நிலையை பற்றி சகலருக்கும் அன்பனாக விளங்குவான்.

செவ்வனே திருத்திக் கட்டப்படாத கூறைவீட்டுள் மழைத்துளிகள் ஒழுகுதல்போல் ஞான விழிப்பும், விசாரிணையுமற்ற மனத்தின் வழியாய் காமக்குரோதாதிகள் நுழையும்.

செவ்வனே திருத்தி கட்டப்பட்ட கூறைவீட்டுள் மழைதுளி நுழையாததுபோல் ஞானத்தில் சதா விழிப்பும், ஜாக்ரதையுமுள்ள மனத்தின்வழியாய் காமக்குரோதாதிகள் நுழையமாட்டாது.

சீலமற்றவன் துக்கத்திலாழ்ந்திருப்பான். அவன் செய்துவந்த பாபங்களை நினைத்து மிக்க வியாகூலமடைவான். அவன் பாபவழியை அநுசரிக்கும்போது அதிக துக்கமடைகிறான்.

சீலத்தை அநுஷ்டிப்பவன் ஆனந்தத்திலிருப்பான். அவன் செய்துவந்த நற்கன்மங்களை நினைத்து மிக்க ஆனந்தமடைவான். அவன் நல்லவழியை அநுஷ்டிக்கும்போது சொல்லவொண்ணா ஆனந்தமடைகின்றான்.

சிந்தனையற்ற ஒருவன் பெருத்த நீதிவசனங்களை பிறருக்கு ஓதியும், தான் அந்நீதிகளின்படி நடவாது காமம், வெகுளி, பொறாமை யிவற்றி லிருப்பானாயின் அவன் ஏனையோரது மாடுகளைக் கணக்கெடுக்கும் இடையனாவான்.

விவேகி ஒருவன் ஒரு சிறு நீதிவசனத்தை பிறருக்கு போதித்து காமம், பகை, குடிகெடுப்பு, வஞ்சினம் இவைகளற்று நீதியில நின்று மன அமைதி பெற்று, உலக பற்றற்றுவருவனேல் அவனே சிரமண நிலைக்கு சமமாவான்.

## பண்டிதவர்க்கம்.

சகோதிரர்களே! அறிவுடையோன் ஒருவன் நித்தியவழியைக் காட்டி அநித்தியவழிகளைப் போகும்படி போதிப்பானேல் அவன் வழியைப் பின்தொடருங்கள்.

புத்திமதி கூறவும், நன்மார்க்கத்தை போதிக்கவும் அவனுக்கிடங்கொடுங்கள். கெட்டவை இவையென தெளிவாக் காட்டப்படும். அவன் நல்லோரால் புகழப்பட்டுத் தீயோரால் இகழப்படுவான் தீயோருடன் நேசம்பாராட்டாதீர்கள். [illegible] அவ்வகங்களை அணுகாதீர்கள். மேலோராம் விவேகிகளின் நேசம் பாராட்ட பன்முறை அணுகுங்கள்.

அறிவுடையோர் புகழ்ச்சியாலும் இகழ்ச்சியாலும் நிலைகுலையார்கள். அவர்களோ சதா நீதிபுணர்வினின்று அலையற்ற தடாகம்போல் ஆறுதலுற்றிருப்பார்கள்.

## பிராஹ்மணவர்க்கம்.

சகோதிரர்களே! எவனொருவன் அவாவை அறுத்து துக்கசாகரமென்னும் பெருங்கடலை நீந்தி கரைசேர்ந்து அமிர்தமாம் நிருவாணத்தை யடைந்தானோ அவனே பிராஹ்மணன்.

எவனொருவன் அறிவுடையோனாகவும், குற்றமற்றவனாகவும், ஒரே நிலையானவனாகவும், காமமற்றவனாகவும், மேலான பதவியை யடைந்தவனாகவு மிருக்கின்றானோ அவனே பிராஹ்மணன்.

பகலில் சூரியனும், இரவில் சந்திரனும், கவசத்தால் போர்வீரனும், தியானத்தால் பிராஹ்மணனும் பிரகாசிப்பதுபோல் ததாகதர் இரவும் பகலும் சதா விழிப்புள்ளோரகத்து பிரகாசிக்கின்றார்.

பாபத்தினின்று விலகினபடியால் பிராஹ்மணனென்றும், சாந்த வாழ்க்கையில் நடப்பதால் சமணனென்றும், பாப குற்றங்களை விலக்கிவருகிறபடியால் பிரவர்ஜிதனென் றழைக்கப்படுவான்.

மனோ வாக்கு காயத்தால் ஜீவர்களுக்கு யாதொரு துன்பமும் செய்யாதிருப்பவனெவனோ அவனே பிராஹ்மணன்.

கடுகை ஊசியின் நுனியிலிருந்து விழச்செய்வதுபோல் எவனொருவன் கோபம், பொறுமெய், பெருமெய், பகை இவைகளை விட்டொழிக்கின்றானோ அவனே பிராஹ்மணன்.

யாவர்பேரிலும் குற்றங் குறை கூறாதும், கொலை செய்யாமலும், கொலைசெய்ய ஏதுவாகா திருப்பவன் எவனோ அவனே பிராஹ்மணன்-

ஆவலோ டலைபவர்களின் மத்தியில் ஆவலில்லாமலும், கோபமுள்ளவர்களின் மத்தியில் கோபமில்லாமலும், பொய்யர்கள் மத்தியில் மெய்யர்களாகவும் வாழ்கின்றவனெவனோ அவனே பிராஹ்ணன்.

துன்பஞ் செய்வோர்களை துன்பஞ்செய்யாது துன்ப மின்றியும், வஞ்சகமுற்றோர் மத்தியில் வஞ்சமின்றியும் வாழ்பவன் எவனோ அவனே பிராஹ்மணன்.

ஓ சகோதிரர்களே! எவனொருவன் இவ்வுலகில் நல்லவை, தீயவை இவைகளுக்கு அதீதப்பட்டவனும் துக்கம், துர்குணம், பாபம் என்னும் கட்டுகளினின்றும் விலகினவனெவனோ அவனே பிராம்மணன்.

எவனொருவன் பரிசுத்தமும், மன அமைதியும், துராசையுமற்றிருக்கின்றானோ அவனே பிராம்மணன்.

எவனொருவன் சேறுள்ள பாதையையும், கடக்கமுடியாத உலகத்தையும், இவ்வுலகத்தின் பெருந் துக்கத்தையுங் கடந்து அக்கரையைச் சேர்ந்து கபடமற்றவனும், திருப்தியும் யோசனையுமுடையவனெவனோ அவனே பிராம்மணன்.

எவனொருவன் இவ்வுலகில் உலகபற்றற்றவனும், துறவியாகத் திரிபவனும், மோகமற்றவனுமாக விருப்பவனெவனோ அவனே பிராம்மணன்.

எவனொருவன் இன்பத்திற்கும், சுகத்திற்கும் இடங்கொடாதும், சாந்தரூபியாயும், பாப உலகத்தை வென்ற வீரனாகவு மிருக்கின்றானோ அவனே பிராம்மணன்.

பிறவிக்கு ஆளாக்குமார்க்கம் இது, பிறவியை வெல்லும் மார்க்கம் இது எனவும் தெரிந்து சகலபற்று அற்ற பகவனும் புருஷ உத்தமன் பற்றிய பற்றைப் பற்றினவனெவனோ அவனே பிராம்மணன்.

உலக பற்றற்றவனும், ஏழையுமா யிருப்பவ னெவனோ அவனே பிராம்மணன்.

முற்பிறப்புக்களைத் தெரிந்தவனும், மோக்ஷம் இது நரகமிதுவென அறிந்தவனும், பிறப்பற்றவனும், பரிபூரண ஞானியும், பெருந் துறவியும், பரிசுத்தனுமானவனெவனோ அவனே பிராம்மணன்.

## தண்டவர்க்கம்.

ஓ சகோதிரர்களே! இவ்வுலகில் மனுக்கள் தண்டனைக்கு நடுங்குகின்றனர். மரணத்திற்குப் பயப்படுகின்றனர். நீங்கள் எல்லோரும் அவர்களைப்போன்றவர்களன்றோ ஆகையால் கொலைபுரியா திருங்கள். கொலைக்குக் காரணக்கர்த்தர்களாக யிரா திருங்கள்.

இவ்வுலகில் மனுக்கள் தண்டனைக்கு நடுங்குகின்றனர். பிராணனை காப்பாற்ற முயல்கின்றனர். நீங்கள் எல்லோரும் அவர்களைப்போன்றவர்களன்றோ. ஆகையால் கொலைபுரியா திருங்கள். கொலைக்குக் காரணகர்த்தர்களாக யிரா திருங்கள்.

தன்சுகத்தைக் கோறும் ஒருவன் அதேசுகத்தைக்கோறும் ஏனைய ஜீவர்களை தண்டித்தும், கொலை புரிந்தும் வருவனேல் அவன் சுகத்தை அடையவேமாட்டான்.

தன்சுகத்தைக்கோறும் ஒருவன் அதேசுகத்தைக்கோறும் ஏனைய ஜீவர்களை தண்டியாதும், கொலை புரியாதும் வருவனேல் அவன் சுகத்தை அடைவான்.

எவரையும் கடுஞ்சொற்களால் சுடாதிருங்கள். ஏனெனில் கடுஞ்சொற்களே உங்களைச்சுட திரும்பும். கோபமான வார்த்தை துன்பத்தையுண்டாக்குவதுடன் பெரும் விபத்தையும் நேரிடச்செய்யும்.

வெங்கல மணியின் நாக்கை எடுத்துவிட்டால் சப்தம் இல்லாமற் போமன்றோ. அதுபோல் உங்களின் இராக துவேஷ மோகங்களைத் தவிர்த்துவிட்டால் அமிர்தமாம் நிப்பானத்தை அடைவீர்கள். விவாகம் உங்களை அணுகா.

இடையனொருவன் தன் கோலின் உதவியினால் பசுக்களை சாலைக்கு நடத்திச்செல்வனே அதுபோல் வயதும், மரணமும் ஜீவர்களை நடத்திச் செல்கின்றன.

இவ்வுலகில் ஒருவன் அம்மணமாயிருந்தாலும், ரோமங்களைத் தொங்கவிடக்கொண்டிருந்தாலும், தினேதினே நீரில் முழுகினாலும், பசியால் வருந்தினாலும், பூமியில் நெடுகப் படுத்திருந்தாலும, கறகளால் தேகத்தைவாதைசெய்தாலும் அசையாது உட்கார்ந்திருந்தாலும் அவாவை வெல்லாதவன் ஒருக்காலும் பரிசுத்தனாகமாட்டான்.

பழகிய குதிரையானது சாட்டையால் தொட்டவுடன் சுருசுருப்பாய் ஓடுமோ அதுபோல் உண்மையாலும, நற்குணத்தாலும், முயற்சியாலும் தியானத்தாலும் ஒருவன் பெருங்கடலாகிய துக்கசாகரத்தை வென்று ததாகதநிலையை யடைவான்.

கிணற்றுநீறை வேண்டிய இடங்களுக்குக் கொண்டுபோவதுபோலும், அம்பை தன் மனதிற்கிசைந்தவாறு வளைப்பதுபோலும், மரகட்டையை மனவிச்சைப்படி செப்பனிடுவதுபோலும அறிவுடையோர் தங்களை ஒழுங்குபடுத்திக்கொள்ளுவார்கள்.

## லோகவர்க்கம்.

ஓ சகோதிரர்களே! அநீதிமார்க்கத்தை அநுசரியாதீர்கள். வேசையற்று வாழாதீர்கள். தப்பான மார்க்கங்களை பின்தொடராதீர்கள்.

நீதிமார்க்கத்தை அநுசரியுங்கள். பாபமார்க்கத்தை விலக்குங்கள். ஏனெனில் நீதியால் இவ்வுலகில் பாக்கியவான்களாகலாம்.

இவ்வுலகம் நீர்க்குமிழியையும், கானலையும் ஒத்தது என அறியுங்கள். அறிந்த ஒருவனிடத்தில் இயமனென்னுங் காலன அணுகமாட்டான்.

சகல ஆடம்பரம் பொருந்திய இவ்வுலகை சக்கரமென நினையுங்கள். அறிவுள்ளோர் அதினின்று விலகிக்கொள்வர். அறிவிலார் அதனைக் கவர்ந்து நிற்பர்.

எவனொருவன் முன் கவலையற்றவனாயிருந்து பின் தெளிந்து அறிவுடையோனாகின்றானோ அவன் மேகத்தால்கவரப்படாத சந்திரனைப்போல் உலகில் பிரகாசிப்பான்.

இவ்வுலகம் இருளாயிருக்கின்றது. சிலரால் பார்க்க முடியும். வெகு சிலர் வலையினின்று தப்பும் பட்சிபோல் உலகினின்று தப்பித்துக் கொள்வார்கள்.

தருமசிந்தை யில்லாதவன் தெய்வ நிலையை யடையமாட்டான். அறிவற்றவனெவனோ அவன் ஈகையைப்பற்றி இகழ்வான். அறிவுள்ளோர் ஈகையைப்பற்றிப் புகழ்வார். அதே ஈகையில் வாழ்வார்கள்.

உலகையே ஆள்வதைவிட, உலகில் கீர்த்தி பெறுவதைவிட நிர்வாண பாதையாம் முதற்பாதையாகிய ஸ்ரோதாபதி மார்க்கத்தை அடைவதே சிரேஷ்டம்.

## பிக்குவர்க்கம்.

ஓ சகோதிரர்களே! கண்விஷயத்தில் ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம். செவிவிஷயத்தில் ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம். நாசிவிஷயத்தில் ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம். நாவுவிஷயத்தில் ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம்.

தேகவிஷயத்தில் ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம். வாக்குவிஷயத்தில் ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம். காயவிஷயத்தில் ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம். சகலவிஷயத்திலும் ஜாக்கிரதையாயிருத்தல் உத்தமம். சகலவிஷயத்திலும் ஜாக்கிரதையாயுள்ள பிக்ஷு சகலதுக்கத்தினின்று விலகினவனாவான்.

எவனொருவன் கையை காத்துக்கொள்பவனையும், காலைக் காத்துக் கொள்பவனையும், வாக்கைக் காத்துக்கொள்பவனையும், சகலத்தையும் காத்துக்கொள்பவனையும், தனக்குள் ஆனந்தத்தையும், சாந்தத்தையும், அடைந்தவனையும், ஏகாந்தமானவனாகவும், ஆறுதலையுடையவனாகவும் இருக்கின்றானோ அவனே பிக்ஷு.

நாவைக் காத்துக்கொண்ட பிக்கு ஒருவன் அறிவுடனும், சாந்தத்துடனும் பேசுவான். ஞானத்தின் அர்த்தங்களையும், நீதியின் தெளிவையும் போதிக்கும் பிக்குவின் வார்த்தை அமிர்தமாக விருக்கும்.

நீதியின்பிரகாரம் நடப்பவனெவனோ அவன் நீதியில் ஆனந்தத்தை யடைகின்றான். நீதியில் தியானத்தை செலுத்துகின்றவன் நீதியின்படி நடக்கின்றான். அவ்வகைத்தான பிக்கு நீதியினின்று பிறழான்

தனக்கு கொடுக்கப்பட்டவைகளை அலட்சியஞ்செய்யாமலும், யாவரையும் விரோதியாமலு மிருக்கட்டும். பிறனை விரோதிக்கின்ற துறவி சித்தசாந்த நிலையை அடையமாட்டான்.

எவனொருவன் நாமரூபமாம் தேகத்தையும், சித்தத்தையும் ஒரு பொருட்டாக மதியாதும், மேலும் மேலும் பொருள் சேர்க்கும் அவாவில்லாதும், மேலான பதவியை நாடுகின்றானோ அவனே பிக்கு.

அன்பையே சதா சாதிப்பவனும், புத்ததாது தன்மத்தில் அடங்கினவனுமான பிக்கு அமிர்தமாம் நிப்பானத்தை யடைவான்.

ஓ பிக்குக்களே! இப்படகை காலிசெய்யுங்கள். அப்படிச் செய்வதால் படகானது சுருக்காகச் செல்லும், காமத்தையும், பொறாமையையும் விட்டகலுங்கள். நிப்பானத்தை யடைவீர்கள்.

ஓ பிக்குக்களே! தியானியுங்கள். சிரத்தையற்றவர்களாயிராதீர்கள். இன்பத்தைத் தரும் வழிகளுக்கு உங்களுடைய எண்ணங்களை செலுத்தாதீர்கள்.

ஏனெனில் நீங்கள் சிரத்தையற்றும் உங்களை குடிகெடுக்கும் நெஞ்சத்துக்கு இடந்தருவீர்களாகில் துக்கமென்னும் அக்கினியில் சிக்கி வாதைப்படல் வேண்டும்.

அறிவில்லாவிடத்து தியானங் கிடையா. தியானமில்லாவிடத்து அறிவு கிடையா. எவனொருவன் அறிவோடும், தியானத்தோடு மிருக்கின்றானோ அவனே நிப்பான பதவிக்கு சமீபத்தி லிருப்பவனாவன்.

தேகத்தின் நான்கு பூதங்களின் உற்பவத்தையும், இவைகளின் அழிவையுங் கண்டவனெவனோ அவன் ஆனந்தத்தையும் சுகத்தையும் தரும் அழிவிலா நிப்பானத்தைப் பெற பாத்தியதையுடையவனாவான்.

## சுகவர்க்கம்.

ஓ சகோதிரர்களே! சுகத்துடன் வாழ உங்களுக்கு மனம் வாய்க்குமேல் உங்களை வெறுப்பவர்களை நீங்கள் வெறுக்காமல் அவர்கள் மத்தியில் வாழ்வீர்களாக. உங்களை வெறுப்பவர்களின் மத்தியில் நீங்கள் வெறுப்பின்றி வாழ்வீர்களாக.

சுகத்துடன் வாழ உங்களுக்கு மனம் வாய்க்குமேல் உங்களைத் துன்பஞ்செய்பவர்களை நீங்கள் துன்பஞ் செய்யாமல் அவர்கள் மத்தியில் வாழ்வீர்களாக. துன்பத்தை யநுபவிப்போர் மத்தியில் நீங்கள் துன்பமின்றி வாழ்வீர்களாக.

சுகத்துடன் வாழ உங்களுக்கு மனம் வாய்க்குமேல் வஞ்சகமுள்ளோர் மத்தியில் நீங்கள் வஞ்சகமின்றி வாழ்வீர்களாக. வஞ்சகத்தால் வாதைப்படுவோர் மத்தியில வஞ்சகமின்றி வாழ்வீர்களாக.

காமமே ஓர் பெருந்தீ. பகையே ஓர் கொடிய விஷம். தேகமே ஒரு பெருந் துன்பம். ஆனால் பற்றற்று ததாகத நிலையை யடைவதே பரம சுகம்.

நோய்களில் கொடிது பசி. துன்பங்களில் கொடிது தேகம் என அவ்வந்தரங்க சத்தியத்தை அறிந்தோனெவனோ அவனே பரமசுகத்தைக் கண்டவனாவன்.

ஆரோக்கியமே பரமலாபம். திருப்தியே பெருஞ்செல்வம். நன்மார்க்க நம்பிக்கையே விசேஷ சம்பத்து. நிப்பானமே பேரானந்தம்.

துறவுபூண்டு சாந்தநிலையின் சுகத்தைக் கண்டவனெவனோ அவன் பயமும், பாபமுமற்றவனாய் நீதியில சதா ஜாக்கிரதையுடனிருந்து நீதியின் சுகத்தில் ஆனந்தித்திருப்பான்.

அரியர்களை (அறஹத்துக்களை)த் தரிசித்தல் புண்ணியம். அவர்களுடன் வாழ்தல் சதா சுகத்தைத் தரும். ஒருவன் கீழோர்களாம் துன்மார்க்கர்களை தரிசியாதிருப்பானேல் அவன் சத்தியமாகவே சுகம்பெறுவான்.

கீழோர்களுடன் ஒருவன் பழகிவருவனேல் அவன் மிக்க துன்பத்தை அநுபவிப்பான். கீழோர்களிடத்தும், விரோதிகளிடத்தும் நேசம் பாராட்டல் சதா துக்கமே. மேலோர்களாம் நன்மார்க்கமுள்ளோரிடத்தில் ஒருவன் நேசம்பாராட்டிவருவனேல் அவன் தெளிவடைவதுடன் சுகம் பெறுவான்.

ஆகையால் ஒருவன் மேலோர்களிடத்தும், விவேகிகளிடத்தும், பண்டிதர்களிடத்தும், பொறுமையாளரிடத்தும், போதகாசிரியர்களிடத்தும், அறஹத்துக்களிடத்தும் அணுகி பழகவேண்டும்.

## மார்க்க வர்க்கம்.

ஓ சகோதிரர்களே! மார்க்கங்களில் * அரிய அஷ்டாங்க மார்க்கமே சிறந்தது. சத்தியங்களில் † சதுர்வித சத்தியமே விசேஷித்தது. ஒழுக்கங்களில் காமமற்றிருத்தலே சிரேஷ்டம். மனுக்களில் அன்பின்மிகுந்த பார்வையுள்ளோரே உத்தமமானவர். பரிசுத்தத்திற்கு வழி இதுவே, இதைவிட வேறுவழி கிடையா. இவ்வழியைப் பற்றிநில்லுங்கள். ஏனைய வழிகள் மாரனால் ஏமாற்றும் வழிகளே.

நீங்கள் இவ்வழியின்பிரகாரம் பழகிவருவீர்களாகில் துக்கத்தினின்று விடுபடுவீர்கள். சதையில் தைத்த முள்ளை பிடுங்கி எறிந்துவிடுங்கள்.

உங்களையே நீங்கள் சீர்படுத்திக்கொள்ளுங்கள். ததாகதர் போதிக்கும் ஆசான் இம்மார்க்கத்தை பின்பற்றி நடக்கும் அறிவுடையோனிடம் ‡ மாரன் அணுகான்.

உலகில் தோற்றும் பொருட்கள் யாவும் கெடும் என அறிந்தவன் துக்கத்தைக் கண்டு இஃதே அதற்கு மார்க்கமென அறிவன்.

மனோவாக்குக் காயத்தால் யாதொரு குற்றமும் செய்யாதிருக்கக் கடவன். இம்மூன்றுவழிகளைத் திருத்தி நன்மார்க்கத்தை விருத்திசெய்துவருவனேல் அறஹத்துக்கள் அடையும நிலையை அடைவான்.

---

* அரிய அஷ்டாங்கமார்க்கம்.

† சதுர்சத்யம்.

‡ மாரன்.

**அநுசரிக்கவேண்டியவை.**

அஷ்டாங்கமார்க்கம்.

3. சம்யக் வசனு — நல்வசனம்
4. சம்யக் காமந்தா — நற்செய்கை
5. சம்யக் அஜீவா — நல்வாழ்க்கை.

} 1. சீலம். நீதி.

6. சம்யக் வீரியா — நல்லூக்கம்.
7. சம்யக்ஸ்மிருதி — நல்லெண்ணம்.
8. சம்யக் சமாதி — நல் அமைதி.

} 2. சமாதி. மனஆறுதல்.

1. சம்யக்திருஷ்டி — நற்காட்சி.
2. சம்யக் சங்கல்ப — நற்சிந்தை.

} 3. பிரஞ்ஞு. ஞானம்.

**விலக்கவேண்டியவை.**

3. மிஸ்சாவசனு — துர்வசனம்.
4. மிஸ்சாகர்மந்தா — துற்செய்கை.
5. மிஸ்சா அஜீவா — துன்வாழ்க்கை.

} 1. அசீலம். அநீதி.

6. மிஸ்சா வீரியா — துன்முயற்சி.
7. மிஸ்சாஸ்மிருதி — துன்எண்ணம்.
8. மிஸ்சா சமாதி — மோஹம்.

} மோஹம்.

1. மிஸ்சாதிருஷ்டி — துற்காட்சி.
2. மிஸ்சாசங்கல்ப — துற்சிந்தை.

} 3. அஞ்ஞானம்.

சதுர்சத்யா.—1. துக்கசத்யா. 2. துக்கசமுதய சத்யா 3. துக்கநிரோத சத்யா. 4. துக்க நிரோதாகாமினி பிரதிபத சத்யா.

நான்கு வாய்மெய்.—1. துக்கம். 2. துக்கோற்பத்தி. 3 துக்க நிவாரணம். 4. துக்கநிவாரண மார்க்ம்

மாரன்.—1. தன்ஹா-வேட்கை. 2. அறட்டி-குரோதம். 3. ராகா – காமம்.

ஓ! சகோதிரர்களே! * மனோவாக்குக்காயத்தால் யாதொரு குற்றமுஞ் செய்யாதிருக்கக்கடவன். இம்மூன்றுவழிகளைத்திருத்தி நன்மார்க்கத்தை விருத்திசெய்துவருவனேல் அறஹத்துக்கள் அடையும் நிலையை அடைவான்.

எழுந்திருக்கவேண்டிய காலங்களில் எழாதவனும், நன்றுசெய்யவேண்டிய காலங்களிற் செய்யாதவனும், இளமையும் வலிமையுமிருந்தும் நிறம்ப சோம்பலும் மந்தபுத்தியுள்ளவனும் மனோதிடமற்றவனுஞ் சபலசித்தமுடையவனும், பேராசை ரூபியும், பெருந்துண்டிக்காரனும் தெளிவு பெறு மார்க்கத்திறகு பாத்திரவானாகமாட்டான்.

காமமென்னுங் காட்டை வெட்டி சமமட்டமாக்கிவிடுங்கள். ஒரு மாமேனுங் வளரவிடாதீர்கள். காமமென்னுங் காட்டினால் விளையுந் தீங்கோ கொரூரமானது. காட்டையும் வேரோடே வெட்டி சமமாக்கிவிட்ட போதன்றோ பிக்குக்களே நீங்கள் பயமின்றி காட்டின்வழி செல்ல முடியும்.

எதுவரையில் ஒருவன் ஒரு ஸ்திரீயின் பேரில் அவாவை சிறிதளவேனும்செலுத்தி அந்த அவாவினின்று விட்டகலாதிருக்கின்றானோ அதுவரையில் அவன் மனம் அடிமைத்தனத்தினின்று விலகாது. கன்றானது தன் தாயின் பாலை அடிக்கடி அருந்த ஆவல்கொள்ளுவது போலாகும்.

## தன்ஹா வர்க்கம்.

ஓ சகோதிரர்களே! அறிவிழந்தவனிடத்தினின்று உதிக்கும் அவாவானது கொடியைப்போல் படரும். அவன் காட்டிலுள்ள குரங்கானது ஒருமரத்தைவிட்டு வேறொரு மரத்தைத் தாவி பிடிப்பதுபோல் ஒரு பிறவியினின்று மறுபிறவிக்குச் செல்வான்.

அவாவை வென்ற ஒருவனை உலகத்தார் வெல்லமுடியாது. துக்கமானது தாமரை யிலையின்மேல் விழுந்த நீர் துளிகள் விழுந்துவிடுவது போல நீங்கிவிடும். ஒரு மரத்தை வெட்டினிலும் அதன் வேறிருப்பதால் திரும்ப வளருமன்றோ. வேறையே வெட்டிவிடின் மரம் உதிக்க ஏதுவுண்டோ. அவா அற்றவிடத்து துக்கம் ஒழியும்.

அவாவை இன்பத்தின்வழியே ஒருவன் செலுத்துவானாயின் அவனை முப்பத்தியாறு கூர்கால்களால் கொண்டுபோகப்பட்டு தப்புவழியில் சிக்கின அவனை அலைகள் அடித்துச்செல்லும். (காமக்குரோதாதிகள்.)

அக்கடற்கால்கள் பலவிடங்களில் ஓட காமக்குரோதாதிகளென்னும் படர்கொடியானது முளைத்து நிற்கும். அப்படர்கொடி துளிர்த்து வருவதைக் காணில் அறிவால் அதன் வேறை வெட்டித்தள்ளுங்கள்.

ஜீவர்கள் கோறும் இன்பங்களின் பெருக்கமோ அளவிடக்கூடாததும், திருப்திபற்றதுமா யிருக்கின்றன. காமக்குரோதாதிகளால் சிக்குண்டு இன்பத்தை நாடுவதால் ஜீவர்கள் மாறிமாறிபிறப்பதும இறப்பதுமா யிருக்கின்றனர்.

---

குற்றம்—தீவினை.

* காயத்தால் தோற்றுவ மூன்று.—1. கொலை. 2. களவு. 3. காமம்.

வாக்கால்தோற்றுவ நான்கு.-4. பொய். 5. கோட் சொல்லுதல். 6 கடுஞ்சொல் 7. வீண் வார்த்தை.

மனத்தால் தோற்றுவ மூன்று—8. அராசை. 9. படுபகை. 10 பொல்லாக் காட்சி.

## [தன்ஹாவர்க்கம்.]

ஜீவர்கள் அவாவால் செலுத்தப்பட்டு கண்ணியில் அகப்பட்ட முயல்போல் இங்குமங்கும் அலைகின்றனர். ஜீவர்கள் பலபல பற்றுக்களால் கட்டுண்டு பற்பல துன்பங்களை பலப்பலபிறப்புகளில் அநுபவித்துமாளாமல்பிறந்தும் இறந்தும்வருகின்றனர்.

ஜீவர்கள் அவாவால் செலுத்தப்பட்டு கண்ணியில் அகப்பட்ட முயல்போல் இங்குமங்கும் அலைகின்றனர். ஆகையால் சகோதிரர்களே! காமக்குரோதாதிகளினின்று விலகி அவாவிற்கு இடந்தராதுநில்லுங்கள்.

ஓ! சகோதிரர்களே! இரும்பாலாய விலங்குகளை ஒருபொருட்டாக மதியார். மனைவி, புத்திரர்கள், பொன் இவைகளினாலாய விலங்கே மிக்க பயங்கரமானதென்பர்.

அறிவுடையோர்களால் பயங்கரமானதென மதிக்கப்படும் விலங்கினின்று விடுபடுவது மிக்க கடினம். ஆயினும் அதினின்று விடுபட்டால் ஜீவர்கள் உலகைத் துறந்து கவலையற்று அவாவற்று இன்பத்துக் கிடந்தராது நிற்பர்.

சிலந்திப்பூச்சானது தன் நூலால் நெய்த வலையின் மத்தியிலிருந்து ஈயாவது, பட்டுப்பூச்சாவது தனது வலையில்விழுந்தால் திடீரென அவைகளின்பேரில் பாய்ந்து அவைகளின் சாரத்தை உறிஞ்சிவிட்டபின் பழைய விடத்திற்கு சென்று தங்குவதுபோல் காமவலையிலகப்பட்டவர்கள் பொறாமையால் சோர்ந்தும், கோபத்தால் பைத்தியம்பிடித்தும் அவர்களாலேயே தேடிக்கொண்ட அவாவென்னும் வெள்ளம் அடித்துச்சென்று கடக்க முடியாது விழிப்பர். அவாவை அறுத்துவிடுவார்களாயின் கடையில் உலகைத்துறந்து கவலையற்று இன்பத்துக்கிடந்தராது நிற்பர்.

ஒருவன் சந்தேகத்தால் அலைபவனாகவும், காமமுள்ளவனாகவும், இன்பத்திற்கே அண்ணாந்திருப்பவனாகவுமிருப்பானாயின் அவனது அவாவானது விருத்தியாகி அவாவின் விலங்கால் கட்டுப்பட்டவனாவான்.

பூரண ஸ்திதியை யடைந்தவனும், பாபமற்றவனுமாயிருப்பவனெவனோ அவன் வாழ்க்கையின் முட்களை உடைத் தெறிந்தவனும் இனி தேகத்துடன் வாழ பாக்கியத்தை யுடையவனுமாகமாட்டான்.

சகலத்தையும் வென்ற ஒருவன் சகலமும் அறிந்தவனாவன். சகலத்தையும் ஒழித்த ஒருவன் சகல அவாக்களினின்று விலகினவனாவன். சகலமும் உணர்ந்த ததாகதனான ஒருவன் தான்கண்ட காட்சியை யாவருக்கும் போதிப்போமென தேயுத்தரிவன்.

சகலதானங்களிலும் நிதானமே சிரேஷ்டம். சகல இன்பங்களிலும் நீதியின் இன்பமே விசேஷித்தது. ஆனந்தங்களில் ஈகையிலும், அன்பிலும் ஆனந்திப்பதே துக்கம் ஒழிந்துபோம்.

களைகளால் பயிர்கள் நாசமடைகின்றன. காமத்தால் ஜீவர்கள் அழிகின்றனர். ஆகையால் காமத்தையேவெட்டி எறிந்து விடுவதே சுகத்தைத்தரும்.

களைகளால் பயிர்கள்கெடுகின்றன. பொறாமையால் ஜீவர்கள் நாசமடைகின்றனர். ஆகையால பொறாமையற்று சாந்தத்துடன் வாழ்வதே பெரும் பலனைத்தரும்.

களைகளால் வயல்கள் நாசமடைகின்றன. பெருமையால் ஜீவர்கள் அழிகின்றனர். ஆகையால் பெருமையற்று சமதிருஷ்டியுடன் வாழ்வதே பரமசுகத்தைத் தரும்.

* களைகளால் வயல்கள் கெடுகின்றன. துராசையால் ஜீவர்கள் நாசமடைகின்றனர். ஆகையால் துராசையற்றிருப்பதே சுகத்தைவிளைக்கும்.

## புட்பவர்க்கம்.

ஆ! சகோதிரர்களே! வண்டானது மலரிலுள்ளமணத்தையேனும் அதன் அழகையேனுங் கெடுக்காமல் தேனை யுண்டு செல்லுவதுபோல் ஜீவர்கள் உலகத்தில் வாழ்க்கைப் பெறவேண்டும்.

விவேகியொருவன் அயலாரின் தாருமாறான நடத்தைகளைக் கண்டாயினும் அவர்களின் குற்றங்குற்றங்களை நோக்கியாயினுங் கவலையுறாமல் தான்செய்த குற்றங்களைப்பற்றியும், தன்னுடைய சோர்வைப்பற்றியும் கவலையுறுவான்.

ஒரு அழகிய புஷ்பமானது பலவருணங்க ளமைந்தும் மணமற்றிருப்பதுபோல் ஒருவன் இன்பமானதும் பிரயோஜனமற்றதுமான போதனைகளைக்கூறி அதன்படி நடவாதிருப்பன்.

ஒரு அழகியபுஷ்பமானது பலவருணங்களமைந்தும் பரிமளிப்பது போல் ஒருவன் இன்பமாகவும், பிரயோஜனமுள்ளதுமானபோதனைகளைக் கூறி அதன்படி நடப்பவனாகியுமிருப்பான்

பலபுஷ்பங்களைக்கொண்டு ஒரு மாலைக்கட்டுவதுபோல் பல நற்கருமங்கள் செய்துவந்தவன் புண்ணியபுருஷனாக அவதரிப்பான்.

புஷ்பங்களின் மணமானது காற்றின்முகத்தில் அதிதூரஞ்செல்லாது. ஆனால் புண்ணியபுருஷர்களின் மணமானது காற்றின்முகத்தில் அதிதூரமாகச்செல்லும் புண்ணியன் மணம் எங்கும் வியாபித்து வீசும்.

சந்தணம், தாமரைப்புஷ்பம் இவைகளின்கந்தமோ மிக்க மதிக்கத்தக்கது. ஆனால் இவ்வாசனைகளுக்கெல்லாம் அதீதப்பட்டது புண்ணியத்தின் மணமே

சந்தணம், தாமரைப்புஷ்பம் இவைகளினின்று வெளிவரும் கந்தமோ அற்பமானது. ஆனால் புண்ணியர்களின் மணமோ அளவிடக்கூடாததுமான தெய்வ மணமாம்.

புண்ணிய மணம் வீசும் பெரியோர்க ளிடத்தில் மாரன் அணுகான்.

சேற்றினின்று பரிமளத்துடன் தாமரைமுளைத்து இன்பந்தருவது போல் பேரவாவாகும் இருளில் அறிவுமயங்கி நிற்கும் மக்களுக்கு புத்த தன்மமாம் மெய்யறந் தோன்றுங்கால் பேரறிவு விளங்கும்.

## பாபவர்க்கம்.

ஓ! சகோதிரர்களே! கெட்ட எண்ணங்களைக்கொள்ளாமலும், கெட்ட செய்கைகளைச் செய்யாமலும் ஒழித்தலே நலமாகும். ஏனென்னில், சொற்பநேரத்திற் கெட்ட எண்ணங்களை எண்ணுவோனும், கெட்ட செய்கைகளைச்செய்வோனும் நீடியதுக்கத்தை அநுபவிக்கின்றான்.

நல்ல எண்ணங்கொள்ளுவோனும், நல்ல செய்கைகளைச் செய்வோனும் சதா சுகத்தை யநுபவிக்கின்றான். அவன் தன் நற்செய்கைகளுக்கு ஆனந்தமடைவான்.

பாபிக்குக் குற்றம் தேனைப்போலிருக்கும். அதன்பலனை யுணரும் வரையில் இன்பமாகவே நோக்குவான். அதன் பலனை யுணர்ந்தபின்பு பாபமென்று காண்பான். அதுபோல் புண்ணியவான் தன்மத்தின் பலனை உணரும்வரையில் அதனைபாரமாகவும் கஷ்டமாகவும்நோக்குவான். அதன் பலனும் சுகமும் விளங்கியபோது ஆனந்தத்தைக்கண்டடைவான்.

உங்களிடத்திற் தீவினை யணுகாதென்று அஜாக்கிரதையி லிருக்க வேண்டாம். சிறு துளிகள் சேர்ந்து பெருவெள்ளமாவதுபோல் சிறுக சிறுக சேர்ந்த தீவினைகள் பெருகி நிறம்ப துக்கத்தி லாழ்த்திவிடும்.

உங்களிடத்தில் நன்மையணுகாதென்று விலகிநிற்கா தீர்கள். உள்ள நன்மையின் செயல்களே சிறுதுளிகள் பெருவெள்ளமாவதுபோல் நாளுக்குநாள் பெருகி உங்களை நிறம்ப சுகத்தில் மூழ்கவைக்கும்.

ஓ சகோதிரர்களே! விழித்தவனுக்கு இரவு நீடித்திருக்கும். அயர்ந்தவனுக்குப் பிரயாணம் தூரமாயிருக்கும். அதுபோல் உண்மெய் உணர்ச்சியில்லாத அவிவேகிக்கு வாழ்நாள் கஷ்டமா யிருக்கும்.

வழிப் பிரயாணியொருவன் தனக்கு மேலான அந்தஸ்துடையவனுடனேனும், தனக்கு சமானமானவனுடனேனும் பிரயாணஞ் செய்யக்கடவன். வஞ்சகனுடனேனும், வழிபறிப்போனுடனேனுஞ் செல்லலாகாது.

இவர்கள் என்மக்கள் இவர்கள் எனக்கு சொந்தம் என்றும் இந்த சொத்து எனக்கு சுயாதினம் என்றும் எண்ணுகிற எண்ணமே ஒரு அவிவேகியை வாதைப்படுத்தும். தானே தனக்கு சொந்தமல்லாதபோது மக்களும் சொத்துக்களும் எவ்விதத்தில் சொந்தமாவார்கள்.

தன்னுடைய அவிவேகத்தை யறிந்த அவிவேகி அதுவரைக்கும் விவேகியாவான். தன்னை விவேகியென்று மதித்த அவிவேகி யதார்த்தத்தில் அவிவேகியாவான்.

அவிவேகி செய்த கெட்ட செய்கையின் பலன் உணரும் வரையில் தேனைப் போல் மதிப்பான். அதன் பலனை யுணர்ந்தபின் அதனை அநுபவிப்பதுமன்றி துக்கப்படுவான்.

விவேகியொருவன் மாதத்துக்கொருமுறை விடாது புல்நுனியளவு அன்னம் புசித்துவந்தாலும் நீதிமார்க்கத்தில்நடக்கும் ஒருவனுக்கு பதினாறில் ஒருபாகமேனும் சமமாகமாட்டான்.

துற்செய்கையானது பாலைக்கறந்தவுடன் கெடாதிருப்பதுபோல யிருக்கும். அனல்கொண்டு சாம்பலால் மூடப்பட்ட தீப்போல் துற்செய்கையானது தொடர்ந்தே நிற்கும்.

அவிவேகி யொருவன் தான் செய்த துற்செய்கையின் பலனை அறிந்தபோது துக்கப்படுகின்றான். துக்கப்படுங்கால் அவனிலிருந்த துலக்கம் நசிய துக்கமானது அவனில் பதிந்துவிடுகின்றது.

அவிவேகி யொருவன் தன் அவிவேகத்தை யுணர்ந்தபோது கீர்த்திக்கும் புகழ்ச்சிக்கும் நாளைக் கழிக்காது நிருவாண பாதையைக் கடைபிடிக்க முயல்வான்.

## நியாயவர்க்கம்.

ஓ! சகோதிரர்களே! கொடூரமாக ஒருவன் காரியத்தைநிறைவேற்றுவானாயின் அவன் நியாயவானாவனோ? இல்லை. இது தகுந்தது இது

தகாததென பகுத்தறியும் சக்தியும் ஏனையோர்களை அறிவுடன் செலுத்தும் மார்க்கமு மறிந்தவனெவனோ அவனே நியாயமுடையவன். தன்மவழியும், நீதிநிறையும் வாய்த்து நீதியுடனும் அறிவுடனும் நடத்துபவனெவனோ அவனே நியாயமுடையவன்.

ஒருவன் மிக்க சாமர்த்தியமாய் பேசுவதனால் கலைவல்லோனாவனோ? இல்லை. பொறாமையும் பயமுமற்று பொறுமையுட னிருப்பவனெவனோ அவனே கலைவல்லோனாவன்.

ஒருவன் மிக்க சாமர்த்தியமாய் பேசுவதனால் தன்மத்தை யுணர்ந்தவனாகான். ஒருவன் சிறிதளவு தன்மத்தை யறிந்து அதன்படி ஒழுகி வருவானாகில் அவனே தன்மம் தெரிந்து நீதியில் நடப்பவனாவான்.

உரோமம் நரைத்திருப்பதால் ஒருவனை பெரியோனெனக் கூற முடியாது. வயதில் பெரியவனா யிருக்கலாம். ஆனால் ஆசை நரைக்காவிடில் வயதால் பெரியோனென அழைப்பது வீணே.

எவனிடத்தில் சத்தியம், ஒழுக்கம், நட்பு, அடக்கம், மத்தியபாதை, பரிசுத்தம் இவைக ளமைந்திருக்கின்றதோ அவனே பெரியோன்.

பொறாமையும், பேராசையும் நாணயமும் பொருந்திய ஒருவன் அதிகம் பேசுவதால் மதிப்படையமாட்டான். பொறாமையும், பேராசையும், நாணயமும் பொருந்திய ஒருவன் மிக்க அழகுடையவனா யிருப்பதாலும் மதிப்படையமாட்டான்.

தலைமுண்டனஞ்செய்து சீலமற்று பொய்பகருவானாகில் அவன் சிரமணனாகமாட்டான். அவாவும், பேராசையும் மேற்கொண்ட ஒருவனை எவ்விதமாக சிரமணனென அழைக்கலாம்.

சகல பாபங்களையும் தன்னில் அகற்றி அவைகளுக் கிடந்தராது அடக்கமுடையவனா யிருப்பவனெவனோ அவனே சிரமணன்.

பிட்சாபாத்திர மேந்தி ஏனையோரிடத்தில் பிச்சை கேட்பதால் பிக்ஷுவாகமாட்டான். தன்மத்தில் பூர்த்திபெற்று பரிபூரண பயத்தாரத்தில் பழகிவருபவனும் பிச்சை கேட்க வருபவனெவனோ அவனே பிக்ஷு.

அவிவேகமும், அறியாமையும் பொருந்திய ஒருவன் மௌனமாயிருப்பதால் முனியாகமாட்டான். தன்னில் எழும்பும் தூர்க்கன்மங்களை யகற்றி நற்கன்மங்களை விருத்திசெய்துவருபவனெவனோ அவனே மோனமுடையவனென்றும் முனியென்றும் அழைக்கப்படும்.

கொலை செய்யாதிருப்பதால் ஒருவன் அறஹத்தாகமாட்டான். எவனொருவன் ஜீவர்கண்மீது காருண்யத்தைச்செலுத்துகின்றானோ அவனே அறஹத்தாவான்.

ததாகதர் சீலம், தபயோகம், தனிமெயாய் படுத்திருத்தல் இவைகளால்மட்டும் சுகத்தைப் பெறவில்லை. இந்த ரகசியத்தை உலகம் அறியாது. சகோதிரர்களே! ஜாக்கிரதையாயிருங்கள். அவா ஒழியுமட்டும் ஒன்றும் பெறப்போகிறதில்லை.

ஓ! சகோதிரர்களே! ஒருவன் தன்னை தீவைபோல் ஆக்கிக்கொள்ளட்டும், தன்மத்தில் சிந்தனையைசெலுத்தி ஞானியாகட்டும், சகல பாபகன்மங்களையும் ஊதிவிடட்டும், ஊதிவிட்ட அக்கக்ஷணமே அரியநிலையைப் பெற்றவனாவான்.

ஒருவன் தன்னை தீவைப்போல் ஆக்கிக்கொள்ளட்டும், தன்மத்தில் சிந்தனையை செலுத்தி ஞானியாகட்டும, சகல பாபகன்மங்களை ஊதிவிடட்டும், ஊதிவிட்ட அந்தக்ஷணமே மறுபடியும் பிறப்பதற்கும் இறப்பதற்கும் ஏதுவில்லாமற்போம்.

வெள்ளியின் அசுத்தத்தை சிறுகசிறுக தினைதினை சுத்திசெய்தல்போல் அறிவுடைய ஒருவன் தன்னிடத்திலுள்ள பாபகன்மங்களை சிறுகசிறுக தினைதினை விட்டொழிக்கட்டும்.

எப்படி இரும்பினிடத்திலிருந்து துரும்பு சேர்ந்து விருத்தியாகி இரும்பையே கெடுக்கின்றதோ அதுபோல் தவறுதலையுடையவன் தன் சொந்த தவறுதலால் பாபகன்மத்துக்கிடுபடுகின்றான்.

தன்மத்தை தினகாலஞ் சிந்தியாதிருத்தலே அன்றாடம் கறைப்படுத்துகிறது. சுறுசுறுப்பாயில்லாதிருத்தலால் குடும்பிகளை கறையாக்குகிறது. சோம்பலாயிருப்பதால் தேகத்தை கறையாக்குகிறது. அசட்டையாயிருப்பதால் பெருத்த காரியததை கறையாக்குகிறது.

துஷ்டசெய்கையே பெண்களுக்கு கறையாயிருக்கின்றது உபகாரிக்கு பேராசை கறையாயிருக்கின்றது. உலகில் செய்யும் சகல பாபகன்மங்களும் கறைப்படுத்துவனவா யிருக்கின்றன.

ஓ! சகோதிரர்களே! இந்தக் கறைகள் யாவற்றையும்விட பெருத்தது அறியாமையென்னும் கறையே இந்தக்கறையினின்று விலகி கறைபடாதிருக்க தப்பித்துக்கொள்ளுங்கள்.

வெட்கமற்றவனுக்கும், பெருமைய் பாராட்டுபவனுக்கும், தீங்கு செய்பவனுக்கும், பழிப்பவனுக்கும், துணிகரமுள்ளவனுக்கும், பகைக்கத்தக்கவனுக்கும் உலகின் வாழ்க்கை மிக்க எளிதாயிருக்கும்.

பரிசுத்தத்தையே நாடியும், தன்னயம் பாராட்டாமலும், அடக்கமும், குற்றமற்றும், அறிவுடனுமுள்ள ஒழுக்கநடையிலுள்ள ஒருவனுக்கு உலகின் வாழ்க்கை மிக்க கடினமாயிருக்கும்.

ஜீவவதை செய்தும், பொய்சொல்லியும், களவாடியும், விபச்சாரம் செய்தும், மயக்கத்தைத்தரும் மதுபானமருந்தியும் ஒருவன் வருவானாகில் அவன் தான் அடையப்போகும் பெரும்பேறறின் அஸ்திபாரத்தையே பெயர்த்துவிடுகின்றான்.

அளவுகடந்து செய்யும் துற்செய்கையானது கெட்ட ஸ்திதிக்குக் கொண்டுபோகுமென்றுணருங்கள். பேராசையும், பொல்லாங்கும் வெகுநாளைக்கு நிலைக்காதென்று கண்டு ஜாக்கிரதையாயிருங்கள்.

காமமே ஓர் பெருந்தீ, கோபமே ஓர் கூருள அம்பு, அறிவீனமே ஓர் கண்ணி, பேராசையே ஓர் பெருமழையா யிருக்கின்றது.

பிறர் குற்றத்தை யுணர்வது எளிது. தன் குற்றத்தையுணர்வது அறிது. அயலான் குற்றத்தை பதரைப்போல் பிடுங்கிக்காட்டுவான். தன் குற்றத்தை நஞ்சரவம்போ லொளிப்பான்.

ஆகாயமார்க்கமாக ஓர் பாதையுங் கிடையா. வெளியரங்கமான செய்கையால் ஒருவன் சிரமணனாகமாட்டான். உலகம் பெருமையில் ஆனந்திக்கின்றது. அறவணவடிகள் பெருமையற்றிருப்பர்.

ஆகாயமார்க்கமாக ஓர் பாதையுங் கிடையா. வெளியரங்கமான செய்கையால் ஒருவன் சிரமணனாகமாட்டான். நிலையாக உள்ள ஜீவன்கள் கிடையா. அறவணவடிகளே எக்காலுமுளர்

உலகில் மனிதர்களாய் பிறப்பதே அரிது. அதில் நீதிமான்களாய் நடப்பது அதிலும் அரிது. அதிலும் சத்தியதன்மத்தைக் கேட்டல் அரிது. அதிலும் பிறப்பை வென்று நிப்பாணம் பெறுவது அதிலும் அரிது.

## சம்மா சம்புத்தவர்க்கம்.

ஓ! சகோதிரர்களே! மனுக்களாய் பிறப்பது கடினம், மானுஷீக தன்மம் வாய்ப்பது கடினம், சத்திய தன்மத்தைக் கேட்பது கடினம், பரிபூரணநிலையைப் பெறுவது கடினம்.

பாபஞ்செய்யா திருத்தல், நன்மெய்க் கடைபிடித்தல், இதயத்தை சுத்திசெய்தல் இஃதே பகவனது போதனை.

சாந்தமா யிருத்தலே அகோரதபம் செய்வதாகும். பலநாள் துன்பத்தை யநுபவித்தல் பேரின்பத்தைப் பெற யேறும். ஏனெனில் பல ஜீவர்களைப்பற்றி கேடுநினைத்துவந்தவன் சிரமணனுமல்ல. பழிகூறாமலும், வையற்சொற்கூறாதும் புலனையும், மனதையும் ஒடுக்கி நீதியில் நின்று மிதமின்றி உண்ணாமல் தனிமெயா யுட்கார்ந்து உறங்கும்போதும், விழித்திருக்கும்போதும் மேலான எண்ணங்களில் சித்தத்தை செலுத்தல்வேண்டும். இவைகளே பகவனது போதனை.

காம இச்சைக்கு திருப்திசெய்தல் கூடாதகாரியம். தங்கப் பொடிகளை மழைபோல் சொரிந்தாலும் திருப்திசெய்ய முடியாது. காம இச்சையின் அளவையும் அதனால் நேரும் துன்பத்தைக் கண்டறிந்தவனெவனோ அவனே அறிவுடையோன்.

சகல அவாக்களையும் பற்றற்று நிற்கும் துறவிக்கு பற்றற்று நிற்றலிலேயே ஆனந்தமயமா யிருப்பான். உலகில் ஜீவாகள் நாடிநிற்கும் ஆனந்தத்தில் திருப்தியற்றவனா யிருப்பான்.

ஜீவர்கள் பயத்தால் பலவிடங்களிற் சென்று அடைக்கலம் புகுகின்றனர். மலைகளுக்கும், காடுகளுக்கும் செல்கின்றனர். தோப்புகளையும், மாங்களையும் தேடிச் செல்கின்றனர், ஆனால் இவ்வகைத்தான அடைக்கலம் சுகத்தைத் தாராது. ஏனெனில் அங்கு சென்றும துக்கத்தினின்று விடுபடாமலிருக்கின்றான்.

எவனொருவன் புத்ததன்ம சங்கமென்னும் மும்மணியில் அடைக்கலம்பெற்று துக்கம், துக்கோற்பத்தி, துக்கநிவாரணம், துக்கநிவாரணமார்க்கம் இன்னவை யென அறிந்து துக்கத்தினின்று விடுவிக்கும் பரிசுத்த அரிய அஷ்டாங்கமார்க்கத்தை அனுஷ்டிக்கின்றானோ அவனே மேலோன். இதுதான் மேலான அடைக்கலமும் பயங்காமற்றதுமான அடைக்கலமும் பெறல். இவ்வகையான அடைக்கலம் பெறுவதால் ஜீவர்கள் துக்கத்தினின்று விடுபட்டவர்களாவார்கள்.

போவாவை யொழித்தலே சுகவழியும் சிறந்த தருமமுமாகும்.

எல்லா தருமங்களைப்பார்க்கினும் புத்த தருமமென்னும் மெய்யறமே சிறந்தது. அம்மெய்யறமே மெய்ப்பொருளை விளக்கும். அம்மெய்ப்பொருள் விளக்கமே மெய்யின்பமாம் பேரின்பம் பயக்கும். அப்பேரின்பமே துக்கநிவாரணமாகும்.

போவாவாகிய நதியைக்கடந்து அக்கரையாம் நிருவாணமடைபவர்கள் உலகிற் சிலரே. ஆயினும் பலரோ அந்நதியின் கரையோரங்களில்

அங்குமிங்கும் ஓடுகிறவர்கள். ஆனால் அந்நதியைக் கடந்தவர்களுக்குத் தான் துக்கமில்லை. சேற்றினின்று பரிமளத்துடன் தாமரை முளைத்து இன்பந்தருவதுபோல் போலவாகும் இருளில் அறிவுமயங்கி நிற்கும் மக்களுக்கு புத்ததன்மமாம் மெய்யறந்தோன்றுங்கால் பேரறிவு விளங்கும்.

பொய்யர்கள் மத்தியில் மெய்யர்களாக வாழ்வீர்களாக. பொய்யர்கள் பாதையை உங்கள் மெய்யில் விளக்குவீர்களாக.

கொலைஞர்கள் மத்தியில் சீவகாருண்யர்களாக வாழ்வீர்களாக. கொலைஞர்கள் மத்தியில் உங்கள் காருண்யத்தை விளக்குவீர்களாக.

ஓ! சகோதிரர்களே! காமியர்கள் மத்தியில் நிஷ்காமிகளாக வாழ்வீர்களாக. காமியர் பிணிவாதையில் நீங்கள் கலவாமல் வாழ்வீர்களாக.

மயக்கவஸ்துவை யருந்துவோர் மத்தியில் நீங்கள் மயங்காமல் வாழ்வீர்களாக. மதிமயக்குங் கூட்டத்தோரின் மயக்கையகற்றி வாழ்வீர்களாக.

களவுசெய்வோர் மத்தியில் நீங்கள் களவின்றி வாழ்வீர்களாக. களவுபொருட் கிட்டினும் அதைக் கண்காணு தகலுவீர்களாக.

அன்பர்களே! பகலில் சூரியனும், இரவில் சந்திரனும், கவசத்தால் போர்வீரனும், யோசனையால் ஞானியும் பிரகாசிப்பதுபோல் ததாகதர் இரவுபகலற்றவிடத்தும், * சதாவிழிப்புள்ளோரகத்தும் பிரகாசிக்கின்றாரென்று தனது தன்மபாதகீதையை நிறுத்தினார்.

தருமராஜனவர் தன்மபாத போதத்தை யிருவகையால் விளக்கி ஒவ்வொருவர் இதயமும் உருகி அன்பு ததும்ப போதித்தபோது சருவசீவர்களின் உள்ளங்கள் யாவும் பரவசமுற்றதுமன்றி அவர் பாதம் படிந்திருந்தக் † கல்லும் உருகி கமலபாத ரேகைப்பதியப்பெற்றது.

உதயகாலத்தி லுச்சிமலையேறி பதினைந்து நாழிகைவரையில் தன்மபாதத்தை விளக்கியபோது அவரை சுற்றிலுமிருந்த மக்கள் யாவரும் தங்கடங்கள் சிந்தைகள் யாவையும் வேறு செலுத்தாது ததாகதர் போதத்தை நோக்கிநின்றவர்களாதலின் அவர்போதம் நின்றவுடன் களைந்து தாகவிடாயின் மிகுதியால் தவிக்கலாயினர்.

அவர்கள் தவிப்பையுணர்ந்த வண்ணல் தனது ‡ ஏகசடையைக் காத்திலேந்தி நீட்டியபோது அதனினின்று பெருகிய நீர்ப் பிரவாகமாய்ப் பரந்து சகல சீவர்களும் பருகி விடாய் தீர்ந்தனுகள்.

---

* சூளாமணி. — ஒளியாகி உலகாகி நீவிரிந்தா யென்கோ, உலகெலா நின்னொளியி னுள்ளடங்கிற்றென்கோ, வளியாரவுலகநீ யாள்கின்றாயென்கோ, வமருலகு தானின்ன தடியடைந்ததென்கோ, விளியாத மெய்ப்பொருளை நீவிரித்தாயென்கோ, நீவிரித்தவாறே மெய்ப்பொருள் விரிந்ததென்கோ, தெளியாம லில்லை நின் திருவடிகண் மெய்மெய், தெளிந்தாலுஞ் செவ்வனே தெரிந்துரைக்கலாமே.

† அருங்கலைச்செப்பு.

சொற்சுவைபத்து. — கல்லுமுருகிக் கமலத்தைப் பெற்றதெனில், சொல்லுமுருகாததென்.

‡ வீரசோழிய உதாரணச் செய்யுள். — குறியாரெனவே புனலின் மீ, துறுதாமரைமே லுறைவார் தா, நெறியார் சடையாய் நின்பாத, மறிவா ரினியாரறிவாரே.

புரிவுள சடையும் புரிவுள சடைமேற், புனலும் பிறழுமே.

அருங்கலைச்செப்பு.

காக்கல்பத்து. — வினைதீர்த்தான் தாகவிடாய்தீர்த்தான் கங்கை, முனைபோர்த்தானன்றே முநி.

சீவகசிந்தாமணி. — இலங்க வாழியினான் களிற்றீட்டம்போற், கலங்கு தெண்டிரை மேய்ந்து கணமழை, பொலங்கொள் கொன்றையினான் சடைபோன் மின்னி, விலங்கல் சேர்ந்து விண்ணேறி விட்டார்த்தவே.

பாறையெங்கும் கங்கைப்பிரவாகமுற்றிருப்பதைக் கண்ட கருணாகரன் * அங்குள்ள அன்பர்களைக்கொண்டு அவ்விடம் பரவும் அருவி நீரோடையை அடிவாரத்திற் கொணர்ந்து சகலசீவர்களுக்கும் உதவும்படி அவாரமிட்டு மலையின் அருவிநீர் பூமியில் வற்றாமல் ஓடி சீவர்களைக் காக்கும்படி செய்துவிட்டார்.

அம்மலையிற் செய்த ஜலதாரை வழிக்கு பகவன் பெயரில் ஒன்றாகிய அரித்துவாரமென்னும் பெயரைக்கொடுத்ததுமன்றி அக்கங்கைநதி பெருகியோடுதற்கு கங்கைநதியென்றும் புத்தபிரானே யதற்கு ஆதாரமாயிருந்தபடியால் அவரை கங்கையாதாரனென்றும் போற்றினார்கள்.

* இத்தகைய ஜடாபாரத்திற் றோன்றிய கங்கையென்னும் மகத்துவத்தைக்கொண்டு சகலதேசத்தோர்களு மவற்றை தரிசிப்பதுடன் தன்ம சங்கத்தோர்களும் பூரணச்சந்திர நாள்நோக்கி அவ்விடம் சென்று தங்கள் தவத்தையும் முடிக்க வாரம்பித்துக்கொண்டார்கள்.

ஆதிநாள் அறக்கதிர் விளக்கிய ஒப்பிலா அப்பன் அருமொழியை யநுசரித்தே பின் அறவுரைச் சந்ததியாரும் திரிமந்திராலோசனை விளக்கியிருக்கின்றார்கள்.

**சிலப்பதிகாரம்.**

*தெய்வந் தெளிமின் றெளிந்தோர் பேணுமின்*
*பொய்யுரை யஞ்சுமின் புறஞ்சொற் கூறன்மின்*
*ஊனூண் அகற்றுமின் உயிர்கொலை யஞ்சுமின்*
*தானஞ் செய்மின் றவம்பல தாங்குமின்*
*செய்நன்றி மறவன்மின் றீனட் பிகழ்மின்*
*பொய்க்கரி போகன்மின் பொருண்மொழி நீங்கன்மின்*
*அறவோ ரவைக்கள மகலா தணுகுமின்*
*பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்*
*பிறர்மனை யஞ்சுமின் பிழையுயி ரகலுமின்*
*அறமனை காமி பொல்லவை கடிமின்*
*கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்*
*வெள்ளைக் கோட்டியா விரகினி லொழிமின்*
*இளமையுஞ் செல்வமும் யாக்கையு நிலையா*
*வுள்ளநாள் வரையீ தொல்ல லொழியாது*
*செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்*
*மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென.*

---

* **வீரசோழிய உதாரணச் செய்யுள்.-** அம்பொற் பணைமுகத்துத் திண்கோட் டணிநாகம், வம்புற்றவோடை மலர்ந்தில ங்க-வும்பர், நவம்புரியு நாண்மதியுங் கங்கையு நண்ணி, தவம்புரிவார்க் கின்பந் தரும்.

**சிலப்பதிகாரம்.**—போதித்தானம் புரிந்தறங் கொள்ளவு, மென்வாய்க் கேட்டோ ரிறந்தோ ருண்மையி, னன்னீர்க் கங்கை யாடப்போந்தேன்.

வாடகமாடத் தரிதுயி லமர்ந்தோன், சேடங்கொண்டு சிலர்நின் றேத்தத், தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள், வண்ணச்சேவடி மணிமுடி வைத்தல்.

முடிவளையுடைத்தோன் முதல்வன்சென்னியென், றிடியுடைப் பெருமழைதெய்தா தேகப்.

**மணிமேகலை.**—செங்கதிர்ச் செல்வன் றிருவறம் விளக்குங், கஞ்சைவேட்கைக் கரநதாண்ட, வமரர் முநிவன் அகத்தியன் றனாது.

மலைமீதேறி போதித்த தன்மபாத அன்பின் மிகுதியும், அளவு
படா நீதியும், ஆற்றலளிக்கு நெறியும், கல்லுருகப் பதிந்தக் கமலபாதத்
தால் விளங்கியதுமன்றி அவர் கருணைமிகுதியால் பொழிந்த சடாபார நீரி
ன் பெருக்குமே கங்கைநதிக்காதாரமானதும், நீருருவிக்குத் திறந்தவழியே
அறித்துவாரமென்னும் பெயர்பெற்றதுமாகிய நித்தியதன்மத்தை நிலைக்
கச்செய்து மலையின் சிகரத்திற்கும் அடிவாரத்திற்கும் மத்தியில் பொதி
யை வியாரம் நிருமித்து அகஸ்தியரைப் பிரதம குருவாக வகித்து மெய்ய
றத்தை வளர்க்கச்செய்தார்.

பாலி பாஷையிற் பொதியை யென்பது மலையைத் துளைத்து போ
திய அறைகள் நிருமிப்பதேயாம்.

மலையினின்றிழியும் சலதாரையாம் அறித்துவாரம் ஏற்பட்டதும்
அழியா கங்கைநதி யுண்டாயதும் கற்பாறையிற் கமலபாதம் பதிந்ததுமா
கிய வறச்செயல்கள் தேசமெங்கும் பாலி பகவன் தந்தையாகிய சுத்தோத
யன் அலலது மண்முகவாகெள்ளுஞ் சக்கிரவர்த்திக் கெட்டியவுடன் முத்
திரைமோதிர மீய்ந்து வேவுகர்களை விடுத்து மைந்தனை யழைத்துவரும்
படி ஆவல்கொண்டான்.

சக்கிரவர்த்திவார்த்தையை சிரமேற்கொண்ட வேவுகர்கள் பல நாடு
நகரங்களையும் நதிகளையுங் கடந்து பொதியசாலை யடைந்து கங்காதரனை
யணுகி கமலபாதத்தை வணங்கி ஐயனே! நமது சக்கிரவர்த்தியார் தம்
மெக் காணவேண்டுமென்னும் அவாவின் மிகுதியால் எங்களை யநுப்பியி
ருக்கின்றார் தாம்வந்து தந்தைக்குத் தரிசனந்தரவேண்டுமென்று வேண்டி
நின்றார்கள்.

அவற்றை வினவிய கோபாலன் ஆனந்தமுற்று நமது சக்கிரவர்த்தி
யார் எம்மெக்காணவேண்டிய ஆவலிலிருக்கின்றபடியால் ததாகதன் தடை
யின்றி வருவேனென் றெழுந்து பிச்சாபாத்திரத்தைக் கையிலேந்தி வேவு
கர்களைப் பின்தொடர்ந்தார்.

வேவுகர்கள் சக்கிரவர்த்தித் திருமகன் யாதொரு வாகனமுமின்றி
கால்நடையில் வருவதைக்கண்டு கண்கலங்கி கமலாசனனே, கருணாகரனே
கங்கை ஆதாரனே உமது கமல பாதம் புழுதியில் நடக்கவும் அதனை யாங்
கள் காணவும் என்ன கன்மஞ் செய்தோமோவென்று கலங்கினார்கள்.

கங்கை ஆதாரன் வேவுகர்களைநோக்கி அன்பர்களே! கலங்காதீர்
கள். ஒருகால் ஓடத்தை வண்டி யேற்றிக்கொண்டு செல்லுவதைக் கண்
டிருக்கின்றீர்கள். மற்றொருகால் வண்டியை ஓடமேற்றிக்கொண்டு செல்
லுவதைக் கண்டிருக்கின்றீர்கள், ஆதலின் ததாகதன் வெறுமனே பூமியில்
நடப்பதும், இரதமூர்ந்து பூமியிற் செல்லுவதும் ஒன்றென்றே தெரிந்துக்
கொள்ளுங்கோளென்றுசொல்லிக்கொண்டே நடந்துவருவதை முன் வேவு
கர்களா லறிந்துக்கொண்ட கபிலை நகரவாசிகளும், மகதநாட்டுவாசிகளும்
வீதிகளெங்கும் சுத்தஞ்செய்து வாழைக் கமுகுகள் நட்டு அயகிலைத் தோர
ணங்கள் கட்டி கந்ததூபங்களிட்டு சுன்னச்சாந்துகள்பூசி சக்கிரவர்த்தித்
திருமகன் வருகையைக் கண்ணிமைப்பின்றி எதிர்நோக்கிநின்றார்கள்.

அக்கால் கபிலைநகருட் சென்ற கங்கை ஆதாரன் பொன்னிற காவி
யணிந்துள்ள தன்மசங்கத்தார் தன்னைப்புடைச்சூழ்ந்து நிற்கவும் தானு
மக்காவியை யணிந்து கோபாலங் காத்திலேந்தி குமுத முகமலர்சசியுடன்

ஞானம் பிரகாசிக்க வருவதைக் கண்டவர்கள் யாவரும் குதூகலித்து சக்கிரவர்த்தித் திருமகன் சதானந்தன் வருகின்றார் வருகின்றாரென்றும், வீணையில் வல்ல வேணுகோபாலன் வருகின்றார் வருகின்றாரென்றும், அசோதரையை வெறுத்த அவலோகிதர் வருகின்றார் வருகின்றாரென்றும், குமாரரூபம் குறையாகுணசேகரன் வருகின்றார்வருகின்றாரென்றும், எங்களிதயத்திருளை யகற்றும் இறைவனும் ஞானசூரியன் வருகின்றார் வருகின்றாரென்றும், கமலாசன ஞானக்கண்ணன் வருகின்றார்வருகின்றாரென்றும், சர்ப்பங்கள் தழுவி விளையாடும் சாக்கையமுனிவர் வருகின்றார் வருகின்றாரென்றும், பிறவுயிராம் மானைக்காக்க புலிக்குடம்பைக்கொடுத்த புண்ணியன் வருகின்றார் வருகின்றாரென்றும், கங்கைநதிக் காதார கருணாகரன் வருகின்றார் வருகின்றா ரென் றானந்தக் கூச்சலிட்டு கற்புடைய மாதர்கள் கற்பூர வாலாத்தியேந்தி சாமரை ஆலவட்டங்கள் வீசி கண்ணன்வாழி என்போரும், கமலாசனன் வாழி என்போரும், அண்ணல்வாழி என்போரும், அறவாழியான்வாழி என்போரும், ஆதி வாழி என்போரும், ஆதிநாதன் வாழி என்போருமாக ஆர்ப்பரித்து ஆனந்தகோஷஞ்செய்ய அருகக்கடவுள் அரண்மனைவீதி சேர்ந்தார்.

இத்தகைய கோஷங்களை யுணர்ந்த இறைவன் மண்முகவாகென்னும் சுத்தவிதயச் சக்கிரவர்த்தி இரதமூர்ந்து எதிர்சென்றுதனதுமைந்தன் மஞ்சளாடையணிந்து ஓடேந்தியும், அவரது முகதேஜசும், வடிவும் குன்றாதிருப்பதைக் கண்டு திகைத்து இரதத்தைவிட்டிறங்காது மைந்தன் தானோ வென்று திகைப்பான். அங்கபாக முப்பத்திரண்டு லட்சணங்களும் மென்மேலும் பிரகாசிப்பதைக்கண்டு மைந்தனென்றே யுறுதிகொண்டு இரதத்தைவிட் டிறங்கி அருகிற்சென்று மைந்தனை யணைத்து முத்தமிடலாமென் றெண்ணுவான். உலக ரட்சகனாயினனோ வென்று திகைப்பான். தனது மைந்தன் சித்தார்த்தனென்றே மதிப்பான். மறுத்துந் தேறி ஜெகத்குருவாயினனோ என்று திகைப்பான்.

இத்தகைய திகைப்பகன்று பழையசித்தார்த்தி பெயரகன்ற புத்தரானே யென்று மகிழ்ந்து அவர் கரத்தைப்பற்றி மகனே என்னைவிட்டுச் சென்ற ஏழு வருடமும் என்னை மறந்துநின்ற காரணமென்னே. நீவிர் செங்கோலேந்தவேண்டிய கரத்தில் ஓடேந்திய காரணமென்னோ வென்று கலங்கினன்.



## பதினோராவது

# தந்தைக்கு மைந்தன் குருவாய காதை.



அவரது கலக்கத்தை யுணர்ந்த வண்ணல் உலகத்தில் தோற்றும் உருக்களை மறப்பதுடன் உம்மெயும் மறந்திருக்கலாம். புத்தராகவேண்டிய வழிக்கு இப்பாத்திர மேந்தியு மிருக்கலாமென்றார். அவற்றை வினவிய மண்முகவாகு மைந்தனைநோக்கி குழந்தாய்! இப்பாத்திரமேந்தாது புத்தநிலை யடையலாகாதோ வென்றார்.

செங்கோலேந்துஞ் செருக்கை இப்பாத்திரமே யறுக்குமென்று விடை பகர்ந்தார்.

உமது மூதாதைகள் மரபிற் றோன்றிவரும் சக்கிரவர்த்திகள் செருக்கு மறுமோ வென்றார்.

சக்கிரவர்த்திகளா யிருந்தபோதிலும் அவர்களுக் குண்டாகும் நானென்னுஞ் செருக்கையறுப்பது மிவ்வோடேயாகும். சக்கிரவர்த்திகளா யிருந்தாலும் அவர்களுக்குள்ள தா னென்னும் அகம்பாவத்தைப் போக்குவதும் இவ்வோடேயாகும். ஆதலின் சதா சுகத்தை யடையவேண்டிய ஒவ்வொருவனும் தன்னை யடக்கியாள யிவ்வோட்டைக் கையிலேந்தி அதில் கிடைக்கும் பிச்சை அன்னத்தை யுண்டு பசியாறி அகம்பாவத்தைப் போக்கி இதையத்தை சுத்திகரிக்கவேண்டுமென்று பேசிக்கொண்டே அரண்மனைக்குச் சென்று தந்தையுந் தானுந் தனித்துட்கார்ந்து தாமிதுவரையிலும் செய்துவந்த ஆளுகையில யாது சுகத்தைக் கண்டீரென்றார்.

அவற்றை வினவிய சுத்தோதயன் குழந்தாய்! நீர் அரண்மனையை விட்டகன்று காடேகி உமது முடியை அறுத்துவிட்டீரென்று கேழ்விப்பட்டவுடன் அசோதரையும் தனது முடியை அறுத்தெறிந்துவிட்டாள். நீவிர் பிச்சாபாத்திர மேந்தி அன்னமேற் றுண்கின்றீரென்று கேழ்விப்பட்டவுடன் அசோதரையும் ஒரு ஓடு கையிலேந்தி அதில் அன்னத்தை வாங்கி யுண்டுவருகின்றாள். ஆயினும் உமக்குள்ள யீகையின்குணம் அவளுக்கும் மாறாமல் என்றும் தருமத்தைச் செய்துக்கொண்டு ஆனந்தத்தி லிருக்கின்றாள். யானோ சக்கிரவர்த்தி பீடத்தை வகித்தும் சதா துக்கத்தி லிருக்கின்றேனென்றார்.

அசோதரையானவள் என்னை பிரிந்தும் உம தடக்கத்திலிருந்தும் சருவ சுகத்தை யிழந்தும் தன தீகையின் பெருக்கத்தால் ஆனந்தத்தில் இருக்கின்றா ளென்றீர். தாமோ சக்கிரவர்த்தி பீடத்திருந்து சர்வ அதிகாரமுற்றும் சஞ்சல மாறவில்லையென்பது யாதுகாரணமென்றார்.

எம தரிய குழந்தாய்! அதன்காரணம் யானறியேனே என்றான்.

அவற்றை வினவிய பகவன் சக்கிரவர்த்தியைநோக்கி அரசே! நீர் போட்டவிடத்திற் பொருளைத் தேடுதற் கிடைக்குமேயன்றி போடாதவிடத்திற் றேடுவது பொய்த் தேடலாகும். அதுபோல் துக்கந் தோன்றிய விடத்தி லதன் காரணத்தை விசாரியாது துக்கத்தைப் பெருக்குதல் மேலு மேலுந் துக்கத்திற் காளாக்கும்.

* அதாவது விரும்பிய பொருள்கிட்டாவிடத்து துக்கம் பெருகும். விருப்பமாகும் அவாவின் பெருக்கமே துக்கத்திற்கு மூலமென் றறிந்து அவாவை யறுத்தவிடத்து துக்கம் நீங்கும். தேகத்திற்கு நரை திரை யுண்டாவது துக்கம். அதற்கு மூலம் யாதென் றாராயுங்கால் தேகத்தில் நிகழுங் காம வெகுளி மயக்கங்களென்றே தெளிந்து அவைகளைத் தடுத்த விடத்து நரை திரையின் துக்கம் நீங்கும்.

மனைவி மக்களைப் பிரிதலும துக்கம், தனது திரவியத்தை யிழுக்க லுந் துக்கம், தனது நாடு நகரை பறிகொடுத்தலுந் துக்கம். அவைகளு க்கு மூலம் யாதென்று ஆராயுங்கால் மனைவி மக்கள்மீதுள்ள பற்றுக்களே மூலமாகும். திரவியத்தின்மீதுள்ள அவாவே மூலமாகும். நாடு நகரின் மீதுள்ளப் பெரும் ஆசையே மூலமென்றறிந்து பற்றுக்களையும், பேராசை யையும் அகற்றி மனைவிமக்களுந் தோன்றி கடிகையிற் கெடுவர். தானிய சம்பத்தும் தன சம்பத்துந் தோன்றி கடிகையிற் கெடும். நாடு நகரங்க ளும் தோன்றி கடிகையிற கெடுமென் றுணர்ந்து தெளிந்து பற்றற்றவிடத் தே துக்கம் நீங்கும்.

இளமெய் நீங்கி முதுமெய் தோற்றுங்காலத்து துக்கமுண்டாகும். அத்தகைய துக்கத்திற்கு மூலம் யாதென் றாராயுங்கால் முதுமெய் வருமெ ன்றுணராது இளமெய் அவாவினின்று ஏது சுகமுமற்று இந்திரியங்கள் கலங்குங்காலத்து முதுமெய் வந்ததென்று துக்கிக்கின்றார்கள்.

இளமெய் என்னும் வாக்கியம் எப்போது இத்தேகத்திற் குண்டா யதோ அப்போதே முதுமெய் யென்னும் வாக்கியம் அதற்கு எதிர்மொ ழியா யுண்டென்பதை அறிந்துக்கொள்ளல் வேண்டும். அவ்வகை யறிந்த விடத்து இளமெயும், முதுமெயும் தேகதோற்றக் கெடுதியின் தொடர்பெ ன்றுணர்ந்து அதனவாவை யறுத்தவிடத்து துக்கம் நீங்கும்.

தேகத்துக்குரிய பிணி மூப்புச் சாக்காடென்னும் துக்கத்தையும், அதனுற்பவத்தையுங் காணாது சதா அவாவையும், சதா இன்பத்தையும் பெருக்கி நிற்றலால் சதா துக்கத்தில் வருந்துகின்றீர்.

துக்கந் தோன்றியவிடத்து அத னுற்பவத்தை நோக்குவீரேல் அங்கு பற்றிய அவா விடுத்து அதனா லுண்டாய துக்கம நீங்கும். அது போல மற்றுந் துக்கோற்பவங்களை யுணர்ந்து அதனதன் பற்றுக்களை யறு த்துக்கொண்டே வருவீராயின் சதா துக்கம் நீங்கி சதா சுகமடைவீ ரென்றார்.

மைந்தன் அமுதவாக்கிற் பிறந்த ஞானபோதத்தைக் கேட்ட சுத் தோதயச் சக்கிரவர்த்தி அகமகிழ்ந்து பகவன்முன் எழுந்துநின்று புத்த ராம் மெய்யனை யான் புத்திரனைப் பெறற பாக்கியமே பாக்கியமெனறு

---

* **சீவகசிந்தாமணி.**—வேட்டன பெறாமை துன்பம் விழைநரைப் பிரிதறுன்பம், மோட்டெழி லிளமெய் நீங்க மூப்பு வந் தடைத றுன்பம், மேட்டெழுத்த றிதலின்றி யெள்ளப்ப டுள்ளிட் டெல்லாஞ், சூட்டணிந் திலங்கும் வேலோய் துன்பமே மாந்தர்க்கென்றான்.

ஆனந்தக்கண்ணீர் பெருக இருகரங்கூப்பி என்னை துக்கசாகரத்தினின்று கரையேற்றிய ஞானவள்ளலே! துக்கவிருளில் திகைத்துநின்ற வெனக்கு ஞானசுடர்விளக்கேற்றிய சந்திரனே! உம்மை முன்பு பார்த்தபோது காவியாடையாலும், கரபோலாலும் கலங்கினேன். தற்போது தமது அமுத வாக்கின் மிகுதியால் பொன்னுடையையும், திருவோட்டையும் புகழ்ந்தேன்.

இப் பொன்னுடையே புவனதாரமென்றும், திருவோடே சித்தசுத்தியென்றும் தெரிந்துக்கொண்டேன். உமது துறவினுலுண்டாய அன்பின் மிகுதியையும், அளவுபடா ஞானத்தையும் கண்டேன. உலகையும் உமது சத்தியதன்மத்தை விளக்கி என்னை யாட்கொள்ள வேண்டுமென்றான்.

புத்தபிரான் தனது * தந்தையாகிய சுத்தோதயச் சக்கிரவர்த்திக்கு குருவாக விளங்கினதுகொண்டு "தகப்பன்சுவாமி" என்றும், "பிதாவிதாதா" வென்றும் அழைக்கலானார்கள்.

ததாகதர் தனதுதந்தைக்கு ஞானோபதேசஞ்செய்துவிட்டு அசோதரை வாசஞ்செய்யு மிடத்தை நாடி வாயற்படியில நின்று ததாகதன் வரலாமோ வென்றார். தேவிகாலோத்திரம் தடையின்றி வரலாமென்னும் மிருதுவாக் கெழும்பிற்று. அதனைவினவிய பகவன் அறைக்குட் சென்று அசோதரையை நோக்கி அம்மே! சுகமோ வென்றார். அசோதரையோ நமதையன் பாதத்தை இருகப் பற்றிக்கொண்டு ஐயனே! உமது கருணை நோக்கத்தால் இம்மட்டும் சுகமே யென்றாள்.

அம்மே! யாதொரு துக்கமும் இல்லையோவென்றார்.

ஐயே! உம்மைப் பிரிந்ததுக்கம் ஒன்றேயன்றி வேறுதுக்கம் யாதுமறியே னென்றாள்.

ததாகதர் சகலருக்குந் தோற்றி நமக்குத் தோற்றாம லிருக்கின்றாரேயென்று துக்கித்தாயா அன்றேல் ததாகதர் தோற்றமே மறைந்துவிட்டதென்று துக்கித்தாயா வென்றார்,

உலகெங்கும் சத்தியதருமமா மமுதத்தை யூட்டிவரு மையன் உடலுயிர் பொருந்தி வாழ்ந்த அடியாளுக்கு அப்பேரின்ப வமுதை யூட்டாது பிரிந்துநின்ற குறையே பெருந்துக்கத்துலாழ்த்தியதென்றாள்.

அம்மே! நீவிர் தோன்றி கெடும் சிற்றின்பமாம் உலகவிச்சையை ஆசிக்கின்றாயா அன்றேல் என்றுங் கெடாமல் நித்தியமாம் பேரின்ப சதாசுகத்தைத் தெரிந்துகொள்ள ஆசிக்கின்றாயா வென்றார்.

ஐயனே! சதாசுக நித்தியதன்மமாம் பேரின்பத்தையேதெரிந்துகொள்ள ஆசிக்கின்றேனென்றாள்.

## அசோதரை இந்திரர் அரணியாதல்.

### காசிக்கலம்பகம்.

இல்லானை முப்பத்திரண்டறமுஞ் செய்திருப்ப
செல்லார் பொழிற்காசிச் செலவனார் - மெல்ல
பாகின்ற புன்கை பருவகல் கொண்டைய
பிரக்கன்றவா றறிகிலேன்.

* பின்கலை நிகண்டு. — பிரமன்மேதினி சிறந்தோன் பிதாமகன் பிதாவிதாதா, சிரந்தரன் கமலயோனி நீகில மனந்தபாதன், திரமிக வுடைய பூதன் தேவர்கள் முதல்வன் சாது, வரனறன் முதலாசான் மாதவன் நாரசிம்மன்.

அம்மே! நீவிரிதுவரையுஞ் செய்துவருந்தருமத்தை உமது மணாளன் அரண்மனை வந்து சேரவேண்டும், சுகத்துடன் வாழவேண்டுமென்று ஓர் பலனைக்கருதி செய்துவருகின்றீரா அன்றேல் ஓர் பிரிதி பலனையும் கருதாமற் செய்துவருகின்றீரா வென்றார்.

அவ்வாக்கியத்தைக் கேட்ட அசோதரைத் திடுக்கிட்டு நமதுள்ளத்திற் கருதிசெய்யுஞ் செயலை யாவருக்கும் வெளியிட்டதில்லையே. அத்தகைய வந்தரங்க நோக்கத்தையும் உள்ள எண்ணத்தையும் அறிந்துகொண்ட நமதையன் சகலத்தையும் அறிந்தவர், சகலத்தையும் அறிபவர், சகலத்தையும் அறிவோரென்றெண்ணி மீண்டும் ஐயன் பாதத்தைப்பற்றி என துள்ளத்தை யுணர்ந்த மெய்யனே! உமது வரவைக்கோறுமோர் பலனைக் கருதியே என் தருமத்தைச் செய்துவந்தேனென்றாள்.

அம்மே! நீவிர் செய்துவந்த தருமம் ஓர்பலனைக்கருதி செய்தவை நிஷ்ப்பலனேயாகும். அதாவது, நீவிர் தருமபாதையில் நடக்கவேண்டின் நான்கு பாதத்தில் நடக்கல்வேண்டும். முதலாவது (சீலபாதம்.) இரண்டாவது (அருட்பாதம்.) மூன்றாவது (மங்கலபாதம்.) நான்காவது (சுபபாதமேயாம்.)

இவற்றுள் முதலாவது பொய்சொல்லாமெய், களவு செய்யாமெய், கொலை செய்யாமெய், பரபுருஷனையேனும் பரஸ்திரீயையேனும் இச்சியாமெய், மயக்க வஸ்துக்களை யருந்தாமெய் ஆகிய சுத்ததேகியாக நின்றீயும் தருமமே (சீலபாத) மாகும்.

இரண்டாவது. தன் பிள்ளை தன்பந்துவின்மீதுவைத்துள்ள அன்புபோல் மற்ற மக்கள்மீது மன்புபாராட்டல், தனக்குள் அடங்கியுள்ள சீவராசிகளின்மீதுள்ள அன்புபோல் மற்றுஞ் சருவ சீவராசிகளின்மீதும் அன்பு பாராட்டி யீயுந் தருமமே (அருட்பாத) மாகும்.

மூன்றாவது. உம்மிடத்தில்வந்து தருமம்பெறுமக்கள் எக்காலும் ஒருவர் ஈகையைநாடாது ஆனந்தமாக வாழவேண்டுமென்று முகமலர்ந்து ஆசிகூறிச் செய்யுந் தருமமே (மங்கலபாத) மாகும்.

நான்காவது, தன் சுகம் கெடினும் அன்னியர் சுகம் கெடாத வழிகளைப் போதித்தும், அவர்களையாதரித்தும் யீயுந்தருமமே (சுபபாத) மாகும்.

இத்தகைய நான்கு பாதத்தில் நடத்தலே சத்திய தன்ம மார்க்கம் ஆகுமென்றார்.

அவற்றை வினவிய அசோதரைநமதையனை நோக்கி கபிலைப்பதியே, கமலாசனனே, கருணை வள்ளலே, கங்கையாதரனே! என்னை மீண்டும் யானைவடிமை யாக்கிக்கொண்ட வருளிறைவே! உமது அளவுபடா சத்திய தன்மபாதத்தை அடியாளுக்குத் தெளிவுற வுணர்த்தல் வேண்டுமென்று வணங்கினாள்.

அம்மே! முற்கூறிய தன்மபாதத்தில் நடக்குங்கால் நூதன வஸ்துவைக் காணுமிடத்து ஆசைக்கொள்ளுதலும், கொடூர ஜெந்துக்களைக் காணுமிடத்து பயங்கொள்ளுதலும், தனக்கடங்கிய ஜெந்துக்களைக்காணுமிடத்து அகங்கரித்தலுமாகியச் செயல்களைத் தவிர்த்து மனையாள் மகவென்னும் பாசபந்தங்களை யகற்றி அன்பையோ ருருவாக்கி அறிவை ஆடையாக வளைதல்வேண்டும்.

சத்தியதன்மத்தில் நிலைப்பதற்கு ஒழுக்கமும் அறிவின் பெருக்கமுமே மூலமாகும்.

அம்மூலாதாரவினால் உனக்குள்ளெழும் காம, வெகுளி, மயக்கமாம் விஷயங்களைச் சேரவிடாமலும், தங்கவிடாமலு மகற்றி உனக்குள்ளெழும் சாந்தம், யீகை, அன்பென்னும் அமுதத்தைப் பெருக்கிக்கொண்டே வருவாயாயின் இதயசுத்தமாம் மனக்களங்கமற்று அலையற்ற கடலாம் சுகவாரி நிலையினிற்பாய்.

அங்ஙனமின்றி மனதின்கண் இராகத் துவேஷ மோகக் களங்கங்களாம் விஷம் கிஞ்சித்திருக்குமாயின் சாந்தம், யீகை, அன்பென்னும் அமுதமும் விஷமாகிப்போம்.

அமுதத்தைப் பெருக்கி அருட்பெறவேண்டுமாயின் காம வெகுளி மயக்கங்களாலெழும் பாசபந்த பற்றுக்களை யறுத்து இதயத்தை சுத்தி செய்தல்வேண்டும். இதயசுத்தி யுண்டாய் மனமணிப்பிரகாசிக்குமாயின் நித்திரையை ஜெயித்து இரவுபகலற்ற நிருவாணம் பெறுவாய். அக்கால் உம்மெக்காணும் சருவ விவேகிகளும் நான்கு தன்மபாதத்தால் நடக்கும் தருமதேவதையெனக் கொண்டாடுவார்கள். விவேக பெருக்கை நாடும் மேலோர் சத்தியதன்மமார்க்கத்தை நான்கு தன்மபாதத்தால்நடந்து அவர்களும் பிறவி சமுத்திரத்தைக் கடப்பார்களென் றோதி அம்மன் அஞ்ஞானவிருளை யகற்றிவிட்டு தனது சங்கத்தோருடன் கலந்து பிக்சாபாத்திரமேந்தி அரசன் வட்டித்த அன்னத்தைப் புசித்து அங்கோர் சோலையிற் றங்கினார்.

அசோதரையம்மை அண்ணல்பால் உபநயனமாம் ஞானவிழிப்பெற்றும் சக்கிரவர்த்தி மருமகளென்னும் மமதையும், சக்கிரவர்த்தித் திருமகன் மனைவியென்னுஞ் செருக்குந் தன்னைவிட்டகலாமலிருந்ததுகொண்டு நிதானித்து தன தேகமைந்தன் இராகுலனை உப்பரிகைமீ தழைத்துப் போய் சன்னலின் வழியாய் பகவன் வீற்றிருக்குஞ் சோலையைக் காண்பித்து அப்பா உன தரியதந்தையாகிய நரசிம்மம் அதோவீற்றிருக்கின்றது பார். நீ யவரிடஞ்சென்று அவர் சேகரித்துவைத்திருக்கும் அழியா நிதியில் உனக்கு சேரவேண்டிய பாகத்தைப் பெற்றுக்கொள்ளலாமென் றனுப்பிவிட்டு தான் அணிந்துள்ள ஆடையுடன் *பிச்சாபாத்திரங்கையிலேந்தி ஆண்மனைவீதியிற் சென்று அன்னமேற்றுப் புசித்து ஆனந்தசாதனத்திலிருந்தாள்.

சோலையிற் றங்கியிருந்த பகவன் அசோதரைத் தன்னைப்போல் அசம்பாவமற்று ஓடேந்தி வெளிவந்த சங்கதியை அறிந் தானந்தமுற்று அவ்விடத்துக் காட்டிற்கும் நாட்டிற்கும் மத்தியில் பெண்களாம் பிக்குணிகளுக்கென் றோர் வியாரமும், புருஷர்களாம் பிக்ஷுக்களுக்கோர் வியாரமுங் கட்டும்படிச் செய்து சங்கத்தின் ஞானசாதகர்களுக்கு வேண்டிய வுதவிபுரியத்தக்க வேலையாக்களையுஞ் செய்துவைத்தார்.

மாதுரு வாக்கின்படி இராகுலன் தனது பிதுருவாகிய ஓடேந்தும் பிஞ்சகனிடஞ்சென்று அவர் காத்தை யிருகப் பற்றிக்கொண்டு தாய

---

* சீவகசிந்தாமணி.

அதேநிலைபெற்ற பிக்குணிகள் செயல்.

அம்பொற் கலத்துளடிபாலமர்ந் துண்ணு மரிவையர்தோ, வெம்பிப்பசி நலிய வெவ்வினையின் வேறாயோரகல் கையேந்தி, கொம்பிற்கொள வொசிந்து பிச்சையெனக் கூறிநிற்பாட் கண்டு, நம்பன்மின் செல்வ நமரங்கா ணல்லறமே நினைமின் கண்டீர்.

னே! நீவிர் எமக்கு சேரவேண்டிய பாகத்தை யருளல்வேண்டு மென்றான்.

சங்கங்களுக்கு அறத்தை சிறப்புஞ் சங்கறன் தனதுகரத்தை விடாமற் பற்றியுள்ள சிறுவனின் அதி தீவிர பக்குவத்தையுணர்ந்து இவன் நம்மை விடாகண்டனென்றறிந்து சிரோமங் கழித்து மாவுரியாம் மஞ்சளாடை யீய்ந்து வற்றாத வோடு காத்தளித்து தனது சங்கத்திற் சேர்த்து கண்டுபடிக்குங் கல்வியாம் கலைநூல் விருத்தியில் விடுத்தார்.

அசோதரை யம்மனோ இராகத் துவேஷ மோகங்களா லெழும் உள்ளக் களங்கங்கள் யாவையும் பற்றறுத்து புறவிழி பார்வைபோக்கி உள்விழி பார்வையை நோக்கி தூங்காமற்றூங்கி இந்திரியத்தை வென்று நிருவாணநிலை பெற்றாள்.

" இந்தியத்தை வென்றான் தொடர்பாட்டோ டாரம்ப
முந்தி துறந்தான் முநி."

என்பதாம் ஐயிந்திரியங்களை வென்ற வல்லபங்கொண்டு சித்தார்த்தரை ஐந்திரர், இந்திரரென்று வழங்கிவந்ததுபோல் அவர் மனைவி அசோதரையம்மனும் ஐயிந்திரியங்களை யடக்கிய வல்லபங்கண்டு இந்திரர்-ஆணி இந்திராணியென் றழைக்கலானார்கள்.

சித்தார்த்தரது சித்திரகூடத்தில் * அசோதரையாம் இந்திராணிக்குத் தோழிப்பெண்களாயிருந்த அரம்பை, ஊர்வசி, மேனகை, திலோர்த்தமை என்னும் நால்வருள் அரம்பையும், ஊர்வசியும் இல்லறதன்மத்தைநாடி புத்திரசந்தானவிருத்தியி லாழ்ந்துவிட்டார்கள். மேனகையும், திலோர்த்தமையும் துறவற தன்மத்தை நாடி பிக்குணிகள் சங்கத்திற் சேர்ந்து இந்திராணிக்கு அங்குந் தோழிகளாய் ஆனந்த சாதனத்தி லிருந்துவிட்டார்கள்.

ததாகதர் தனது தந்தைக்கே குருவாகத் தோன்றி ஞானோபதேசஞ் செய்ததுமன்றி மனைவிமைந்தனுக்கும் அருளூட்டி தங்களை விட்டுத் துறந்தனரே என்னுந் துக்கத்தை யோட்டி சதானந்த நிலையி லிருத்திவிட்டார்.

இத்தகைய காலத்தில் ஓர்நாள் அவ்விடமுள்ள நூதன வியாரத்துள்ள சங்கத்தோருக்கு சற்குருநாதனவர் சத்தியதன்மத்தை விளக்கிவருங்கால் மனைவிமைந்த ரிருவரும் அவ்விடம் வந்து நின்றார்கள்.

அவர்கள் அந்தர அங்கமறியா சங்கத்தோர்கள் குமாரதேவனுக்கும் குமாரதேவிக்கும் இன்பமில்லாமற்போமோவென்று தங்களுக்குள் தாங்களே சிந்தித்துக்கொண்டார்கள்.

---

* அருங்கலைச்செப்பு. — இந்திரர்க்காணியா யேற்ற வசோதரையாள், சிந்தைத் தெளிந்தாள் சிவம்.

முந்தியார் தோழிகள் மூவிந்தா ரிருவர், பிந்தியோ ரில்லறத்தாளர்.

மேனகையோடு மூற்றத் திலோர்த்தமை, போனக வம்மையாளர்.

ஆயவரம்பையும் ஊர்வசியேயிவர், தோயுமில் லாழ்ந்தனர் பால்,

நிகழ்காலத்திரங்கல். — தானடைந்த பேற்றை தந்தைக்கருளியலால், மானனையாட் கீய்ந்த மோன மதிசயமே.

மாமனையாளோடு மைந்தன் வழிசிறப்ப, கோமனையோர் யாவுங் குளிர்ந்த ததிசயமே.

தலத்தோர் தார்வேந்தன் தலமும் விடுத்ததென், புலத்தாரோ டோடு தரித்த ததிசயமே.

சங்கத்தோர் அந்தரங்க எண்ணத்தை இந்திராணி யறிந்துகொண்டு தகப்பன் மடியில் தனது பெண்குழந்தை சென்று உட்கார்ந்துகொள்ளுவதுபோல் யாதொருமனக்களங்கமின்றிநெருங்கி இந்திராம் புத்தபிரான் துடைமீ துட்கார்ந்துகொண்டாள்.

சங்கத்தோர் அழுக்காறு மெண்ணத்தையும் அவற்றை யகமுகத் தறிந்த யசோதரையானவள் தனது * துடைமீதவர் துட்கார்ந்த களங்க மற்றச் செயலையுமுணர்ந்த நமதையன் குதூகலித்து உச்சமுருகி அம்மே! சுகமோவென்றார்.

அவற்றை வினவியதாய் அருகனைநோக்கி தாதா உமது கருணையால் ஞானவிழித் திறந்ததுமுதல் துக்கமென்பதுயாதென்றும், சுகமென்பது யாதென்றும் அடியாள் அறியேனே யென்றாள்.

ததாகதர் சங்கத்தோரை நோக்கி அன்பர்களே! உங்கள் சங்கத்தாள் சுகதுக்கம் இரண்டும் அறியேனென்கின்றாளே இஃது நியாயமோ வென்றார்.

சங்கத்தோருள் தலைமெயான ஆனந்தனென்பவர் பகவனைநோக்கி ஜகத்திரட்சக! எமதம்மனின் அந்தர அங்கமாம் உண்மெய்ச்செயலும், பயிர அங்கமாம் புறமெய்ச்செயலும் யாங்களறியோம். எங்கட் பேதை எண்ணத்தால் குமாரக்கடவுளுக்கும், குமாரதேவிக்கும் இன்பமில்லாமற் போமோவென் றெண்ணினோம். அவ்வெண்ணத்தை யறிந்துகொண்ட வெமது தாய் அவ்வின்பமற்றவளென்பதை ரூபிக்க தந்தைமடியில் மகள் வந்து உட்காருவதுபோல் யாதொரு மனக்களங்கமுமின்றி தமதுமடியில் வந்து உட்கார்ந்துகொண்டார்கள்.

தாங்களோ தேவியின் களங்கமற்ற வெண்ணத்தையும் எங்கள் பேதைகுணத்தா லெழுவிய களங்கத்தையு முணர்ந்து மகளைத் தந்தையானவர் உச்சமுருகி யாதொரு களங்கமுமின்றி பயிரங்க மடியில் உட்கார வைத்துக்கொண்டீர்.

ஆதலின் தமது அடியார்களின் பேதைகுணத்தா லெழுவிய களங்கை க்ஷமித்து ஆட்கொள்ளவேண்டுமென் றடிபணிந்தார்கள்.

அவர்கள் † பேதைகுணங்களை யறிந்த பெம்மான் சங்கத்தவர்களை நோக்கி அன்பர்களே! உங்கட் களங்கம் அகலட்டும். அம்மனுக்குள்ள சுகதுக்கம் இரண்டுமற்ற நிலையை அறிந்துகொண்டீர்களோவென்றார்.

சங்கத்தோர்கள் சங்க அறனைநோக்கி ஐயனே! தாம் ஊட்டியுள்ள ஞான அமுதில் நாமரூபம் இரண்டற்றபோது நான் நீ என்னும் பின்னபாவம் இரண்டு மறுமென்றும், வேண்டுதல் வேண்டாமெ யிரண்டு மறுமென்றும், சுகதுக்கம் இரண்டு மறுமென்றும் ஊட்டியிருக்கின்றீர்.

தங்களடியார்கள் அவற்றை யுட்கொள்ளாது உலக சிற்றின்பமாம் விஷத்தை யுண்டுவருகிறபடியால் சுகதுக்கமற்ற விடம் விளங்காமற்போ

---

* அருங்கலச்செப்பு.—துணைவியாள் தன்னை துடைமீ திருத்தி, கனஞானமூட்டுங் கதிர்.

சங்கத்தோ ருள்ளச் சழக்கையறிந்தா ளெங்கடாய் வீற்றுஞ் மேற்கால்.

† சீவகசிந்தாமணி. — நிலவிலகி யுயிரோம்பி நிம்ந்தொளிர்த்து பசிபகைநோ, யுலகமிருள் கெடவிழிக்கு மொண்மணியறவாழி, யலகையிலாக் குணக்கடலை யகல் ஞானவரம்பனை, விலையிலா மணிமுடியான் விண்வியப்ப விறைஞ்சினான்.

னோம். ஆகலின் இனிமேனும் யாங்கள் விஷத்தை யுண்டு கண்டங்கறுத்துக் காலனுக் காளாகாமல் ஞானவாருதியைக்கடைந்து அமுதளிக்கவேண்டுமென்றார்கள்.

அன்பர்களே! உங்கள் உள்ளம் விரிந்தவிடத்து உலகும் உள்ளம் களங்கமற்று அடங்கியவிடத்து நிருவாணமுந் தோற்றுமென்பதை விளக்கியிருக்கின்றோம்.

அத்தகைய விளக்கத்தால் உங்கள் உள்ளமோ ஞானவாருதியாகவும், * வலயிட சுவாசமே கயிறாகவும், புருவமத்திய சுழிமுனையே மத்தாகவுமூன்றிச் சதாவிழிப்பாற் கடையவேண்டியவர்களும் நீங்களே. அக்காலத்திலெழும் காமவெகுளி மயக்கங்களாம் விஷங்களனைத்தும் அகற்றி அன்பு, யீகை, சாந்தமென்னும் அமுதத்தைத் திரட்டவேண்டியவர்களும் நீங்களே. அவ்வகைத் திரட்டிய வமுதுண்டு திரிகாலமுமுணர்ந்து மரணத்தைஜெயித்து பிறப்பையறுத்துக்கொள்ளவேண்டியவர்களும் † நீங்களே யாதலின் உங்கள் உள்ளஞான வாருதியை நீங்களே கடைந்து அமுதுண்ணவேண்டுமென்று போதித்து அந்தந்த சங்கத்தோர்களை அங்கங்கு தங்கி சாதனங்களைப் பூர்த்திச்செய்யுங்களென்று விடுத்து ஆரணத்திற் சென்று;

## மூன்றுமுறை விம்பாசாரன் தெரிசனமும் நூதன வியார மேற்படலும்.

ஓர் மரத்தடியில் வீற்றிருப்பதை வேவுகர்களாலும், மற்றுமுள்ளவர்களாலும், விம்பசாரவரச னறிந்து குலகுரு வந்திருக்கின்றாரென்னும் குதூகலத்திலெழுந்து தனது பரிவாரங்களுடன் வந்து தற்பரனை வணங்கி ததாகதா புசிப்புக் கெழுந்தருளவேண்டுமென்று கோறினான்.

பிஞ்சகன் விம்பாசாரன் கோறிக்கைக்கிணங்கி எழுந்துவருங்கால் ஐயன் சத்தியதன்மத்தையும் அதன் பலனையும் முன்பே அறிந்துள்ளவனாதலின் பிம்பாசாரன் தன்னைச் சூழ்ந்துள்ள மக்களை நோக்கி;

அன்பர்களே! இதோ வெழுந்தருளிய பகவன்,

"எல்லா முணர்ந்தவர், எண்குண மமைந்தவர்
அருளாழி பயந்தவர், அறவாழி யளித்தவர்
மருளாழி துறந்தவர், மறையாழி புரிந்தவர்
மாதவருள் மாதவர், வானவரில் வானவர்
போதனரிற் போதனர், புண்ணியரில் புண்ணியர்
ஆதிபு மிவரே, அமலனு மிவரே

* காக்கைபாடியம்.—பாலகக் கடலைப ழுகக் கலக்கி, மேலைச்சுழிமுனை கயிறை யிழுத்து, சீலவமுதைச் சேர்த்து நிறப்பி, ஆலமர்ந்தோனல் லடிதொழுவீரே.

நிகழ்காலத்திரங்கல்.—உள்ளக்கடலை கடைந்தே யுறமகற்றி, தெள்ளமுதமீய்ந்த தேற்ற லதிசயமே.

† அறநெறிச்சாரம்.—தானே தனக்குப் பகைவனு நட்டாளும், தானே தனக்கு மறுமையு மிம்மையும், தானேதான் செய்த வினைப்பயன் றுய்த்தலால், தானே தனக்குக் கரி.

நீதியு மிவரே, நிறந்தா ரிவரே
சோதியு மிவரே, துல்லிய ரிவரே
இறைவனு மிவரே, துறைவனு மிவரே
அறிவனு மிவரே, அனகனு மிவரே
திருவுரு மிவரே, செல்வனு மிவரே
என வேற்றுங்கள் போற்றுங்கள்
என்றென்றும் வாழ்த்துங்கள்."

என்று சொல்லிக்கொண்டே அரண்மனைக்குச்சென்று ஐயனுக்கு ஆசனமளித்து மனையோரை வணங்கச்செய்து·புசிப்பளித்து பகவன்புசித்தபின் அவ ரருகில் உட்கார்ந்த விம்பாசாரன் போதிநாதனை வணங்கி ஐயனே துறவிகளாகும் சங்கத்தோர் வசிக்கத்தக்கதும், சுத்தமானதும், பகவன் சிலநாள்தங்கியிருக்கக்கூடியதும், பகலில்ஜனசஞ்சாரம் அதிகமில்லாததும், கூச்சலற்றதும், மிக்க வமைதிபெற்றதும்;

பகவனை தெரிசனஞ்செய்ய வருத்துப்போக்கா யிருப்பவர்களுக்கு வழி சுகமானதும், நாட்டிற்கும், நகரத்திற்கும் மத்தியிலுள்ளதுமாகிய வேணுவன மென்னும் மூங்கில் தோப்பை வியாரத்திற் களிக்கின்றேன் தேவர் பெற்றுக்கொள்ளவேண்டுமென்று வணங்கினன்.

அரசன் திரிகரண சுத்தியா யளிக்குந் தானத்தை அருகனேற்று அவ்விடத்தில் வேணுவனவியாரமென்னும் ஓர் மடம் கட்டுவித்து சங்கத்தோருக் களிக்கச்செய்து தானு மம்மூங்கிற் றோப்பிற் சிலகாலந் தங்கியிருந்தார். அதனை வேணுவன வியாரமென் றழைக்கலானார்கள்.

பரத்துவாசனென்னும் பெரியோன் ஒருவர் மகதப்பிரான் வேணுவனவியாரத்திற் றங்கியுள்ளா ரென்று கேழ்வியுற்று அவ்விடஞ்சென்று அருகனை வணங்கி துலவி லுட்கார்ந்துகொண்டு நமக்குத் தோன்றியுள்ள வியாதியின்னதென்றும், அஃது நீங்கும்வழி யீதென்றும் ஏதோர் தன்மங் கூறுவரோ கூறரோவென் றெண்ணிக்கொண்டிருந்தார்.

